




கடவுள் துணை.

# விட்டிலாபுரத்தலப்புராணம்.

## விநாயகக்கடவுள்.

### காப்பு.

பொருட்டரும்பூவினிற் கொழுமைமிகுந்தொளிரும் விட்டிலாபுரத் துட்டங்கி
யருட்டருமெய்த் திருவானற்பெருவ முதச்சரிதையு வந்தறையவண்ணத்
தெருட்டருமும் மதப்பகடுமுகக்கடவுடிருக்கை மறைச்செவ்வாயுந்தும்
புருட்டருமாலயனுமுளெண்பொற்பரி புரப்பதமும் போற்றிவாழ்வாம் (க)

### சிவபெருமான்

ஒருமானைக்கரத்திருத்தி யொருமானைச்சிரத்திருத்தியுசிதன் றந்த
திருமானைப்புறத்திருத்தி மருமானைக்கரித்திருத்திச் சிறுமானுவ்விற்
கருமானைப்பொருத்திபகல் புரிமானைச்சீமானைக் கயிலைமானைப்
பெருமானைப்பிரமனரிகாணுகழலானைப்பேணிவாழ்வாம் (௨)

### சத்தி

மண்ணிறைந்தமன்னரணர்மாதவர்
விண்ணிறைந்தமுத்தேவருமெச்சவர்
தெண்ணிறைந்தவரங்குமெய்யாகவே
கண்ணிறைந்தவுமைபதங்காண்டனம் (௩)

### திருமால்

சோனந்தபுயத்தானைச் சேயிவனைக்கரத்தானை சிறந்தகண்ணானை
மோனந்தயத்தானை மேதினியைப்புரத்தானை வேதத்தானைக்
கானந்தசடத்தானைக் ககபதிவாகனத்தானைக் கமலையானைப்
பாரனந்தபதத்தானைப் பாற்கடலிற்றுயின்றானைப் பணிகுவோமே (௪)

### திருமகள்

போராழியேழிலெழிற்பேராழி தனிலுதித்துப் பிணைவாய்த்தேனை
யோராழிவலையெடுத்தவிண்டாளி தனக்குதவியின்புமெய்தி
யோராழித்திகிரியனேரொளிச் சிலம்புக்கலகலென்னவுவந்துவந்தம்
பாராழிதனைப்புரத்தாள் பதுமையினற்பாதமதைப்பணிந்து வாழ்வாம் (௫)

### சபாபதி

தாயாகித்துணைதயெடு குருவாகித்தேவாகித்தாரமாகிச் [கும்
சேயாகியுறவாகிச் செழுஞ்சுடரினொளிபோலச் செறிந்தெங்கெங்

கந்தப்பாகண்ணிபுனைப்பன்னிருபுயாவயிலாகடம்பாவென்ன
கந்தப்பாநிருந்தருளவந்தப்பா நின்னிருபொற்கழல்துதிப்பாம் (௰)

### திருநந்திதேவர்

சிந்தடியைப்புனைந்தபடிச் சீரடியைத்தரித்தவலசேடன்கூறுஞ்
சிந்தடியைப்புனைந்தவரன் சேவடியைக்கயிலைபெறச் செருக்காயாங்கு
வந்தடியைப்பணியடியாரெழுகலிமானிருகாலுமருவியேத்துஞ்
சந்தடியைத்தவிர்த்தருளுந் திருநந்திதேவர் பதந்தலைமேற்கொள்வாம் (௰க)

### கலைமகள்

தாயானைச்சவியானைத்தலையமிருந்த மனத்தானைச்சங்கத்தானை
மாயானைழைத்தரித்தானை மருக்கமழுந்தனத்தானைமகரந்தச்சொல்
வாயானைத்தலையானை வையமெங்குநிறைந்தானை மறைவல்லானைத்
தூயானைத்துணையானை யென்னுவிலுறை பவனைத்துதிசெய்வோமே (௰உ)

### குருவணக்கம்.

மருகல்லகவிபுகலவருதிதருவாணிபுகழ்மறைவிற்பன்னர்
தருகல்லகவிகளுக்கோர் தலைவனிறை நிருபர்முனந்தசத்தின்மீது
வருகல்லயினோ வேள்வரத்துதித்த சிங்கம்விலைமதியாத்தங்கந்.
திருநெல்லைக்கந்தசுவாமிக் கவிஞன்சேவடிகள் சென்னிசேர்ப்பாம் (௰ங)

### குருவணக்கம்

மூரசங்களதிரமணிச்சிவிகையெழக்கட்டியமுன் முழங்கவாகாய்
வரசங்கப்புலவரலை நிலைபுரக்குமதிபரெலாமதிக்கநற்றே
னிரசங்கவெனக்கவிநாலட்டாவதான மெலாமெடுத்தாளும்
பிரசங்கமழைபொழியுஞ் சாந்தப்புநாவலன்றாள் பேணிவாழ்வாம் (௰ச)

நூலியற்றுதற்குக்காரணம்

மண்டுதிரைக்கடலுடுத்த மண்ணிறனவைசியர்தங் மரபிற்சீர்த்தி
கொண்டவேளர்வாழவந்தான் வரத்துதித்து முத்தரசகுலநாதன்றாட்
டொண்டுசெய்மன்பனிராமசுவாமி வேண்டியுறச்சொன்னனெம்பாற்
கண்டவுளங்களித்தெவருங்காதல் கொளிக்காதைதனைக்கழறினேமால் (௰ரு)

நூற்பயன்

முன்னூலுநெறிநூலு மிலக்கியநூலென்னூலுமோக்கநூலும்
பன்னூலுமொருங்குணமைகளறவாய்ந்தபாவலர்கள் பதமுஞ்சூடிப்
பொன்னூலணியுமுத்தரசகுலநாதன் மீதுபுகலுநூலை
நன்னூலென்றுணர்வோர்களிந்திரனுஞ் சேவடியைநண்ணிவாழ்வார் (௰சு)

பாயிரமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௰சு.

---

நாட்டுச்சருக்கம்

---

மட்டிலாரத்தனங்களார்ந்து மாணிக்கப்புரக்குமாழித்
தொட்டிலார்ந்தனந்தலாடுந் துளவனைமருவும்பின்னை
நட்டமிலாதியங்காளுந்தானவர் வியந்துகூறும்
விட்டிலாபுர நன்னாட்டின் மிகுதியைவிளம்புவோமால் (க)

(இதன் பொழிப்புரை)

அளவில்லாத திரவியங்களையுஞ் சம்பதிக்கின்ற அலைகளையும்பெற்றுப்பூமியைச் சூழ்ந்துகாத்துவாநின்ற நெடியகடலிற்சிறந்த பாற்கடலைத்தொட்டியாகக்கொண்டு அலைகளாலசையப்பள்ளிகொண்டஸ்ரீமன்நாராயணமூர்த்தியைமருவிமகிழுகின்ற இலட்சுமியானவள்

நீங்காமலிருந்தருளும் பெருமையைத் தேவர்களெல்லாமதிசயித்துப் புகழும்படி விளங்காநின்ற விட்டிலாபுரத்து நாட்டுவளமையையெம்மாற் றெறிந்தபட்டுஞ் சிறிதுசொல்லுவோம் என்றவாறு-ஆல் அசை (௧)

கண்டேமாமறையான் புகல்லணிவிசிதச்சாலை
விண்டுபோயகலவாரமீ தமுதன்னியீண்டு
கொண்டுமீண்டரி°கேழாகிக்குழகராசகுலநாதன்
றண்டாளருளிவ்வாறே நல்குமென்றுங்குறும்

(இ-பொ-ரை).

இனியகற்கண்டுபோலுமதுரமாயுள்ள வேதப்பொருளாய்நிறைந்த விபூதியைத்தரித்தசிவபெருமானுடைய திருமேனியைக்காட்டியவெண்மையானமேகங்களானது விரிந்தகடலின்கண்ணேசென்று நீரையள்ளிச்சீக்கிரமாய் மீளவுமாகாயத்திற் சென்றுநீலமேகவண்ணனாகிய ஸ்ரீகிருட்டிணமூர்த்தியின் றிருமேனியைக் காட்டிச்செகதீசனாகிய ராத்தாசகுலநாதன் திருவடிகளைத்தரிசித்த அன்பர்களுக்குமிவ்வாறு கருணைமழை பொழிவாரென எடுத்துக்காட்டியது போலெங்குஞ் சிறந்தமழைகள் பொழிந்தன என்றவாறு (உ)

கருப்புவில்லாளிவண்ணங்காட்டிமாலாங்குசூழ்ந்த
பொருப்புகள்மருளத்தாக்கப் பொறத்திடா சருவியாங்கு
மருப்படர்க்கடம்புமாவுசோகாத்திபுன்னைத்
திருப்பலாச்செருந்திவேங்கை தேக்குசண்பகங்குருந்தம்

இ-பொ-ரை

கருப்புவில்லைப்பிடித்து வருமிளஞ்சிங்கமென்னு மன்மதனுடைய திருமேனியைக்காட்டிய சுறுத்தமேகங்கள் இந்நாட்டைச்சூழ்ந்திலங்காநின்ற மலைகளின் சிகரத்தைதப்பிளப்பதைப்போல அஞ்சும்படி கனத்துப்பொழிவதனால் அருவிகளெழுந்து வாசனையு

ள்ளா, சந்தனம், கடம்பு, அசோகம், ஆத்தி, புன்னை, பலா, செருந்தி வேங்கை, தேக்கு, சண்பகம், இந்தவிருட்சங்களையும் என்றவாறு (௬)

ஓங்குபாதிரியாலத்தியுறுகருங்காலிபாலை
கோங்கரசனிச்சைநாவற்கொன்றைதெங்கிலந்தையாச்சாத்
தேங்கமழ்தாழைதாளிதேசிகிச்சிலிவிளாவு
மூங்கிலீந்திலஞ்சிமாக முகுமருதங்கடுக்காய்

இ-பொ-ள.

மிகவுந்நீதமாகவளர்ந்தபாதிரி, ஆல், அத்தி, மிகுதியாகிய, கருங்காலி, பாலை, கோங்கு, அரசு, அனிச்சை, நாவல், கொன்றை, தெங்கு, இலந்தை, ஆச்சா, பரிமளத்தையுடையதாழை, பனை, எலுமிச்சை, நாரத்தை, விளா, மூங்கில், ஈந்து, இலஞ்சி, மா, கமுகு, மருது, கடுக்காய், இந்தவிருட்சங்களையும் என்றவாறு (௭)

நெல்லிமாதுளமாரஞ்சி திகழிலவங்கமேல
மல்லிகுங்குமங்காரம்பு மருவுமங்கோட்டம்பூரஞ்
சொல்லவுமொண்காவில் வில்வமுளவம்பூங்கனிகளோடு
பல்லதும்வாரிச்சூடிப்பரவியேபோயிற்றன்றே

இ-பொ-ள.

நெல்லி, மாதுளை, அரஞ்சி, பிரகாசிக்கின்ற, இலவங்கம், ஏலம், மல்லி, குங்குமம், காரம்பு, விரும்பாநின்ற கோட்டம், பூரம், யாவராலுஞ்சொல்ல அடங்காத பெருமையையுடைய வில்வம், துளவம், இன்னுமனேகம் பூங்கனிகளோடு பலவஸ்துக்களையும்வாரிக்கொண்டுவந்து எங்கும் பரவிப்போனது என்றவாறு-எ-அசை (௮)

விருக்ஷமுதலானயாவற்றையும் புரட்டிக்கொண்டுவந்ததால் அணியும் பணியாகக்காட்டியது.

ந

விருப்பமாயமுதரேத்தும் விசயமாநதியிலாம்பல்
மருப்புமானுலவைவஞ்சி மருமலர்மணிகள்மின்ன
வுருப்பமாயேந்திவாநாவொருக்குமீரணையைநோக்கி
நெருப்பலவெனவியந்து நீக்குவரையமாதோ

இ-பொ-ரை-

தேவர்களுமனந்தாசையோடும் புகழ்நின்ற முத்தரசகுலநாதன் சன்னிதானத்துமுன் விளங்காநின்ற விசயமாநதியானது யானைகளின் கொம்புகளையும், மான்களின் கொம்புகளையும், வலங்களையும் வாசனையிருந்த மலர்களையும், பிரகாசிக்கின்றமணிகளையு மிகுதியாகக்கொண்டுவந்து அழகியவிருகரையிலும் வரிசையாக வொதுக்குகின்றவிசித்திரத்தை யாவர்களும் நெருப்புப்பொறிகளிங்குயே தெறித்திட்டுவந்து பார்த்து இரத்தினங்களின் ஒளியென்று ஆச்சரியப்பட்டு நெருப்பென்றெண்ணிய சந்தேகத்தை நீக்குவார்கள் எவா

று-மாதோ-அசை (ஐ)

இந்நதிக்கரையினில் மணிமுதலான பிதங்களை ஒதுக்கியதன்மை [illegible]து பூமியில்யாவரும் அனேகங்காணிக்கைகளைக் கொண்டுவந்துதிக்கின்ற முத்தரசகுலநாதன் திருவடிகளுக்கு, கங்காதேவியான வளிதுகளைக்காணிக்கையாகக்கொண்டுவந்து குவித்தவண்ணமிதுவென்றுபுகழும்படிகாட்டியது

சங்கரனடியிற்குண்டோதரன்றனைக்கிருத்தவேணிக்
கங்கைமான் சுதாப்போதிக்கமிருந்தருவியெல்லும்
பொங்கமாவிசயவேணப்புனல்மலித்திரியுஞ்சிலந்
திங்கள்மும்மாரிதூவுஞ்சீர்த்தியாஞ்சாற்றுந்தேயம்

இ-பொ-ரை.

சிவபெருமானுடைய திருமணத்திற்குண்டோதரனுடையதாக விடைதீரும்படி சடாமகுடத்தில் இலங்கியகங்கையையழைத்தபோ

துவைகையானது எப்படிப்பெருகிவந்ததோ அதுபோல சதுரகிரியி ன்சிகரத்திலிருந்துவருகிற அருவியானது அவ்வாறுமுங்குறையாம ல் விசயநதியில் மிகுந்து ஓடிக்கொண்டிருக்கும் அத்தன்மையான து நீதியோடுமோதமும் மாரிபொழிந்துவருகிற சிறப்பென்றபூமியின் கண்ணே யாவருஞ்சொல்லிப்புகழ்வார்கள் எ-று (எ)

சிவபெருமானிடத்தில், கங்கையும், அரவும். மானும், தும்பை யும், வில்வமும், கொன்றையும், அறுகும், குளிரும்: இந்தும் இருப் பதுபோல சதுரகிரியிலுமுண்டென்று காட்டியது (குளிர்-குளிர்ச் சி-மழு) (இந்து-சந்திரன்-காடி.

காட்டங்கடருமஞ்சாரைகநன்மையேபுரியுமக்கள்
கூட்டங்கள் முத்துமாலைக்குழகடிகூப்பும்பீடு
வாட்டங்கள்வழங்கிலின்று வருமெனப்புலற்கோகாக்கக்
கோட்டங்களமுதோர் நாளுங்குலைந்ததைக்கண்டிலோமால்

(இ-பொ-ள),

இன்னாட்டின்கண்ணே வசிக்கின்றமாந்தர்களின் கூட்டங்க ளெல்லாம் தருமங்களையும், வேதமுறைப்படி வேண்டிய [illegible]மக ளையுஞ் செய்துகண்டு மகிழ்கின்ற கண்களையுடையவரும், முத் துமாலையம்மனுடைய பாதாரவிந்தங்களையே துதிக்கின்ற வாயை யுடைய வரும்வணங்குகின்ற கையையுடையவருமாக விருக்கின் ற பெருமையினால் இவைகளுக்குயாதேனும் குறைவுசெய்வோ மாகில் நமக்கேதீனுந்துன்பமவருமென்றஞ்சிவருணபகவானுடைய ன் வாட்டமன்றியிற்காத்து வருகிறதினால் தடாகங்களின் சலங்க ள் ஒருநாளாகிலுங்குறையக்கண்டவர்களில்லை எ-று-ஆல்-அசை (அ)

படுகயற்கிளையினீரும் பரவைபோற்றும்பியார்த்து
முடுகிமற்பிடிக்க மீனமொய்களும் விழிக்கத்தாம்பிற்
கடுகிவோவிலக்கி நின்றகருமமுன்னயன் மால்போரில்
நடுகிரி நிமிர்க்குகாலைத காட்டியதுலகின்மாதோ

(இ-பொ-ரை).

ஏரியிலுள்ளநீரும் நதியிலுள்ள நீருங்கூடறபோற்பெருகி அலைகளை வீசிச்சப்தித்து மற்படித்ததுபோல், இரண்டுமெதிர்த்துத்தள்ளமச்சங்கள் நடுங்கிப்பார்க்க அதுசமயம் ஏரிநிறைந்துவிட்டதென்று சீக்கிரமாகச் சரப்பலகையால் மடையையடைக்க அப்பலகைக்கு நதியையுந் தடாகத்தையும் விலக்கிமத்தியில்நின்று அதுகளின் அகந்தையை யடக்கிய தன்மைமுன் நானேனென்னுமாண்மை பேசியமாலுமயனுஞ்செய்தபோரில் தேவர்கள் நடுங்கிவிழிக்கச் சிவபெருமான் கண்டு இருபேர்களுக்கும் நடுவில் மலையாகவளர்ந்துநின்று அவர்களுடைய அகந்தையையடக்கிய சரித்திரத்தைப் போல இதையும் விசேஷித்துச்சொல்லும்படியுலகின்கண்ணே நடத்தியது எ-று-மாதோ-அசை (௬)

பூரணப்படுகாலோணம் வுலமிடமசலமுற்றும்
வாரணத்திணைகளார்ந்தவனசங்கடரளமீன்று
தாரணித்திருளையோடுந் தரணிமேரிரவிலேர்க்குங்
காரணச்சசியைக் காமர்க்கன்னியரிகழ்வர்மாதோ

இ-பொ-ரை.

நிறைந்த தடாகங்களிலுங் கால்வாய்களிலும் நதிகளிலும் வயல்களிலும் மற்றுமிடங்களிலுஞ் சிறந்தசங்கினங்களும் நிறைந்த தாமரைகளுமுத்துக்களையளிதுச் சூரியனுக்குச் சமானமாகப்பிரகாசித்து இரவும்பகலுமிருளையோட்டிக் கொண்டிருப்பதால் அழகுமிகுந்த இளமாதர்கள் உலகத்துக்குக்காரணமாக யிரவில்வருகிற சந்திரனைப்பார்த்து இதனாலென்ன பிரயோசனம் நாயகனில்லாத காலத்து நம்மைத்துன்பஞ் செய்வதைத்தவிர ஒரு நன்மையுமில்லையென்று நிந்திப்பார்கள் எ-று-மாதோ-அசை (௭)

தங்களுடைய வதனத்துக்கிணையில்லாதவனென்றும் தாங்கருத்துக்கோர்பகைவனென்றும், இரத்தினங்களெல்லாவிருளையெல்லாம் விலக்குகிறதென்றும், மதியை மதியார்கள்,

ஆவிகந்தனையே காத்தவாழியின் சுருடமாரின்
மேவியவரிமுத்தாரமென நிரைநிரையாய்க்காட்டும்
பாவநிமுடியிலேறும் பழக்குலைக்கதலிமீது
தாவியேமதுவைச்சிந்துந்தடத்துளகெட்டைவாளை

(இ-பொ-ள்):

ஏரிநீர்களைக்கோத்துவருகின்ற நெடிய கரையின்மேலெழுந்த நீர்ச்சேப்புகள் சலத்தின்கண்ணே தோன்றுந்தன்மையானது அனேகமரகதங்களைச் சரங்களாகக்கோத்து வரிசைவரிசையாகத்தொங்க விட்டதைப்போலச்சிறந்துவிளங்கும் முருகக்கடவுளுடைய திருமுடிமீது பல அபிஷேகத்தோடும் விளங்காநின்ற பழத்தலையுடைய கதலிக்குலைகளின்மீது தடாகங்களிலுள்ள நீளவாளைகள் தாவியதிலுள்ள மதுக்களைக்கொட்டி விளையாடும் எ-று (௰௧)

மயிலினநடனமாட வரியினங்கீதம்பாடக்
குயிலினமழைத்தாடக் குழித்திரைகஞ்சம்போட
மயலவந்திகைகள் கூடமாலனமடையைத்தேடக்
கயல்விழிமாதராடக்கயமெலாம புதுமைகாட்டும்

(இ-பொ-ரை)

மயிலினங்களெல்லாந் தோகையை விரித்து நின்றாடவும், வண்டினங்கள் மதுக்களையுண்டு தென்றுவென்று கீதங்களைப்பாடவும குயிலினங்கள் இசையோடு கூவிவிருப்படவும் அலையினங்கள் கரையிலேமோதித் தாளம்போடவும் உன்மத்தமான கிளியினங்கள் ஆசையோடுவந்துகூடவும் மிகுந்த அன்னங்கள் முட்டையிட்டு அடைகாக்கவும் கெண்டையையொத்த கண்களையுடைய மாதர்வந்து நீராடவும் இவ்விதமான அற்புதங்களே தோன்றுந் தடாகங்கள் தோறும் (௰௨)

வட்டிகைகமழுமாத மதிமுகத்திலதவன்னப்
பட்டிகை பிணித்தசேர்க்கைப் பாவையராடிமாலி

வட்டமுகதியுமார்ந்த வசுதையிற்பரவிமேலு
முட்டியதெனிற்பகுத்து மோனரும்புகல்வரோவால்

(இ-பொ-ள)

நல்ல சாந்துக்களை அணிந்து அணிந்த புரிமளிக்கின்ற மேனியையும் மதியைப்போலுள்ள வதனத்தையும் சிந்தூரத்திலதமிலங்கிய நெற்றியையும் பொன்னிறமாகிய கச்சணிந்து திரண்டெழுந்த தனங்களையுமுடைய மங்கையர்கள் நானஞ்செய்து தடாகங்களிலும் நதிகளிலும் வாசனைநிறைந்து பூமியில் யாவருங்கண்டு அதிசயிக்கத் தேவலோகத்திலுள்ள ஊர்வசி அரம்பை முதலானவர்களுங்கேட்டு மகிழ்ந்தார்களென்னில் யானெவ்வாறு பகுத்துச்சொல்வது தவ முனிவர்களும் விசேஷித்துச்சொல்வதரிது எ-று-ஆல்-அசை (௰௩)

பங்கயத்தணரிலஞ்சப் பார்ப்புகடுயிலநானம்
பொங்குழாபிரசமுண்ட புள்ளினமிசைக்கமெல்ல
வங்கயத்திரைதவம்ப வாங்கொட்டிகணோக்கி
எங்களையன்மால் பள்ளிக்கிதேலோ பள்ளியென்பார்

(இ-பொ-ள)

நிறைந்த தடாகங்களிலெழுந்த தாமரை மலர்களில் அன்னங்களின் குஞ்சுகளிருந்து தூங்கவும், வாசனையுடைய மதுக்களையுண்ட வண்டினங்கள் பாடவும், திரைகள் மெதுவாக அசையவும், ஆடுகின்ற பூந்தொட்டிகளைக்கண்ட மாதர்கள் யெங்கள் ஆதிமூர்த்தியாகிய திருமாலானவர் திருப்பாற்கடலிற்கொண்ட பள்ளியை நாம் காணாவிடினும் இதுவே சிறந்தபள்ளியென்று புகழ்ந்து மகிழ்வார்கள் எ-று (௰௪)

நடத்தெழுவிகண்மாரன் றடக்காம்பொருந்வண்ணம்
படத்தெழுதியவில்வாய்த்த பறம்புமின்முகமூராகப்
படத்தெழுமல்குல்மின்னார் பணியணிகடுவேறும்பொற்
குடத்தெழுந்திருமாரங் குவலயத்தறமுங்கண்டால்

பூமியின்கண்ணே யாவர்களுஞ் சிறந்த தருமங்களைச்செய்து வருகிற மேன்மையைப் பெரிய தடாகங்களிலுள்ள சங்கினங்கள் கண்டு தாமுந்தருமஞ்செய்யவிரும்பியதைப்போல மன்மதனானவன் விசாலமாகிய கரத்தினால் இலட்சணம் பொருந்தும்படி வுருவங்களைப் படத்திலே யெழுதியெழுதித் தேர்ந்து வாய்த்தவுருவத்தில் சிறந்த தனங்களையும் பிரகாசிக்கின்ற முகத்தையும் அரவின படத்தைப்போலெழுந்த நிதம்பத்தையுமுடைய மங்கையர் விலைபெற்ற பஞ்சவன்னத்துகிலையணிந்த இடைகளிலே வைக்கும் பொற்குடங்களில் சலந்திரட்டும் போதெல்லா முத்துக்களை யுமிழும் எ-று
ஆல்-அசை (௰௫)

மாவுலகேழுமேழு வழங்கிசைமடந்தைவாழும்
பூவுளமதுவைவேண்டும் புள்ளினமருந்தவீதல்
காவலர்நீட்டி நீட்டிக்கரஞ்சிவக்கறததிற்றேர்ந்து
நாவலர்க்கியும் பான்மை நவிலலாம புவியின் மாதோ

பெருமை பொருந்திய பதினாலுலோகமும் சிறந்து விளங்கா னின்ற கலைமகளுறையாநின்ற அழகிய தாமரைமலர்கள் தன்னிடத்திலிருக்கிற மதுவை விரும்பிய வண்டினங்களுக்கு வரும் போதெல்லாம் முகமலர்ந்து கொடுக்கின்ற தன்மையானது பூமியிற சிறந்த அரசர்கள் இல்லையென்று வந்தவர்களுக்கெல்லாங்கொடுத்துக் கைகள் சிவந்து தருமஞ்செய்யத்துணிந்தவர்களாகி வித்துவான்களுக்கு எவ்விதமாக அள்ளியள்ளிக்கொடுக்கிறார்களோ அவ்வண்ணம் பூமியிலே யாவரும் சொல்லும்படி சிறப்பைக்கொடுத்தது என்று மாதோ அசை (௰௬)

மாத்திரன்கனிகளைந்து வானரமெறியச்செம்பொற்
காத்திரல் மணியைத்தூவிக் காக்கையராகேஞ்சிரக்
தாத்திருந்தலைவிலா தெல்லவனுகுவனவுமாற்றே
றருத்தமாக்குண்டுசேரு மாத்தமாக்குண்டுசேரும்.

சிவந்து திரண்டெழுந்த கரும்புச்சோலையின் சிறப்பு நூறு கோடியோ அல்லது மேலோவென்று எண்ணுக்கடங்காமல் வரிசை வரிசைகளாகப் பவளக்கால்களை நட்டி மணிகளை அழுத்தி மேலே அழகிய மரகதத்தகடுகளைப்பரப்பிச் செவ்வையாகச்செய்த ஒரு விசித்திரமண்டபமோவென்று சொல்லும்படி இலங்கியது ஒருவர் நிறைந்த தூண்களைக் கணக்கிட்டால் இன்ன மண்டபத்திற்குச் ச மானமாகுமோவென்று சொல்லலாம் எ-று-மன்றோ-அசை (௰௧)

செங்கரும்பானதால், பவளக்கால்களாகவும் கணுக்கடோறு முத் துப்பிரகாசித்துக் கொண்டிருப்பதால் மணிகள் அழுத்தியதெனவும், தலைகள் மிகுந்த பச்சைநிறமாய் அடர்ந்திருப்பதினால் மரக தத்தகடு பரப்பியதெனவும் காட்டியது

புனத்திளையொலியுமாகப் புயலொலிபோலியுமாரி
யினத்தினல் லொலியுமேழி யெடுத்தவரொலியுங்கோக்கள்
கனத்துழுமொலியுபூமிக் காவலரொலியுங்கூடு
மனத்தாகளொலியுஞ்செய்கள் வாழ்கவாழ்கெனவுமாதோ

(இ-பொ-ரை)

விசயநதியில் எழுகின்ற அலைகளின் சப்தமும், ஆகாயத்தில் விளங்கிய மேகங்களிலெழும் இடிகளின் சப்தமும், தடாகங்கள் வயல்களிலுள்ளசங்கினங்கள் முழங்குகின்றசப்தமும், கலப்பையை யெடுத்து வழுப்போகிற ஆடவர்களுடைய சப்தமும், எருதுகள் கூட்டங் கூட்டமாய் உழுகிற வழியின் சப்தமும், வயல்களுக்குத் தலைவர்கள் ஒலிகொண்டிருக்கிற சப்தமும், இன்னும் மங்கு கூடு கின்ற நல்ல மனதையுடையவர்கள் சப்தமும், வயல்களெல்லாஞ் செழிப்பாக விளைந்து மேலுமேலும் வாழ்கவென்று சோபனம் பா டியதுபோலச் சிறந்தது எ-று-மாதோ-அசை (௰௨)

வளையினமழியமின்னு மணிகளுமழியமண்டு
முளரிகளழியச்செங்கு முதமலரழியவாரித்

தளவமுமழியநீலத் துணர்களுமழியமாபூந்
தளிரினமழியநீனத் தடிகளிற்காறுசெல்லும்

வெண்மையாகிய சங்கினங்களுடைபடவும், பிரகாசிக்கின்ற முத்துக்கள் சிதறவும், நெருங்கிய தாமரைகள் எலிப்பீடவும், சிவந்த ஆம்பலுமலர்களுங் கலங்கவும், வாசனையுடைய துளசிகள் தாழவும், நீலோற்பல மலர்கள் கெடவும், மற்றும் பூக்களையுடைய தளிரினங் களெல்லாஞ் சாயவும, நெடியவயல்கள்தோறும் கொழுமையுடைய கலப்பைகள் செல்லும்படி உழுதார்கள் எ-று (உக)

கூனினங்குழையமூழ்குங் குளிரினங்குழையநீரு
மீனினங்குழையத்தேக்கு மேழமுங்குழையக்கூர்ம
மீனினங்குழையநீல மிஞிறினங்குழையச்சால்க
டானினங்குழையவேகத் தரளமின்சால்கடோறும்

நந்தைகள் கலங்கவும், நீரில் மூழ்குகின்ற கண்டுகள் கலங்கவும், நெடியமச்சங்கள் கலங்கவும், தித்திப்பையுடைய கரும்புகள் அழியவும், ஆமையென்னு மேலாகிய ஓட்டங்கள் வாடவும், மதக் குரிசு கண்டவண்டினங்கள் வாடவும, சால்கள்வளையும்படி யடித்தார்கள் நீர்ச்சால்கள்தோறு மணிகள்பிரகாசித்தது எ-று (உஉ)

மரைவுரிப்பெருமானேர்ந்த வரச்செருக்காலீரேழு
தரையுமாளரியானுக் கிருந் தாருகனிகலைவென்ற
பரைமகன்முடியிற்றேவர் பசைமலர்சொரிந்தவண்ணம்
விரைகளைவாரிகூரி வீசினர்பணையின்மிக்கீர்

(இ-பொ-ரை)

மரைவுரியைத்தரித்த சிவபெருமான் கொடுத்த வரத்தின்மிகு தியால் பதினாலுலோகங்களையும் ஆண்டுவருகிற சிங்கமென்று யாவர் களுக்கும் பெயர்படைத்த தாருகாசுரனுடைய போரை வென்று தேவர்களுக்கரசனாகிய தேவேந்திரனுடைய துன்பங்களையுந்தீர்த் தருளிய பார்வதாதேவியின் குமாரனாகிய முருகக்கடவுள் திருமுடி

மேல் தேவர்களெல்லாம் வாசனைமிகுந்த மலர்களை விருப்பமாகச் சொரிந்து யெவ்வாறு துதித்தார்களோ அதுபோல் பெருமையை யுடையவர்கள் வயல்களிலே திரட்சியுள்ள நெல்லுக்களையள்ளி வினைத்தார்கள் எ-று (உ௩)

திருமகளுறையும்பார திபங்கதிமாக்கள்செய்யுந்
தருமமும் பொறையுமெய்யுந் தருமொருபூசைநன்றும்
கருமமுங்கிரவந்த கார்ப்பயிரிதுவேயென்ன
மருவகணிகளிலந்தமலிவொடுமுளைத்தெழுந்த

(இ-பொ-ளை)

மகாலட்சுமியானவள் தங்கிவளரானின்ற யிந்நாட்டின்கண் வசிக்கின்றமாந்தர்கள் அன்போடுஞ்செய்தருளுகின்றதருமத்தையும், பொறுமையையும், உண்மையையும், நன்மையான காரியங்களையே தருகின்ற சிவபூசையையும், எடுத்துப்பேசுகிறதற்காக வந்தகாலப்ப யிர்களோவென்று புகழும்படி மணமிகுந்தவயல்களிலே அழகாகமு ளைத்தெழுந்தது கள் (உச)

வையலெழுங்கூழ்களோடு வருங்களைகளைக்களையுங்
கயலெழுவிழியார்துண்டம் காங்களங்கிரியுநோக்கி
அயலெழுங்கமலத்தார்க ளாகமும்வெள்கவாங்கு
செயலெழும்பொழியாற்குழுஞ் சிந்தொலியடங்குமாதோ

(இ-பொ-ளை)

வயல்களிலே முளைத்தெழுந்த பயிர்களோடெழுந்த களைப்புல் லுகளை யெடுக்கின்ற கெண்டைமற்சியம்போலுங் கண்களையுடைய மாதர்கள் முகத்தையும் கைகளையும் பாதங்களையும் பக்கத்திலெழுந் த தாமரைகள் கண்டு வெட்கமடைந்தது. இவர்கள் களையெடுக்கிற சப்தங்கள் பூமியைச்சூழ்ந்த கடலின் சப்தங்களை யடக்கியது எ-று மாதோம்அசை (உ௫)

முகம், கண், கை, பாதம், என்ற செந்தாமரை மலர்களுக்கு வயல்களிலெழுந்த தாமரைமலர்களிணையில்லாததினால் வெட்கமடைந்ததென்னக் காட்டியது

நாகஞ்செங்கனையிற்றுவ நன்மணிகனியிற்றுவப்
பாகுதேன்பணையிற்றுவப் பரிமளத்தமுதமேவி
வேகமாய்வரியிற்றுவ் வேனலும்விசும்பிற்றுவ
வேகனைவளமைகாட்டி விளைந்தபைங்கூழ்கண்மன்னோ

(இ-பொ-ள)

குரங்குகளானது சிவந்தகரும்புச்சோலையிற்றாவி விளையாடவும், அக்கரும்புக் கணுக்கள் படீரெனவெடித்து அதிலுள்ள முத்துக்கள் மா, பலா, முதலிச்சோலைகளிற் சிறந்த கனிகளிலே மோதவும் அக்கனிகளிலுள்ள மதுக்கள்சிந்திக் கால்வாயாகவோடி வயல்களிற் பெருகவும் அந்த மதுவின் வாசனையாகிய தித்திப்பு நெற்களிலே நிறையவும் அக்கதிர்கள் ஆகாயத்தை எட்டிப்பிடிக்கும்படி வளரவும் இவ்விதமாக அழகிய செழிப்பைத்தந்து பயிர்களெல்லாம் விளைந்தது எ-று.

மன்னோ-அசை (உசு)

கொடியிடைச்சதியார் கானகுவளைகள் வேறுபுக்காய்
படியிடை நோக்குங்கோடிப்பாவையர் மணத்தினனும்
வடிவுமுத்தனப்பிராட்டி மணவரனிகவிற்றன்பொன்
னடிவிரத்கானுமாறுமழகரிகளுங்கவிழ்ந்த

(இ-பொ-ள).

நுண்ணிய கொடியைப்போலுமிடையையுடைய் பதிவிரதைகளுக்கு வாய்த்த வாள்போலும் கண்கள் பூமியைப்பார்க்கும்படி முகங்கவிழ்வதேயன்றி எதிர் நோக்க மனந்துணியாது அது போலும் புதுமையாகத்திருமணஞ்செய்கிற பெண்கள் நாணி முகங்கவிழ்வதைப்போலும் அழகைப்புடைத்த பார்வதாதேவியானவள் முலைப்பிராட்டியாக வந்தவதரித்துத்திக்குவிசயஞ் செய்யும்போது

சிவபெருமானுடைய யுத்தத்தில் ஒருதனமறப்பக்கண்டு மாணிக்க
விழ்ந்ததைப்போலும் செற்கதிர்களானது திரட்சியாக விளைந்து ப
ழுத்துக்கவிழ்ந்தது எ-று (உஎ),

குயமதைவெடுப்பர் மன்னர் கூடியே களிப்பர்சொல்லை
யயமெனத்துணிப்பர் நீட்டாணினிற்பிணிப்பர் கம்மேற்
கயமொடும் பொறுப்பர் சாலக்களத்தினிற் குவிப்பர்பாடி
வயவெருதடிப்பர்சாலிவாரினை கழிப்பர் மன்னோ

(இ-பொ-ள்).

மன்னர்கள் கூடிக்கூர்மைதங்கிய அரிவாளைக்கையிலெடுப்பார்கள் வயல்களின் வளமையைக்கண்டுபேசி மகிழ்வார்கள் செற்கதிர்களையறுப்பார்கள் நீளமாகிய கயிற்றில் அள்ளிவைத்துக்கட்டுவார்கள் மேன்மையோடுதலைதாங்கும்படி சுமப்பார்கள் விரிவாகிய களத்தினிற் கொண்டுவந்து குவிப்பார்கள் இனிமையுள்ள தெம்மாங்குகளைப்பாடிக்கொண்டே எருதுகளை மிதிக்கவிட்டு அடிப்பார்கள் பின்பு வைக்கோலைக்கழித்துவிட்டு செற்களையள்ளிப்பையிற் கட்டுவார்கள் எ-று-மன்னோ-அசை (உஅ),

வசமுளசகடிற்கூட்டி வானிளஞ்சேக்கள்பூட்டித்
திசைகளுமதிரவோட்டிச் செப்பமுநீந்திவீட்டி
லுசிதமின்னிலக்குத்தேரட்டியுட்புகுந்த கன்றமேட்டி
யசமூவவறையிற் பூட்டியனைவருமேதைகொள்வார்

(இ-பொ-ள்).

தங்கள் கைவசமிருக்கிற வண்டிகளைக்கொண்டுவந்து செலும ட்டைகளை யேற்றி அமுதம்போலும் வாலிபமுடைய எருதுக்களைப்பூட்டி திக்குகளெல்லாங்கடகடவென்றதிரும்படி வரிசையாக வண்டிகளை யோட்டிக்கொண்டு அழகிய வீதிகளெல்லாங்கடந்து வந்து தகுதியாக விளங்காநின்ற வீட்டுவாயிலினுள்ளே கொண்டுபோ

ய்மூன்றுவருடத்து நெற்களையுந்தருகின்றமுதன்மையாகிய களஞ்சியத்திற் கொட்டி அறையைப்பூட்டி ஆனந்தமாக யாவருமேன்மையடைவார்கள் எ-று (உக)

இரவலராய்ந்தோரான்றோரிறையடி பரவுஞ்சேடர்
வரவெதிர்நோக்கித்தீயமாவுண வளித்துக்கூறுந்
தரவளி மலிந்துநீட்டித்தமரையுமருவியெல்லு
மிரவினிதருந்தி நாளுமெக்களித்திருப்பர் மாதோ

(இ-பொ-ரை).

யாசகர்களும் நாவலர்களும் பெரியோர்களும் சிவபெருமானைப் பூசிக்குமெய்யடியார்களும் யெப்போது வருவார்களென்றெதிர்பார்த்துக்கொண்டிருந்து வந்தவர்களை யெல்லாமுபசாரமாகவழைத்து வந்தறுசுவையோடினிதாகிய போசனங்களையளித்துவேண்டிய திரவியங்களையுமனந்தன்போடுகொடுத்து தன்னுடைய பந்துக்களையும் விரும்பியழைத்துப்பகலுமிரவுமினிதாகிய வுணவைத்தாங்களும் புசித்து நாடோறுமிகுந்த மகிழ்ச்சி யடைந்திருப்பார்கள் எ-று- மாதோ-அசை (ரூ௰)

வாரிமாரியைவிரும்ப மாரிபூமியை விரும்பப்
பாரியேனலைவிரும்பப் பயிர்கள் சீரையும் விரும்பச்
சீரினையவளை விரும்பச்செல்விமாதரை விரும்ப
நாரியர் விரும்ப நண்பர் நம்பனை விரும்பிவாழ்வார்

(இ-பொ-ரை

கடலானது சலத்தைக்கொடுத்து மேகங்கள் மேலாசைகொள்ள மேகங்களானது மழையைக்கொடுத்துப்பூமியின் மேலாசைகொள்ள பூமியானது இடத்தைக்கொடுத்துப்பயிர்களின் பேரிலாசைகொள்ள பயிர்களானது திரவியங்களைக்கொடுத்து சீரின்மேலாசைகொள்ள சீரானது மகிழ்ச்சியைக்கொடுத்து இலட்சுமியின் மேலா

சைகொள்ள இலட்சுமியானவள் திருவடியைக்கொடுத்து மாதர்கள் மேலாசைகொள்ள மாதர்களெல்லாஞ்சுகத்தைக்கொடுத்துக்கணவர் மேலாசைகொள்ள கணவர்களெல்லாம் வந்தவத்தைக்கொடுத்துச் சிவபெருமானுடைய திருவடி மேலாசை கொண்டு வாழ்வார்கள் எ-று. (௱க)

வெண்புரிவயல்கள் காட்டும் விளைவுபாவணங்கள்காட்டும்
வண்மருச்சுனைகள் காட்டும் வரும்துக்காவுகாட்டும
பெண்ணிறை மழைகள் காட்டும் பீடாங்கதிகள் காட்டும்
விண்ணுலயாவுங்காட்டும் விட்டிலபுரகைளூட்டில்

(இ-பொ-ளை).

விட்டிலாபுரமென்று பெயர்படைத்த நல்ல காட்டில் வெண்மையான சங்கினங்கள் வயல்களைக்காட்டும் விளைவுகளைக்கடைவீதிகள காட்டும் தெளிந்த வாவிகள் தடாகங்களைககாட்டும பெருகிவருகின்ற மதுக்கள் சோலைகளைக்காட்டும் பொழிகின்ற மழைகள் பெண்கள கற்பு நிலைமையைககாட்டும் கதிகள் ஆலயங்களைக்காட்டும் இவனுந்தேவலோகத்திலுள்ள அற்புதங்களை யெல்லாம் இந்தத் திசைகள் காட்டும் எ-று (௱உ)

வயல்களிலே சங்கினங்கள் முழங்குவதினாலும் கடை வீதிகளிலே பலதானியங்களைமலைமலை போற் குவிப்பதினாற் சிந்தக்கழித்துக்கிடக்கிற செழிப்பினாலும் தடாகங்களிலே பரிமளங்களைமிகுந்து அணிகின்ற மாதர்கள் நாள்தோறும் நானஞ் செய்து வருகின்றதினாலும் சோலைகளிலே மா பலா கதலிகளின் கனிகளிலுள்ள மதுக்கள் சிந்திப்பெருகியோடுகிறதினாலும் கற்புடைய பெண்களின் தருமத்தினால் மாதமும்மாரிபொழிவதாலும் ஆலயத்தின் வருதியான் அன்பர்கள் கூட்டஞ்சிறந்திருப்பதனாலுங் காட்டியது.

வம்பிடுங்களபமாரமணிவடம் புனைந்துமேலும்
வம்பிடுந்தனத்தார்மைக்குவளைக்கணெபறுவர் மேலு

மம்பிமென்னங்கண்மாகட்டழகிலுமிழிவுளோரில்
லும் பருண்டவை வியப்பாருவமையாருரைக்க வல்லார்

இ-பொ-ரை.

வாசனையைத்தருகின்ற களபங்களையும் விலையுயர்ந்த பொன்னு பரணங்களையும் முத்துமாலைகளையும் அணிந்து பின்னும் வன்னபப ட்டு இரவிகலைகளையும் பெற்றுப்பொற்குடம்போலும பிரகாசிக்கின் ற தனத்தையுடைய மாதர்களின் அஞ்சனந்தீட்டிய கண்ணம்புபாய்ந்து அதனால் மயங்கிய ஆடவர்கள் பேரிலே மேலுமேலு மலரம்புகளை விடுகிற மன்மதனுக்குங்குறைந்த அழகுடையவர்களின்றுட்டி வி ல்லை அவனுக்கு மேலான அழகைப்பெற்றவர்களுண்டு கண்டவர் கள் ஆச்சரியப்படுவார்களேயன்றி உவமையெடுத்துச்சொல்லுவார்க ளில்லை. எ-று

(௩௩)

ஆரணப்பொருள்கள்யாவு மாய்ந்தவரடிகட்கெல்லாங்
காரணப்பொருளாயோங்குங் கலைக்குறுமுனிவனன்றுட்
பூரணப்பொருள்களார்ந்த புணரியம்மடுத்தகைமான்
வாரணப்பொருள்கள்யாவும் வழுவறப்பயின்ற சிலர்

(இ-பொ-ரை)

நாலுவேதப்பொருள்களும் பல சாஸ்திர முதலான யாவுந் தெரிந்தபெரியோர்களுக்கும், தவமுனிவர்கள் முதலான யாவர் களுக்குங் காரண கர்த்தாவாக விளங்காநின்ற கலைவல்லோனாகிய அகத்தீஸ்பரன் ஆதியிலே நிறைந்த திரவியங்களை மிகுதியாகக் கொண்ட சமுத்திரத்தினீரையெல்லா முள்ளங்கையிலடக்கியது போல இன்னூட்டிலுள்ளவர்கள் தன்னுயிரைக் காக்கக்கூடிய கல்விப்பொருள்கள் யாவும் பிழையறக்கற்ற நற்குணத்தையுடைய வர்கள். எ-று.

(௩௪)

கங்கையுமறுகுந்தும்பையக்கலைமதியுமரவங் கொன்றை
தங்கியவேணிநாதனைத்தாங்கியவன்பனன்குந்
தங்குமுறையுந்தூக்கிச்சொல்லுவலெங்குஞ்சொல்லா
ரிங்குளருறு சொல்லுமியம்புவனளைகையோரி

டைய அயிராவதமும் நம்முடைய பேரில் யுத்தத்துக்குவருகிறதோ வென்றெண்ணி நடுங்கி வணங்கும் எ-று (௰௨).

மும்மதங்களாவன.

கடம்—கடாம்—தானம்.

ஐந்துகதிகளாவன.

மல்லகதி—மயூரகதி—வியாக்கிரகதி—வானரகதி—விடபகதி

வேறு.

சங்காடிக்குமுறுமிகுசலராசிப்பொருளுமணித்தாவத்தோடுங்
கொங்காடிப்பெருகுமணக்குன்றளிதருபொருளுநகர்கொடுத்தவன்
தெங்காடிக்கனிகளுமுதிருநாட்டுத்திரவியமுஞ்செழித்திலங்கு
மங்காடிமீதுகொளுமாக்களொலியளியொலியையடக்குமாதோ

இ-பொ-ளை

சங்கினங்கள் உலாவிச்சப்திக்காநின்ற பெரிய சமுத்திரத்திலுள்ள பொருள்களும், அழகிய காட்டிலுள்ள பொருள்களும், தேன்களானது பொங்கிப்பெருகியோடி வாசங்கமழுகின்ற மலைகளிலுள்ள பொருள்களும் நகரத்தின்கண் சிறந்த பொருள்களும், தெங்குகளானது அசைந்து கனிகளுதிருகின்ற நாட்டிலுள்ள பொருள்களோடு மலிந்து விளங்காநின்ற ஆவண வீதிகளில் நெருங்கி வியாபாரங் கொள்ளுகிறவர்களின் சப்தமானது சமுத்திரத்திலெழுகின்ற தரங்கங்களின் சப்தங்களையடக்கும் எ-று-மாதோ-அசை

திரவியம் ஐந்தாவன.

மலைபடுதிரவியம்—மிளகு-கோட்டம்-அகில்-தக்கோலம்-நிதமணிமானகர
காடுபடுதிரவியம்—இறால்-தேன்-அரக்கு-மயிற்பீலி-நாவி யாவரும்
மின் நாயு

முந்துப்பிறக்குமிடம் இருபது—அதாவது--மதி-மேகம்-சங்கு சிப்பி-மீன்-நந்து-முதலை-உடும்பு-தாமரை-வாழை-கமுகு-கரும்பு-செந்நெல்-மூங்கில்-யானைக்கொம்பு-பன்றிக்கொம்பு-பசுவின்பல்-நாகம் கொக்கு-நங்கைகள்கழுத்து.

நாடகந்தருந்திரள்முலைகனியவெல்நயமாய்ச்
சூடகம்பணிசூடிய்தோகையர்மணியின்
மாடமேனிலைவதனமுமதியெனவலித்து
மூடமாமுகின்மோகமோடெங்கணுமுலவும்

இ-பொ-ள்

யாவரும் விரும்பும்படியான வாசனையைத்தருகின்ற திரண்ட தனபாரங்களானது விம்மி நெருங்கிவளரவும் நாள்தோறுமகிழ்ந்து புதுமையானவளையல்களையும் ஆபரணங்களையுமணிந்துவிளங்காநின்ற மாதர்கள் மணிகளானது பிரகாசிக்கின்ற மேல்வீடுகளில் நின்று உலாவவும் அவர்களது வதனத்தைப்பூரணசந்திரனென்று நினைத்து மேகங்களும் ஆசையோடுவந்து எங்குஞ்சிறந்து உலாவும்எ-று (௰௯)

வாருறைத்தனமாதர் மின்மாடமேன்மண்டிக்
காருறைக்குழற்கூட்டியவகிற்புகைகமழ்ந்து
நீருறைப்புயலென விரிந்தடர்ந்ததிமிர
மேருறைச்சிகிகளுநடித்திடுந்தழைவிரித்தால்

ர்வது
டே

(இ-பொ-ள்)

கர்
ரால் கும்

அழகியகச்சணிந்ததனங்களையுடைய நங்கையர்கள் ஒளிசிற வீடுகளின்மேல்நெருங்கிக்கருமைதங்கிய கொடியகூந்த ஊட்டுகின்ற அகிற்புகைகளானது பரிமளித்து நீர்தங்கி தைப்போல அடர்ந்துபரவியெழுகின்ற அதிசயத்தை கண்ணிலங்காநின்ற மயிலினங்கள் மேகமெனக்கரு தோகைகளைவிரித்து ஆனந்தமாய்ஆடும் எ-று-ஆல்-அ

ந்தமணிமாநகர
ன் யாவரும்
யின் நாயு

வேறு.

சிலையெழுந்தவுருமட்டவார்செழுங்கமலக்கழலிணைசேர்திருச்சிலம்பு
மலையெழுந்தனமுனமேபாரமணியாரமுஞ்சவ்வாதுமாமின்
கலையெழுந்தவிடைசிறிதும்பொறுக்காதோயத்திரியென்கலகலென் னத்
தலையெழுந்தமருமலரித்தேனருந்தளிகளஞ்சியெழுந்தடங்கணேக்கி

இ-பொ-ரை.

மலையெனத்திரண்டெழுந்த தனங்களானது முன்னமேபாரம் அதில்முத்தாரங்களின்சுமையும் சவ்வாதுச் சுமையுங்கூடவர்ஆகா தன்மையாயிருக்கின்றதே, பிரகாசம்பொருந்திய சேலையையணிந்த நுண்ணிய இடையோ சிறிதும் பொறுக்காது(மெதுவாகநடப்பா யென்று சொல்வதைப்போல) அழகிய சிலையே உயிர்பெற்றெழுந்ததென்று புகழாநின்ற உருவத்தையுடைய மாதர்கள் தாமரை மலர்ப் பாதங்களில் அணிந்த சிலம்புகளானது கலகலவெனச்சப்திக்கவும் தலையிலே சூடிய வாசனை மிகுந்த பூவிலுள்ள மதுக்களைப் புசிப்பதற்காக வந்திருந்த வண்டுகளானது அச்செய்தியையறிந்து ஒருவாறு ந மதுமேற்பழிவந்தாலும் வருமென்று அஞ்சித் தடாகத்திற்குச் சென்றதுகள் எ-று. (௨௰)

வேறு.

வம்பிடும்பதுமத்திடையெழும்போதுமதுநிறைந்தம்முகமலரத்
தும்பியுள்ளுவந்துசுகமொடும்பருகித்துணியிலாவேட்கைகொள்வது டே
வம்பிடுங்கண்ணீரிளமதிவதனமலருமோரைதொறுங்கொழுகர் ஞம்
வம்பிடுந்தனங்கள்ஞெழுங்கவேபுல்லிமர்விதழமுதருந்துவரால்

(இ-பொ-ரை)

வாசனையைத்தராநின்றதாமரையின்கண்ணெழுந்தமதிமாநகர் இனிதான மதுக்களானது பொங்கி அப்புஸ்பங்கள் பூ யாவரும் ...யின் தாயு

(இ-பொ-ள்)

பெரியவுலகமுழுமையுங் காத்துவந்தாலும், கல்லேர்த்திவ்யப் படைத்தாலும், சொல்லாலுயர்ந்த நான்குவேதங்களை ஆராய்ந்தாலும் அனேகமான தருமங்களைச்செய்தாலும், இல்லறத்தைவிட்டு த்துறவியானலும, புதுமையான யாகங்களைச்செய்தாலும், உறுதியான தவங்களைச்செய்தாலும் வருதிதருங்கருணையிற் சிறந்த முத்தாச குலப்பெருமானது தலத்தைக்கண்டு வணங்காதவர்களுக்குப்பேரின்பவீடு இல்லை எ-று (௨௫)

வேறு.

சித்தருங்கனதேவர்கந்திருவரிந்திரனு
முத்தருஞ்சதுர்மறைமுகுந்தனுஞ்சதுர்முகனு
மெத்தலத்தருஞ்செறிந்தவிரதியோடெழில்சே
ரித்தலத்தினுக்கிணையிலையெனப்பணிந்திடுவோர்

(இ-பொ-ள்).

சித்தர்களும் மிகுந்ததேவர்களும், கந்திருவர்களும் தேவேந்திரனும், பத்தர்களும், பிரமனும் நான்குவேதங்களையுடைய திருமாலும இன்னம்பூமியின்கண்ணே எந்தத்தலங்களிலுமுள்ள யாவர்களும் இந்தத்தலத்திற்கு இணையில்லையென்று பணிவார்கள் எ-று (௨௬)

வாரிசூழுலகனைவரும் வழுத்தவிண்ணுறைமா
புரிமேவுமின்னகர் வளங்கழறினமிதுகாற்
பாரின்மீறிய தனஞ்சயன்றனுவினற்புகழாற்
வர்க்கலோங்கியநிவளஞ்சிறிதினிப்பகர்வாம்

(இ-பொ-ள்).

தங்கிய ...ல்சூழ்ந்தவுலகின்கண்ணே யாவரும்புகலச்சிறந்த தேவலோகங்கமு... சனுகிய தேவேந்திரனும் ஆசைகொள்ளத்தகுந்த விட்டிலின்குளரு...

ராபுர நகரச்சிறப்பை யிதுவரையுஞ் சொன்னோம் இனிமேல் போரில்சிறந்த வலிமையுடைய அருச்சுனன் கைவில்லினது புகழா லெழுந்து பூமியிலிதுவே மேலானதென்று சொல்லப்பெற்ற விசய மாநகரியின் சிறப்பையுஞ் சிறிது சொல்லுவோம் எ-று (உஎ)

நகரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ௰க.

---

இஃது

## தீர்த்தச்சருக்கம்.

---

தாண்டவம்புரியுந்தாளுவைப்பாவுஞ்சக்கரக்கண்ணனற்பதமே [க்க
பூண்டவரரவக்கொடியனைச்சயித்துப் பொன்னகர்ப்பதிவிடந்துடை
வாண்டவருலகையளியொடும் புரத்தெண்ணதிபரிலுதிபுகழணியும்
பாண்டவர்தனில் முன்னோன்மகமிழைத்துப் பவமதையளித்திடக்
கருதி

(இ-பொ-ள்).

தில்லையம்பதியில் நடனஞ்செய்த சிவபெருமானை வணங்காநின்ற சக்கராயுதத்தையுடைய கண்ணனது அழகிய திருவடிகளை சென்னியிற்சூடி சர்ப்பக்கொடியைப்படைத்த துரியோதனுதிச யெல்லாம்வென்று தேவலோகத்திற்கு அரசனுகிய தேவேந்திம் அதிசயித்துரைக்கும்படி உலகமுழுமையும் அன்போடுகூ அரசாட்சிசெய்து கணக்கிலேமிகுந்த மன்னர்களுக்கெல்லா னென்று மிகுந்தபுகழையே ஆபரணமாக அணிந்துவாழாநிண்டவர்களில் தருமராசனானவர் யுத்தத்திலே சகோதரர்மாதர்கர னபந்துக்களையெல்லாங் கொலைபுரிந்த பாவங்களானது யாவரும்டி அசுவமேதயாகஞ்செய்யவேணுமென்றெண்ணினர் பின் வாயு

புக்கத்திலே ஒருநதியுமுண்டுபண்ணி முறையேதன்னியமங்களைக்கு றைவன்றியில் செய்து முடித்தபின் இந்நதியிலே தீர்த்தமாடிய வர்கள் சிவபெருமானது கிருபையைப்பெற்று வாழ்வார்களென்று வாக்குச்சித்தியளித்துவிட்டுச் சென்றான் எ-று. ஆல்-அசை (௩)

மன்னவன் வகுத்தவண்மையால்விசயமாநதியருச்சனதீர்த்த
மென்னவேசாற்றப்புவியுளோராடியிடர்தீபாவமும்போக்கிப்
பொன்னகர்த்தலைவனிணையிலாதானபோகமுமெய்திமாவீசன்
பொன்னடிக்கருணைபெறுங்கதியடையும் புதுமையும்புகலுவதெளி
தோ

(இ-பொ-ரை)

அருச்சுனராசனானவன் இந்தயிடத்திலுண்டாக்கிய புகழினால் விச யநதியென்றும் அருச்சுனதீர்த்தமென்றும் சிறந்த பெயருண்டாகி இ ப்பூமியிலுள்ளவர்களில் அநேகர்வந்து தீர்த்தமாடி தன்னுடைய து ன்பங்களையும் மிகுந்தபாவங்களையும் போக்கிதேவலோகத்திற்கு இ றைவனாகிய இந்திரனுக்குச்சரியானபோகபாக்கியங்களைப்பெற்று இ றுதியில் சிவபெருமானது திருவடிக்கருணையால் நல்லபதவியைய டைந்து வாழாநின்ற அற்புதங்களைப்பகுத்துச் சொல்லவேண்டுமா னால் இதுஎளிதல்ல எ-று (௪)

அணங்கணிக்கிலங்குங்கன்னிமாநகரிலாலயத்திலேமணவாளன் [ன்ப
றுணங்கைகயிலெவரும்வணங்கவின்னதியிற்றோன்றலுமுனிவரோடெ
ரிணங்கமாபூசைபுரிதலுமதைமாவினிமையோடணிதலேபோல
மணங்கமழலர்கள் வருதலுமலிந்திவ்வணையினிற்கிரியெனவணங்கும்

(இ-பொ-ரை)

அழகையேஆபரணமாக அணிந்திலங்காநின்றகன்னிமாநகர த்தில்வாய்த்த ஆலயத்தில் நடந்துவருகிற திருவிழாவில் யாவரும் வணங்கிவேண்டிய நன்மையைப்பெறும்படி மகாலட்சுமியின் நாயு

கனகிய சென்ன தேசவப்பெருமாளானவர், எழுந்தருளியின்னதியி
ன்கண்வந்து காட்சிகொடுக்கிறதினாலே மேன்மையைப்பெற்றதும
ன்றி முனிவர்களும் அன்பர்களும் இருகரைகளிலுமிருந்து எம்பி
ரானது திருவுள்ளமானதுபொருந்தும்படி அருச்சனைகள்செய்துவருகி
ற வாசனையுடைய புஷ்பங்களை அன்பர்களினுள்ளமகிழும்படி கங்
காதேவியானவள் அழகியமேனியெங்கும் அணிந்துக்கொண்டதைப்
போலச்சிறந்துவந்து இருகரையிலும் ஒதுக்குகின்ற விசித்திரமான
து முத்தரசகுலப்பெருமானைத் தரிசனைசெய்யவந்தவர்கள் கண்
ணாரக்கண்டு களிக்கும்படி புட்பமலையைப்போல நிறைந்து பிரகா
சித்தது. எ-று (ரு)

மணிதரும்பதியின்கிதருஞ்சார்தவாடையரத்கதிபெறுங்கோடி
மணிதருங்குரம்பினறைதருங்குசமுமதுதருங்குருகினமெவையும்
திணிதருமுளத்தால்வாயினால்விழியாற்செவியினாற்கரங்களால்மேவி
லணிதருமுழுகியரனகரடைந்தவருந்தவர் கோடியுண்டத்தில்

(இ-பொ-ரை)

அழகுசிறந்தவிட்டிலாபுரத்தின்கண்ணே விசயநதியானது கொடுக்
கின்ற குளிர்ச்சியாகிய வாடைபட்டு புதுமையான முத்துக்களை ஒ
துக்கி விளங்குகின்ற யின்னதிக்கரையிலே வளர்ந்து பரிமளிக்கின்
ற விருட்சங்களும் அதில்வந்துறைகின்ற பட்சிகளும் முத்தியடையு
ம் இதுவன்றி திண்மையோடு மனதினால் நினைத்தாலும் வாயினால்
துதித்தாலும் கண்களால் தரிசித்தாலும் வேண்டிய நன்மையைத்த
ரும் இதிலே தீர்த்தமாடி சிவபெருமானுடைய கயிலாயத்தை யடை
ந்துவாழுகின்ற முனிவர்கள் அனேகருண்டும் எ-று (சு)

மேரினிற்கயிலைதவத்தினிற்சிவயாமினியமுதரிலொருமாலாம்
பாரினிவரியிற்பிரணவஞ்செபத்திற் பகருமட்டாட்சரமறையைக்
கோரினற்காமமரணுருத்திராரிற்குழகருந்ததிபிராமணியில்
காரியிற்றிருதானத்தனங்கோவினன்மதியாதவனகையில்

(இ-பொ-ள்)

மலைகளுக்குள்ளே கயிலாயமும் விரதங்களிலே சிவராத்திரியும் தேவர்களுக்குள்ளே விஷ்ணுவும் எழுத்திலே பிரணவமும் மந்திரங்களுக்குள்ளே அட்டாட்சரமும் வேதங்களுக்குள்ளே சாமவேதமும் உருத்திரர்களுக்குள்ளே சங்கரனும் பிராமணஸ்திரிகளுக்குள்ளே அருந்ததியும் ஸ்திரிகளுக்குள்ளே இலட்சுமியும் தானங்களுக்குள்ளே அன்னதானமும் கிரகங்களுக்குள்ளே சந்திரனும் தேசங்களுக்குள்ளே சூரியனும் எ-று (எ)

சங்கரன்றநியேதகுதியாமறையோர் சாதியிற்பொறையினிற்பூமின்
றங்குமத்திரத்திற் பிரமவஸ்திரமீதலத்தினில்விட்டிலாபுரமுஞ்
சங்கையாயுகத்திற் கிருதமாங்கபிலைதனிலதிகாமதேனுவபோற்
கங்கையில் விசயமாநதியெனவுங்கதித்தது தாரணிமுழுதும்

(இ-பொ-ள்)

பூசைகளுக்குள்ளே சிவபூசையும் சாதிகளுக்குள்ளே பிராமணச்சாதியும் பொறுமையுடையவர்களுக்குள்ளே பூமிதேவியும் அஸ்திரங்களுக்குள்ளே பிரமாஸ்திரமும் க்ஷேத்திரங்களுக்குள்ளே விட்டிலாபுரமும் யுகங்களுக்குள்ளே கிருதயுகமும் பசுக்களுக்குள்ளே காமதேனுவும் எப்படி உத்தமமானதோ அதுபோல தீர்த்தங்களுக்குள்ளே விசயநதியேமேலென்று பூமியிலியாவரும் புகழும்படி வந்து சிறந்தது எ-று (அ)

எண்ணிலாப்பிறவியெடுத்துமுன் தருமமிகுத்தராளடவருகி
யெண்ணிலாப்பிறவியெடுத்திடமெறந்தருவிருப்பிறப்பாளராயினமா
னெண்ணிலாப்பிறவியெடுத்தவருதிப் பரித்தலந்தனியைம்பெறவே
யெண்ணிலாப்புனலுள்ளிநிற் புனலாட்டிரிழிவுக்கத்தபத்தினுமிழிவால்

(இ-பொ-ளா)

அநேககோடி சன்மங்களில் செய்த புண்ணியத்தினால் நாசன னங்கிடைக்கின்றது அப்படியனேககோடி சன்மங்களில் செய்த புண்ணியத்தினால் பிராம்மணச்சனனங்கிடைக்கின்றது இதுபோல அனேககோடி சன்மம் புண்ணியஞ்செய்தவர்கள் வேண்டிய நன்மைகளைப்பெறும்பொருட்டு இந்தச்சேத்திரத்தில் வந்து பிறப்பார்கள் ஆகையால் பூமியிலே மிகுந்த நதிகளுக்கெல்லாஞ்சிறந்த இந்த விசயமாநதியில் ஸ்நானஞ்செய்யாதவர் இழிவாகிய கத்தபத்திலுஞ் சேடானவர்கள் எ-று ஆல்-அசை (௬)

### வேறு

பொன்னிநாயகன் புட்கரப்பூவடிபொறுத்துப்
பொன்னிலங்குமாபுவிக்கிருநாலுசேர்புரக்கும்
பொன்னிலங்குமின்னதிவளம்புகன்றனமிதுகாற
பொன்னிமாநகர்ச்சிறப்பினிற்சிலவினிப்புகல்வாம்

(இ-பொ-ளா)

மகாலட்சுமியின் நாயகனாகிய ஸ்ரீகிருட்டிண மூர்த்தியானவர் தாமரைமலர்ப்பாதத்தால் ஓரடியாக அளக்கும்போது தாங்கியழகு பிரகாசிக்கின்ற பெருமையையுடைய உலகத்திற்கு எட்டுஐசுவரியங்களையும் கொடுத்துவாராநின்ற இலட்சுமியானவளுறைந்து வளமிகுந்த பூமியிற்சிறந்த இந்நதியின்சிறப்பை இதுவரையுஞ்சொன்னோம் இனிமேல்காவேரிமாநகரின் சிறப்பையும் எம்மால்தெரிந்தமட்டுஞ் சிறிதுசொல்லுவோம் எ-று (௭)

### தீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௬௨.

இஃது

## காவேரிநகரச்சருக்கம்.

நீடுவாரிநெருங்கியகேணிசூழ்
கோடுவோதிவைக்குநெயில்வான்றொடச்
சேடுமாமணிக்கோபுரத்தேசுகன்
மாடமாளிகை மண்டிநிறைந்ததால்

(இ-பொ-ள)

நெடிய சமுத்திரம்போலுஞ்செறிந்த அகழிசூழப்பெற்ற மதிலானது மலையேவந்துவளைந்து அமைந்ததோவென்று யாவரும் புகலும்படி ஆகாயத்தையளாவிநிற்கவும், அழகிய மணிகளாலழுத்தி வாய்த்தகோபுரங்களின் ஒளியானது பிரகாசிக்கவும் நல்லமாடங்களும் மாளிகைகளும் மேடங்களும் நெருங்கிச்சிறந்து விளங்கியது எ-று-ஆல்-அசை (௧)

பொன்னுமுத்தமும்பூத்தெழிற்பூமிசை
மின்னும்பான்மைபன்வெஞ்சுடரோவெனப்
பொன்னகர்ப்பதியுந்தியுளெண்ணமா
சென்னிகோவிற்சிறந்துவிண்டொட்டதால்

(இ-பொ-ள)

அழகியபூமியின்கண்ணேமேன்மையைப்பெற்றசோழமகாராஜனானவன் பொன்னினால் அமைத்து மணிகளையழுத்திச்செவ்வையாகக் கட்டிய மாளிகையானது, தேவலோகத்து அரசனாகிய இந்திரனுங் கண்டு மனத்துள்ளே நினைத்து ஆசைகொள்ளும்படி அனேக சூரியப்பிரகாசமோவென்று மதிக்கத்தக்கதாக ஆகாயத்தையளாவித் தோன்றியது எ-று-ஆல்-அசை (௨)

ஓதிச்சாலையுறுபடைச்சாலையுங்
கீதச்சாலையுங் கின்னரச்சாலையும்
வேதச்சாலையும் வேள்வியின்சாலையு
மீதனித்தனிமிக்கவிளங்குமால்

(இ-ளொ-ரை)

கல்விச்சாலைகளும், பல ஆயுதங்களின் தொழில்களைப்பயிலு கின்ற சாலைகளும், சங்கீதச்சாலைகளும், வீணைவாசிக்கின்றசாலைகளும் அந்தணர்கள்விரும்பாநின்றவேதசாலைகளும், பெரியோர்கள்நடத்துகின்ற யாகசாலைகளும் இவைகளெல்லாந்தனித்தனியே மிகுந்து விளங்கியது எ-று-ஆல்-அசை (௩)

நாலுதிக்கு மனிக்துவிளங்கறச்
சாலையீதெனச்சங்கரியின்புற
வேலைசூழ்புவிமீதுறுமேவர்க்கும்
பாலுமின்சுவையோடேபெணித்திடும்

(இ-ளொ-ரை)

கடல்சூழ்ந்தபூமியின்கண்ணே வந்தவர்களுக்கெல்லாம் இல்லையென்னாது பால்பழங்கள் அறுசுவையோடும் இனிய அமுதளித்து வராநின்ற தருமச்சத்திரங்கள் இதுவேயென்று முப்பத்திரண்டு அறங்களையும்படைத்துவளர்க்கின்ற பார்வதாதேவியும் சந்தோஷம் அடையும்படி இன்னாட்டில் நாலுபக்கமுமிகுந்துவிளங்கியது எ-று (௪)

தேடினுங்குறுகாததிருப்பொரு
ளுடியின்குயம்பெறவேதருங்
கோடிகோடியெனப்புகழ்கொண்டவங்
காடியின்வளங்கத்துதற்கார்வலார்

(இ-பொ-ள்)

பூமியின்கண்ணே இதுபுதுமை புதுமையென்று யாவரும் அதிசயிக்கும்படி புகழ்படைத்துச்செழித்து விளங்குகின்ற ஆவணவீதிகளின் சிறப்பை யெடுத்துச்சொல்ல யாவர் திறமையுடையவர், சம்பாதிக்கவேணுமென்று அலைந்தாலும நம்கைவசங்கிட்டாத அருமையான பொருள்களெல்லாம தன்மையுடையும்படி இங்குவிரும்பிக்கொடுக்கும் எ-று (ரு)

வாகைசூழும்மதவாரணத்தானையும்
வேகமாபுரவிப்படையுங்கவி
னாகமென்னும்விமானமுநன்குக
னாகவோங்குமங்கண்ணல்களிக்கவால்

(இ-பொ-ள்)

வெற்றியையடைந்துமும்மதங்களையும்பொழிகின்ற யானைப்படைகளும் ஐந்துகதிகளையுடைய குதிரைப்படைகளும் அழகிய மலைகளோவென்று விளங்காநின்ற தேர்களும் நன்மையாக மிகுந்து இன்னகரத்து அரசனாகிய சோழமகாராஜன் மனமகிழும்படி சிறந்தது எ-று-ஆல்-அசை (௬)

விண்டுவாகனன்மீமுடிதங்குமணின்
தொண்டுவாரந்துலக்கியதோரணங்
கொண்டுவீதிகளெங்குங்குழகிடக்
கண்டுகண்டுகளிப்பவர்கோடியால்

(இ-பொ-ள்)

மேகவாகனனாகிய தேவேந்திரனானவன் அழகிய சென்னியிற் சூடிய கிரீடத்தில் வைத்தழுத்திய மணிகளைப்போல நவரத்தினங்களும் பிரகாசிக்காநின்ற தோரணங்களை நெடிய வீதிகளெங்கும் அழகாகக்கட்டியவைசின்றதைப்பார்த்து எத்தனையோகோடிபெயர்கள் ஆனந்தமடைவார்கள் எ-று-ஆல்-அசை (௭)

ஓடியோடியுலோபரைத்தேடிலென்
பாடியெம்பதிபால்வருவீர்களென்
றூமோவிருதுக்கொடியந்தமேய்
மாடிமேலெழுமாமணிமாடமேல்

(இ-பொ-ரை)

ஆசு. மதுர. சித்திர. வித்தாரமென்னுங்கவிகளைப்பாடாநின்ற வித்துவான்களே கால்கள் கடுக்க ஓடியோடியலைந்து ஒன்றுங்கொடுக்காத பிசனரைக்கண்டுக்கொள்வதினாலே, உங்களுக்கு என்ன பிரயோசனமிருக்கின்றது அதைப்பற்றி மனவருத்தப்படாது யான் சொல்வதைக்கேளுங்கள் கொடுக்கக்கூடிய வள்ளலென்று பெயர் படைத்த எந்தையாகிய சோழமகாராஜன் சமுகத்திற்கு வாருங்கள் வேண்டிய தனங்களைப்பெற்றுக்கொள்ளலாம் என்று அழைப்பதைப் போல மாளிகைகளின் மேல்=மணிகளையழுத்திப்பிரகாசிக்கின்ற மேல்வீடுகளில் கட்டிய விருதுக்கொடிகள் அழகாக மிகுந்து ஆடும் எ-று (அ)

வைசயந்தம்வழங்கியவென்னவூ
வைசியர்திருமன்றமுமாதன
வைசியர்திருமன்றமுமன்றல்கோ
வைசியர்திருமன்றமுமிக்கவால்

(இ-பொ-ரை)

தேவேந்திரனுடைய மாளிகையோவென்று புகழும்படி இலங்காநின்ற வேளாளர்களுடைய தெருக்களும் மிகுந்த தனங்களைப் பெற்ற செட்டிகளினுடைய தெருக்களும் பால்வாசனைதங்கிய இடையர்களுடைய தெருக்களும் மற்றும் பலசாதிகளுடைய தெருக்களு மிகுந்து விளங்கியது எ-று-ஆல்-அசை (கூ)

மின்னுமாளிகைமேலொயிலாயின
அன்னமாதரைசந்திடமாமுகந்
தன்னைக்காணலுந்தன்னைநொந்தம்புலி
வின்னமாகிற்குவித்துட்கியேகுவன்

(இ-பொ-ரை)

பிரகாசம்பொருந்திய மேல்வீடுகளின்மேல் இளையமாதர்கள் நின்றுலாவவும், அவர்கள் வதனத்தைக்கண்ட சந்திரனானவன், களங்கமின்றித்தன்னிலுமேலாக விளங்குகின்ற தன்மையை மதித்துப் பூரணசந்திரனிதுவேயென்று சாதாரணமாகவருவதற்கு மனதுநாணித்தன்னைத்தானே நொந்துக்கொண்டு கிட்டிய மேகத்தின் கண்ணே மறைந்து செல்லுவான். எ-று (௰)

வம்புசெய்திடும்லைவகலும்விம்மியே
வம்புசெய்தனமாதரின்மீதுவேள்
வம்புசெய்முனம்வல்லவர்காமநூல்
வம்புசெய்திரவைக்கழிப்பார்களால்

(இ-பொ-ரை)

மலையெனத்திரண்டு கச்சானது படீரெனவெடிக்கும்படி நாள்தோறும் விம்மி வளர்ந்து வாசனைகளை யணிந்து பரிமளிக்காநின்ற தனபாரங்களையுடைய மாதர்களின்மேல் மன்மதனானவன் சண்டைசெய்யவருவதற்குமுன்னமேநாயகர்கள் அறிந்து காமப்பிணியென்னுந் துன்பம் வாராமல் சமயந்தோறும் கொக்கோக முறைப்படி புதுமைகளைச்செய்து மருவி இரவைப்போக்கி வாழ்வார்கள் எ-று. ஆல் - அசை (௰௧)

மேகமீதளிமிக்கவளித்துக-
ழேகமாய்விளங்கேதரகஞ்சையர்
யோகமேகமையுண்டவேணமீதுசம்
யோகமேசெய்துயுக்திகளிப்பரால்

(இ-பொ-ரை)

மேகத்திலிருந்தெழுந்த மழையானது மிகுந்து பொழிவதனால் பயிர்களெல்லாங்குறைவன்றியில் விளைந்து செல்வங்களைக் கொடுக்க அதைப்பெற்றவரானின்ற மங்கையர்களெல்லாம் அதிட்டங்களையேபெற்று இனிய அமுதுக்களைப்புசித்து மெல்லியபஞ்சணையின் கண்நாயகரோடு மகிழ்ந்துலீலைகளையே செய்து மனமகிழ்ந்துவருவார்கள் எ-று-ஆல்-அசை (௰௨)

சொன்னமேடையிற்றோகையர்கூடிய
வன்னக்கந்துகமாடவந்தொலி
முன்னமேபொறுக்காதமுலைகளா
லன்னமேமருங்காடலுஞ்சொன்னமே

(இ-பொ-ரை)

அன்னம்போலும் நடையைப்பெற்ற மாதர்களேபண்டே உங்களிருதன பாரங்களையுந்தாங்காத சிற்றிடைகளானது பொன்னினாற்செய்த மேடையின்மேல்கூடி அழகியவன்னப்பந்துக்களை வீசி விளையாடாநின்ற நடனத்திற்கும்பொறுக்குமோ துவளுகின்றதே சிறிதுகவனியுங்கள் யாங்கள் சொல்லவேண்டியதைச் சொன்னோம் என்பனதப்போல கைகளிலணிந்தபொன்வளையல்களானது கலகலவெனக்குலுங்கும் எ-று (௰௩)

இப்புரத்தரியாவெழுங்கந்தை
வெப்புறத்துமியம்பச்சத்திரந்
தப்பிலாதவிளங்கிடத்தாரையாய்ச்
செப்பமிட்டவிசித்திரமாடமால்

(இ-பொ-ரை)

இந்தக்காவேரிமா நகரத்தில் சோழமகாராஜனானவன் மரகதத்தினால் ஆயிரந்தூண்களைக் குறைவன்னியில் வரிசைவரிசையாக

கிறுத்திச்செவ்வையாக நற்பணிகள்செய்து அமைத்த விசித்திரமண்டபமானது எந்தபக்கத்திலுள்ளவர்களுங்கண்டு புகழ்ந்துரைக்கும்படி விளங்கியது எ-று-ஆல்-அசை (௰௪)

வன்னமாரும்திக்கவிலைமிகும்
பொன்னிலாடிப்பொருந்தியமாடமுன்
னென்னகோடியிதென்னமணித்திரள்
மின்னுமாவரியாசனமீதுவால்

(இ-பொ-ரை)

யாவராலும் விலைமதிக்க அடங்காத மாற்றுயர்ந்து விளங்காநின்ற பொன்னினாற்செய்தமைத்த ஒருமண்டபத்தின் கண்ணே இதுவென்ன புதுமைகள் இதுவெதிலிருந்து உண்டாகிய மணிகளென்று வியப்படையும்படி பிரகாசிக்கின்ற சிங்காசனத்தின்மேல் எ-று ஆல்-அசை (௰௫)

மிக்கவெண்முணிமின்னிவிளங்கிய
சக்கரச்சுசிச்சாபைசெயக்கமழ்
சக்கையாரூரச்சோழனிருந்தனன்
சக்கரன்மதன்சேயெனச்சாற்றவால்

(இ-பொ-ரை)

மிகுந்தவெண்முத்துக்களை யணிந்துபிரகாசித்தெழுந்த சந்திரவட்டக்குடை நிழலில் வாசனைமிகுந்த மாலைகளைத்தாங்கிய மார்பையுடையசோழமகாராஜனானவன் இந்திரனோ அல்லது கந்தர்ப்பனோ கந்தப்பனோவென்று அதிசயிக்கும்படி கொலுவிருந்தான் எ-று (௰௬)

அட்டதிக்குளநுன்னவருந்திறை
கட்டியும்பணிசெய்திருகைதொழுத்
திட்டமாயெதிர்காலமுஞ்செப்பிடத்
தட்டிலாவுமமச்சர்களுஞ்சூழவால்

(இ-பொ-ரை)

எட்டுத்திசையிலுமுள்ள மன்னர்களெல்லாம்வந்து பகுதிகட்டி சோழமகாராஜனவன் ஏவிய தொழில்களையுஞ்செய்து துதிக்கவும் உறுதியாக அன்றாடம் வருங்காரியங்களையறிந்து தெளிவாகச் சொல்லாநின்ற வல்லமையுடைய மந்திரிகள் இவருமல்பக்கத்திலே சூழ்ந்திருக்கவும் எ-று-ஆல்-அசை (௰எ)

ஆரணத்தய்யரங்கணிதஞ்சொல
வாரணக்கவிவாணர்கள்வாழ்த்திடப்
பூரணக்குடப்பொற்குயமின்னினை
வாரணங்குகளாகந்தவீசவால்

(இ-பொ-ரை)

நான்குவேதங்களையுமாராய்ந்து தெளிந்த அந்தணர்கள் வந்து சோதிடம்பார்த்து நன்னிமித்தஞ்சொல்லவும் சமுத்திரம்போல மிகுந்த கல்வியையுடைய வித்துவான்கள் புகழ்ந்து மங்கலம்பாடவும் நிறைந்த பொற்குடம்போலுந்தன பாரங்களிலங்காநின்ற இளைய மாதர்கள் இருபக்கமும்நின்று அழகியவெண்கவரிவீசவும் எ-று-ஆல் அசை (௰அ)

சூடகம்புனைசுந்தரத்தோகையர்
மாடகந்தடவக்கனமாதராய்ப்
பாடகந்தனையோர்விடப்பாடிகள்
ஆடகம்பதமாதர்நடிக்கவால்

(இ-பொ-ரை)

கைகளிலே வளையல்களையணிந்த அழகியமாதர்கள் மகிழ்ந்து வீணைமுறுக்காணியைச் சீர்திருத்திச்சுருதிசேர்த்து வாசிக்கவும் கால்களில் அணிந்தபாடகம் சிலம்புகள் கலகலவென்று சப்திக்கும்படி சங்கீதங்களைப்பாடி விநோதமான நடனங்கள் ஆடவும் எ-று-ஆல் அசை (௰௯)

சென்னிமீதுதிகழ்மணிச்சேகரங்
கன்னமீதுகதிர்க்குழைமொய்ம்பிலார்
பின்னையாரமதாணிபிறங்கிவாள்
மின்னுமாழிக்கரதில்வியப்புற

சோழமகாராஜனுடைய சிரசின்மீது திரட்சியுள்ள மணிகளைய முத்திய கிரீடமானது இலங்கவும் இருகாதலுஞ்சூரியனைப்போலப் பிரகாசம் பொருந்திய குண்டலங்கள் இலங்கவும் மகாலட்சுமியானவள் வசிக்கானின்றதோள்களிலே வாசனைமிகுந்த பூமாலைகளும இரத்தினபரணங்களும் இலங்கவும் அழகிய மோதிரங்களைத்தரித்த கையிலே யாவரும்அதிசயிக்கும்படி கூர்மையைப்புடைத்தவாளாயுதமிலங்கவும எ-று (உ௰)

வந்தெதிர்த்த மன்மன்னரைவென்றுபேர்
தந்தபற்பலதானைபிடித்தகைத்
தந்திரங்களுஞ்சக்கரமபோனிறைந்
தெந்தவேளையுமேந்தலேயேத்தவால்

(இ-பொ-ள)

யுத்தத்தின்கண்ணே வந்தெதிர்த்த பகைவர்களாகிய அரசரை வென்று பெயர்படைத்த பலஆயுதங்களைப் பிடித்த கைகளையுடைய சேனைகளெல்லாம் சமுத்திரம்போலச் சோழமகாராஜன் சமுகத்தில் நிறைந்து எங்களுக்கு என்ன கட்டளையென்று எப்பொழுதும் பணிந்து நிற்பார்கள் எ-று- ஆல்-அசை (உ௧)

எரிலங்கியவின்முகங்கண்டவர்
சூரிழந்து சுகம்பெறச்சூரியன்
தாரினீங்கிடத்திரைஞ்சுயில்மும்
மாரிவெய்தெங்குமாவலம்பொங்கவால்

(இ-பொ-ளை).

அழகு நிறைந்து பிரகாசிக்கின்ற இனிமையான முகத்தைத் கண்டு தரிசித்தவர்கள் துன்பங்களை நீக்கி மிகுந்த சுகங்களையனுபவித்து வாழவும் மாதந்தோறு மூன்றுமழை தவறாதுபெய்து பூமியானதுசெழித்து விருத்தியடையவும் சோழமகாராஜனனவன் நீதியோடு அரசாட்சி செய்துவந்தான் எ-று-ஆல்-அசை. (௨௨)

இந்தமீளி நன்னீரடியைத்தொழ
வந்த மீளிகள்மாமுடி தேய்ந்தெல்லுஞ்
சிந்துபூழிகள் செயமணிவிண்டிங்கே
வந்ததோவென்வாயிலின்மின்னுமால்

(இ-பொ-ளை).

இந்தச்சோழமகாராசனுடைய அழகியபாதங்களை வணங்குகிறதற்காக நாள்தோறும் எட்டுத்திசைகளிலுமிருந்துவந்து அரண்மனை வாயிலின்கண்ணே நெருங்கி உள்ளேசெல்லும்போது கூட்டத்தினுல் இவர்கள் சென்னியில் அணிந்து விளங்காநின்ற இரத்தினக்கிரீடங்கள் ஒன்றோடொன்று உரசிபொன்னினுடைய தூள்களும் மணிகளின் தூள்களும உதிர்ந்து செவ்வையான மணியிலே தான் இந்த வாயிலில் வந்து வளர்ந்ததோவென்று புகழும்படி பிரகாசிக்கும் எ-று-ஆல்-அசை. (௨௩)

கோதிலாதவெங்கோனுறைஞ்சுமுன்
சாதுவாயுண்ணுஞ்சாரங்கத்தோடு நீ
ரோதுகேரியுமொன்றியுமாடியே
பேதமில்லுயிர்யாவும்பிறங்குமால்

(இ-பொ-ளை).

குற்றமில்லாத நீதியோங்கும்படி காத்துவராநின்ற வெங்கள் சோழமகாராஜனுடைய இருக்கையினுல் வலிய புலியும், மானும ஒரு

துறையில் நீர் அருந்தும் கிரியும் சர்ப்பமும் சேர்ந்த விளையாடும் இவ்விதமாகவே, பேதமில்லாது சகலவுயிர்களும் வளர்ந்துபெருகிக் களித்திருக்கும் எ-று-ஆல்-அசை (உச)

இந்நிலைவளரின்னகரின்வளந்
தந்தமாவொருதாரணியுந்தரா
வின்னையாமினிமேற்றனைவியர்
சொந்தக்காதைதனிற்சிலசொல்லுவாம்

(இ-பொ-ரை).

மகாலட்சுமியானவள்வசிக்கின்ற இந்தக்காவேரிமாநகரமான து தருகின்ற இனிமையான செழிப்பைப்போல ஒருபூமியுந்தராது இதனுடைய ஆச்சரியங்களை யெடுத்துக்கூற வளருமேதவிரச் சுருங்காது ஆகையால் இனிமேல் தனவைசியர்களது சரித்திரத்தையுஞ் சிறிது சொல்லுவோம் எ-று (உரு)

காவேரிநகரச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ஙயச.

உ

இஃது

தனவைசியர்குலச் சருக்கம்.

கன்னியுமைபாகனிருகழலைமன மேவிச்
சென்னிமிசைவைத்துமிகுசித்துபுனைபாரில்
நன்னிலைசெய்யும்படிவரேவருனிந்து
தன்னினியசிஷரோசேவுசனைமிசத்தால்

(இ-பொ-ரை).

அழகிய இளமைப்பருவமாருத பார்வதாதேவியை ஒருபாகத்தி லே வைத்து மனமகிழ்ந்து திருவடபுரிக்குவராநின்ற சிவபெருமா னது திருவடிகளை விருப்பமாகச்சென்னியிற்சூடி, கொடிய கடல் சூழ்ந்த பூமியின்கண்ணே அருமையான தவங்களைச்செய்து நன்மை களைப் பெறுகின்ற முனிவர்களெல்லாஞ்சிறந்த தனது சீஷர்களோ டுங்கூடிபரிசுத்தமுடையனைமிசாரணியத்தில் எ-று-ஆல்-அசை (க)

மேதகமகம்புரியமெய்யகமுளெண்ணிப்
பேதகமில்வந்துறுகிபெறகமுயலுங்கால்
பாதகம்கற்றுமுற சூதமுனி பண்பாய்ச்
சாதகமதாகமகசாலைவயினடுத்தார்.

(இ-பொ-ரை).

மேன்மையாயுள்ளயாகமொன்றுசெய்து தங்களுக்குவேண்டிய நன்மைகளைப் பெற்றுக்கொள்வதற்காக உண்மையே குடிகொண் டெழுந்தமனத்தினுள்ளே நினைத்து மிகுந்த முனிவர்களும் அவர் களுடைய சிஷர்களும் வேற்றுமையில்லாது ஒருங்குசேர்ந்து ஆர ணியத்திற்கு வந்து அதற்குவேண்டியமுயற்சிகளெல்லாம் செய்யும் போது தன்னையடுத்தவர்களின் கொடியபாவங்களையெல்லாம் நீக் கிக்காப்பதற்கு மகா வல்லவராகிய சூதபகவானானவர் இம்முனிவர் குழாங்களினது காரியஞ்சித்தியாகும்படி விளங்காநின்ற யாகசாலை யின் முன்பாக தகுதியோடும்வந்து சேர்ந்தார் எ-று (உ)

மிக்கமணிநீறிலகுமெய்யுமரைவுரிவே
தக்கருணைபொழியுமுறுதகைமையுமறிந்தார்
சொக்கனருளென்றிவர்கடொழுதுமுறையோடுந்
தக்கணமிருக்கவுயராசனமளித்தார்

(இ-பொ-ள்).

கையிலே மிகுந்த உருத்திராட்சமும் மெய்யெங்கும் அணிந்து விளங்காநின்ற விபூதியும், இடையிலேகட்டியமுஞ்சைவுரியும், நான்கு வேதங்களுஞ்சிறந்து பொங்கிக்கருணையானது பொழிகின்ற நல்ல குணத்தையும் படைத்தெழுந்தருளிய சூதபகவானை மிகுந்த முனிவர்களும் சிஷர்களும் கண்டு சிவபெருமானது கிருபையால் இன்று இந்தப்பகவானது தரிசனம் நமக்குக்கிடைத்ததென்று முறையோடும் பணிந்த உடனே அவ்விடத்தில் உயர்ந்த ஒரு ஆசனங்கொடுத்து அதிலிருக்கும்படி செய்து நின்று துதித்தார்கள் எ-று. (௫)

அத்தவனிருந்தவனையன்புடனமர்த்தி
மெய்த்தவ நிகழ்ந்தவதும் வினவிமகிழும்போ
துத்தமவடாரணியவுயர்வுமதுபதிசெய்
சத்துகடமும்படிவர்தவமுமறைவீரால்.

(இ-பொ-ள்).

சூதபகவானானவர் உபசாரமாக அளித்த ஆசனத்தின்கண்ணமர்ந்து அன்போடு முனிவர்களையெல்லாம் இருக்கும்படிசெய்து உங்களுடைய உண்மையான தவங்களெல்லாம் குறைவில்லாது நடந்தேறிவருகின்றதாவெனக்கேட்டு தங்களுடைய பாதகிருபையால் நடந்து வருகிறதென்று சொல்ல மனமகிழ்ந்திருக்கும்போது, முனிவர்களெல்லாமெழுந்து சகல ஆகமங்களையும் அறிந்த வேதப்பொருளே எங்களின்பேரில் பரிபூரண கிருபைசெய்து வடாரண்ணியத்தின் மேன்மையையும், அதில் வாழாநின்ற காளியானவள் செய்த நடனத்தையும் முனிவர்களெல்லாஞ்சூழ்ந்திருந்துசெய்துவருகிற தவப்பெருமையையும் விவரமாகச் சொல்லவேண்டுமென்று வணங்கினார்கள் எ-று-ஆல்-அசை (௬)

இத்தரமிறைஞ்சவுமிரங்கியொருசூதன்
முத்திதருமாரணியமுஞ்சடையன்வந்தா

ரத்தாணிமாலையுடனுடியதுமோனர்
வித்தகதவத்தையும் விரித்துவருங்லையால்

(இ-பொ-ள).

இவ்விதமாக வணங்கிக்கேட்டுக்கொண்ட முனிவர்கள்பேரில் மனக்கிருபையுண்டாகி, சிவகதையைக்கேட்க விரும்புகின்ற அந்தணர்களே கவனமாய்க்கேளுங்களென்று சூதபகவானனவர் தவஞ்செய்பவர்களுக்கு முத்தியைக்கொடுக்காநின்ற வடாரண்ணியத்தின் மகத்துவத்தையும், சிவபெருமானனவர் எழுந்தருளிவந்து வாசனைகளையணிந்த காளிகாதேவியோடு நடனம்புரிந்து வெற்றியடைந்ததையும் முனிவர்களெல்லாஞ் சிறந்த நன்மையான தவங்களைச்செய்து வருகின்ற பெருமையையும் வித்தாரமாகச்சொல்லி வருகின்றபோது எ-று-ஆல்-அசை (௫)

ஞானமிகுவல்கலரினடையுகவிலச்சூழ்
மோனரும்வணங்கிவிவர்முன்வசியர் தன்னை
ஈனமில்விதித்தறுமியம்பியருளென்னச்
சேனனுமுவந்தினியசெய்தியிதுகேண்மின்

(இ-பொ-ள).

நல்லொழுக்கத்திற் சிறந்த வல்கலமுனிவரின்வரலாற்றையுஞ் சிறிது சொல்லிவந்தார். அப்போது இவரைச்சூழ்ந்திலங்காநின்ற முனிவர்களெல்லாங்கேட்டு மனத்திலே ஆராய்ந்து எங்கள் பகவானே இந்த முனிவரானவர் ஆதியில் வசித்தப்போன தனவைசியர்கள் குலத்தை விருத்திசெய்த சரிதையையுஞ் சிறிதுசொல்லவேண்டுமென்று வேண்டிக்கொண்டவுடனே பிறப்பிலே சிலாக்கியமுடைய சூதபகவானும் மகிழ்ந்து ஓ அந்தணர்களே இது திவ்வியமான சரிதையானதால் நீங்கள் விரும்பியபடிக்கே யான் சொல்லுகிறேன் கேளுங்களென்று சொல்லத்தொடங்கினார் எ-று. (௬)

சுடர்திரிதனக்குமிதிசுடருதவியெவ்வெவ்
விடமுநின்றபொருளெனவிலங்கியருளீசன்
திடமுமிகுமறையுமுளதிசைமுகனை நியமித்
திடநிவ்விதியாவையுமெனத்தொழுதுபெற்றான்

(இ-பொ-ரை).

சூரியன்-சந்திரன்-அக்கினியென்று சொல்லாநின்ற மூவருக்கும் மிகுந்த ஒளியைக்கொடுத்து அகிலமெல்லாந்தானாய் நிறைந்து ஒப்பற்ற பொருளாய் விளங்கிச்சகலத்தையுங் காத்துவராநின்ற சிவபெருமானானவர் உறுதியையும் மிகுந்த நான்குவேதங்களையுமுடைய பிரமதேவனைப்படைத்து தடையன்றி யாவையும்படைத்து வருவாயென்று கட்டளையிட்டருளினார். உடனே அழகிய பாதங்களை வணங்கிப்பெற்றான் எ-று (எ)

இத்திசைமுகன்வயினிருந்துலகமுற்றும்
வத்திரமிசைச்சுருதிமாகனர்காத்திற்
சத்திரியருந்தொடைமிசைவசியரும்பா
தத்தின்மிசைவினைஞருமலத்தொடுசனித்தார்

(இ-பொ-ரை).

இந்தப் பிரமதேவனிடமிருந்து சகலவுலகங்களும், உண்டாயிற்று மேலும் இவர் முகத்திலிருந்து சகலவேதங்களையுந் தெரிந்த பிராமணர்களும் கையிலிருந்து க்ஷத்திரியர்களும், தொடையிலிருந்து வைசியர்களும், பாதத்திலிருந்து சூத்திரர்களும் நன்மையாக உண்டானார்கள் எ-று-ஆல்-அசை (அ)

எவ்வுலகுமிவ்வணமிசைத்துநிமிரெல்லவ
செவ்விதனவைசியர்குடிதனையிலொருகுசலன்
எவ்வனமறஞ்சுருதியினிடமொழிவாய்மை
யொவ்வியசுதர்மனெனுமோர்பெயர்பெற்றோன்

எந்தவுலகங்களையும் இவ்விதமாகப்பொருந்தச்செய்து விருத்தியடைந்து வருகின்றபோது செல்வையுடைய தனவைசியர் பிரிவில் புன்னகைகோத்திரத்தில்பிறந்து, அழகையும், தருமங்களையும், வேதங்களையும், இனியவசனங்களையும், உண்மையையும், படைத்த மிகுந்தவல்லோனாகிய சுதர்மன் என்னும் பொருந்திய பெயரையுங் கொண்டு புகழைப்பெற்ற ஒருவன் எ-று (௯)

பூவிலணியானசிவபூஜைமிகவேசெய்
தாவலளிபோனேலழுக்கையுமகற்றி
மீவிரதமாடியொருவீடடையவெண்ணித்
தாவினைசெயுங்குருவைநாடிமெய்தளர்ந்தான்

(இ-பொ-ரை).

பூவின்கண்ணே அலங்காரமான சிவபூஜைகளை மிகுந்த வணக்கத்தோடுஞ்செய்து அசுத்தங்களையெல்லாம் போக்கிப் பரிசுத்த மனமுடையவனும் அன்பானதுபெருகிப்பேரானந்தமடைந்து இனிமேல் மேலான தவத்தைச்செய்து முத்தியடையவேண்டுமென்று நினைத்து, ஆனால் இதற்குச் சகாயஞ்செய்யக்கூடிய குரு நமக்கு வேண்டுமே அவர் எவ்விடத்தில் அகப்படுவாரென்று சுதர்மனென்பவன் எங்குந்தேடியலைந்து கண்ணுக்குத்தென்படாததினால் மெய்யானது சோர்ந்து எ-று-ஆல்-அசை (௰)

அந்தவர்செறிந்தவடவாரணியம்வந்தா
ருந்தியணையிடையிலுயருழுவையுரிமீதேல்
வந்தசெனமின்தவசிகல்கலர்தனைக்கண்
டெந்தையருணீதுணையெனத்தொழுதிசைத்தான்

(இ-பொ-ரை).

அழகிய முனிவர்களெல்லாங்கூடி மிகுந்த தவங்களைச்செய்து வருகின்ற வடாரண்ணியத்திற்கு வந்து சேர்ந்து அவ்விடத்திற் சிறந்த நதியின் கரையருகே உயர்ந்த புலித்தோல் ஆசனத்தின்மீது

சூரியபகவானுனைவர் வந்து எழுந்தருளியதைப்போலப் பிரகாசமு
டையவராயும் தவத்தில் மிகுந்த வல்லவராயும் விளங்காநின்ற வல்
கல முனிவரைக்கண்டு இவரே நமக்குக் குருவென்று புகழ்ந்து
நமது பாக்கியமே பாக்கியமென்று மனமானதுமகிழ்ந்து அவருடை
ய சமூகத்திற்சென்று ஏழைகளுக்கு இரங்கியருளாநின்ற வெனது
தந்தையே நாயேனுக்கு உனது பாதங்களே துணையன்றி வேறு
கதியில்லையென்று பல்வாறாகத்துதித்து வணங்கிநின்றான் எ-று
(௰௧)

மாசுறமிகைசப்பனியில்வந்தெதன நீயா
ராசயமதெங்கெனவிழித்தறையுமமைய
நேசமொடுநெஞ்சிலுளநேரெவையுமோதி
நாதனைவெல்லீசனடி நண்ணவருள்சரணம்

(இ-பொ-ள்).

இவ்விதமாகப்பணிந்து நிற்கின்ற சுதர்மனை வல்கல்முனிவரா
னவர் விழித்துப்பார்த்து ஓ புருஷசிரேஷ்டரே நீர்யார் இருப்பது
எவ்விடம் கொஞ்சமேனும் அச்சமில்லாது இந்தக்கொடிய ஆரண்ணி
யத்தில் வந்தகாரணம் யாது சொல்லுவீரென்று கேட்கும்போது
அன்போடேதன்னுடைய மனத்தினகண்ணுள்ள உண்மை யாவற்
றையும் முறையே சொல்லி அன்பர்களிடத்தில் நீதிதவறிச்செல்லு
கின்ற எமனையும்வென்று காத்தருளுந் தயாநிதியாகிய சிவபெருமா
னது திருவடிகளிற் சேர்ந்து வாழும்படி தங்களைக்குருவாக அடை
ந்தேன் கிருபைசெய்யவேண்டுமென்று வணங்கினன் எ-று (௰௨)

எம்பகவனேயுதவுமென்னவுளமேவிச்
சம்பகலையுன்னிவிரதஞ்செயனியாமென்
றும்பளமதாகவுபதேசமுமுரைத்தார்
செம்படிவனைத்தொழுதுசெய்துவருநாளில்.

(இ-பொ-ரை).

எங்கள் குலதெய்வமாகவந்த குருவே ஏழையின்பேரில் பரிபூரண கிருபைசெய்து துணைசெய்வாயென்று முறையிடுவதைப் பார்த்து மனமிரங்கி ஓ சுதாமனே அழகிய சூரியபகவானைநோக்கித் தவஞ்செய்வாயாகில் நீ நினைத்தபடி நன்மைகளைப்பெறுவாயென்று இவனுக்கு உபகாரமாக உபதேசஞ் செய்தவைத்தவல்கலமுனிவரைத் துதித்து அவருடைய உத்தரவின்படியே சூரியனைநோக்கித் தவஞ்செய்துவருகின்றபோது ஒருநாளில் எ-று (௰௩)

சூரியவளைக்குமொருசும்பகமதேபோல்
மாசிலொளிவந்து சுதர்மாதவசைமெச்சி
மீசனியுளுன்னியதைவின்றுதவுவோமென்
றேசுகமதாயறையவின்பமிகவெய்தி

(இ-பொ-ரை).

சூரியகாந்தமானது எவ்வாறு சீக்கிரத்தில் இழுக்குமோ அதுபோல சுதாமனவன் செய்த தவமானது அழைத்துக்கொண்டுவந்ததோவென்று புகலும்படி மாசற்ற சூரியபகவானவர் எழுந்தருளிவந்து, இவனது தவத்தைப்புகழ்ந்து ஓ சுதர்மனே நீ என்னைக்குறித்துத் தவஞ்செய்யவேண்டியதற்குக் காரணமியாது, அன்பனது கரங்தொழுகாநின்ற உன் மனத்துள்ளே நினைத்த வரத்தைக் கேள், தருகிறேமென்று நன்மையாகச்சொல்லவும், இதைக்கேட்ட சுதர்மன் அளவில்லாத மகிழ்ச்சியடைந்து எ-று (௰௪)

உரியவகில்வுலகிலுமொண்வமொடொசம்
புரியவருளெனவினியபொருளிதையிழக்கில்
லரியவரமதியுமெனவளியுடனளித்தேழ்
பரியன்மறையச்சீடவுள்பாதமும்வணங்கி

(இ-பொ-ள்).

பிரமதேவனுனவன் படைத்த விளங்காநின்ற சகலவுலகங்களிலும் யான்மேவி நன்மையாகச் சஞ்சரிக்கும்படி கிருபைபுரிய வேண்டுமென்று வேண்டிக்கொள்ளவும் ஓ சுதர்மனே நீ கேட்டதோ மேன்மையாயுள்ளபொருள், எந்தக்காலத்தில் மனஞ்சலித்துத் தவற விடுகிறயோ அப்போது இந்த அருமையானவரம் அழிந்து போகுமென்று சொல்லிக்கொடுத்துவிட்டுச் சூரியபகவான் மறைந்தவுடனே, சுதர்மனெனவன் உனது கிருபையால் அனுகூலத்தை யடைந்தேன் என்று குருவினதுபாதங்களையுந்தொழுது எ-று (௰௫)

இருதயமுவந்துலகமெங்கணுமியங்கி
வருதலுமயன்பதிமருங்கிலொருகானில்
மிருதுவெனவேயுலவிமின்னுமொருமின்னு
ளொருதனிமலிந்தமுருகோதவெதிர்கண்டான்

(இ-பொ-ள்).

உள்ளமானது மகிழ்ந்து பூரித்துச்சகலவுலகங்களுக்கும் தடையின்றிப்போய்ச் சஞ்சாரஞ்செய்து வருகின்றகாலத்தில் ஒருநாள், பிரமதேவனுடைய சுகர்மாகிய சத்தியலோகத்திற்குச்சமீபத்தில் அழகிய வனத்தின்கண்ணே அன்னம்போலு மேன்மையான நடையைப்பெற்றுப்பிரகாசித்து உலாவாநின்ற ஒரு நங்கையினுடைய வடிவை அவன் அணிந்து கமழாநின்ற வாசனையானது வந்து அறிவிக்கக்கண்டு நோக்கிக்கொண்டு எ-று-ஆல்-அசை (௰௬)

வேறு.

மருவகிற்றூபந்தருங்கருங்குழலோமணிநுதற்றிலதமோமால்விற்
புருவமோவிழிசேய்வடிசுடர்வேலோபூங்குமிணுசியின்றழுக்கோ
சருவதேவருமுண்ணமுதெனவிரும்பத்தருமியவதரமோதுவரோ
பருவமாமணியின்முறுவலோமதுரப்புனுவலோவாடிநோன்னுவோ

(இ-பொ-ள்).

வாசனையிருந்த அகிற்புகையை யூட்டிக்கமழாநின்ற கரிய கூந்தலோ-அலங்காரமாயுள்ள நெற்றித்திலதமோ-மகாவிஷ்ணுவி னது வில்லுக்குச்சரியான புருவமோ-கந்தக்கடவுளின் திருக்கரத் தில் அழகிய ஒளியைப்பெற்று விளங்குகின்ற வேலாயுதத்தைப்போ லுங் கண்களோ-குமிழ்ப்போலும் பூவையுடைய நாசியெழுந்த மூக்குத்தியோ-முப்பத்துமுக்கோடி தேவர்களும் ஆசையோடு அரு ந்தும் அமுதெனச்சிறந்து பொங்குகின்ற இதழோ-அல்லது புவன மோ-திரட்சியாக விளைந்த முத்துக்களை வரிசையாகச் சேர்த்த பல் லோ-தேன்போலும், இனியவசனங்களோ-கண்ணாடியை நிகர்த்த கன்னமோ எ-று (௰௭)

சந்தபனையகுழைச்சிரவணமோசாற்றுகமுகுக்களமோமா [ச்
செமார்தணித்திகிரித்தோள்களோதடக்கைகமுளரியின்மலர்களோசிந்
சந்தனமபுழுகுகமழ்பனிநீரிற்றழைத்தொளிர்சணங்குபூத்தெழுந்த
செந்தனக்குடமோமடிவடித்தகடோதிடைச்சுழிசாயியின்சிரோ

(இ-பொ-ள்).

சூரியனைப்போலும் விளங்காநின்ற இரத்தினத்தோடணிந்த காதுகளோ-அழகு சிறந்த கமுகைப்போலுள்ள கழுத்தோ பருத்த மலையைப்போலுந் திரண்டதோள்களோ தாமரைமலரையொத்த கரங்களோ குளிர்ச்சியிருந்த சந்தனங்களிலும் புழுகுகளிலும் வா சனையுடையபனிநீர்களிலும் மூழ்த்து, பிரகாசமுடைய தேமலான து படர்ந்தெழுந்த செழுமையான தனபாரக்குடங்களோ ஆலிலை யைப்போலுள்ள வயிறோ ஆற்றுச்சுழியையொத்த உந்தியின் புக ழோ எ-று (௰௮)

நுண்ணியமருங்கோலகிலாவரண்டு நகர்ச்சியில்கோன்பனியோடு [ம்
பண்ணியவிளைஞன்காதலாய்மூழ்கிப்புலகமடைந்தகமிழும்

புண்ணியத்தடமோபொருந்திய நிதம்பம்பொன்னிளங்கதலியின்குறங்கோ
பண்ணியன்றிருவராலிணைச்சாணுபரிபுரப்பதங்களின்வனப்போ

(இ-பொ-ள்).

கொடிப்போலுத்துவளுகின்ற சிற்றிடையோ உபவாசமாக அனேககோடிகாலம் அன்பாகத்தவஞ்செய்த மகிமையினால் இளவலானவன் ஆசையோடு மூழ்கிப்பலசுகங்களையும் அடைந்து மகிழாநின்ற புண்ணியமானதடாகமென்று பெயர்படைத்து அமைந்த அல்குலோ அழகிய இளவாழைத்தண்டென்னுந் தொடைகளோ செவ்வையாக உலாவுகின்ற இரண்டு வரால் மற்சியம்போலும் வாய்த்த முழந்தாளோ சிலம்புகள் அணிந்த பாதங்களின் அழகோ எ-று
(௰௧)

அரம்பையரொடுமின்னிரதியிந்திராணியாக்கருமனமுவந்திசைக்க
திரம்பியமாமைவிறலியோவெனவுண்ணினைந்துருமறந்துபின்தேறச்
சரம்பலவிடுத்துமதனனுமுலைக்கச்சகித்திடானின்னுளாகூறிச்
சிரம்பணிந்ததிலுமிவடிருந்தாதுதிரியவுஞ்செங்கையாற்பிடித்தான்

(இ-பொ-ள்).

தேவலோகத்திலேவாழாநின்ற தேவஸ்திரீகளும் பிரகாசிக்காநின்றவடிவையுடைய, இரதியும், இந்திராணியும், மகாலட்சுமியும், மனமகிழ்ந்து புகழ்ந்துசொல்லப்பெற்றுநிறைந்தஅழகைக்கொண்டபதினாறுவயசு மங்கையோவென்றுமனத்துள்ளே நினைத்துக் காமமானதுமீறித்தன்னைமறந்து கொஞ்சநேரமயங்கிப்பின்பு ஒருவாறு தெளிந்து வருகின்றபோது மன்மதனானவன் ஐந்து பாணங்களில் மரணத்தைக்கொடுக்கின்ற ஒருபாணத்தைநீக்கி மற்று நாலுபாணங்களை விடுத்து வருத்தப்படுத்தவும். அந்தப்பாணவேதனைகளைப் பொறுக்கமுடியாத சுதர்மனானவன், அடிகண்ணேயெனது ஆசைக்குரியபெண்ணே உனது இதழில்நிறைந்த அமுதமென்னுஞ்சஞ்சீவியைத்தந்து எனது உயிரைக்காப்பாயென்றுவேண்டிய இனிய வ

ணங்களையெல்லாம் எடுத்துச்சொல்லி அவன் பாதத்திலும் வீழ்ந்து வணங்கியும் இவ்வார்த்தையானது அம்மாதுக்குப்பொருந்தாததினுல் கொஞ்சமேனு மதியாமல், இவனைவிட்டுத்தப்பவேண்டுமென்று மெல்ல ஓடாநின்ற சமயத்தில் இவன் பின்னாலே தொடர்ந்துபோய் அவளுடைய கையைப்பிடித்து நிறுத்திக்கொண்டான் எ-று. (உ௰)

ஐந்து பாணங்களாவது.

வனசம்—சூதம்—அசோகு—முல்லை—நீலம்

இவைகளின் குணமாவது.

வனசம்—சப்பிரயோகத்தையும்
சூதம்—விப்பிரயோகத்தையும்
அசோகு—சோகத்தையும்
முல்லை—மோகத்தையும்
நீலம்—மரணத்தையும் செய்யும்.

பொங்கலாய்த்தொடுப்பனைமதிபார்த்தணங்கன்புறைதனையவன்முறையேனுஞ்
சங்கரன்பூசைபுரிவதற்கேகுந்தருணநீதகைப்பதுநெறியில்
பங்கயன்சுதையானப்சரசரம்பை பணித்தனம் வல்லடிசெய்யிற்
பங்கமாய் நீயிப்பவந்தனையடைவாய்படியிலென்னலுமிவன்மீறி

பூமியின்கண்ணே மன்மதனானவன் சமயம்பார்த்து அவன்து மலரம்புகளைத்தொடுத்து யாவரையும் வருத்தப்படுத்துவது அவனுடைய வழக்கந்தான் ஆகிலும் சிவபெருமானது பூசைசெய்வதற்காகப்போகும்போது என்னைத்தடுப்பது நீதியல்ல, மேலும் என்னை யாரென்று கேட்பீரேயாகில் சகலத்தையும்படைக்குங் கர்த்தாவாகிய பிரமதேவருடையமகள் என்பெயரானது அப்சரசரம்பையென்னுந் திருலோத்தமை உண்மையாகச்சொன்னேன் இதை அறிந்தும் என்னைப்பலவந்தப்படுத்துவீராகில் பெருங்குற்றமுடையவராய் சீக்கிரத்தில் இப்பாவத்தையடைவீர் யான் சொன்னேன் தெரிந்

துக்கொள்வீரென்று சொல்லவும் சுதர்மனானவன் அவன் வார்த்தை களையெல்லாங்கவனிக்காமல் மீறி எ-று (உ௰க)

காதன்மூன்றதிற்பொல்லாததுசூழுக்காந்தை உயர்மாயையேயதனால்
மோகமாய்க்கலந்துமிகுசுகமடைந்தமுனிதனைப்பிரிந்திவடாதை
வேதன்பால் வந்துமின்முகம்வாடிவெவ்கிமுன்றேன்றியகருத்தை
நீதனுய்ந்தேழேல்லுள்ளிவன் றினை கணிதனமாய்ப் போகவென்றி
சைத்தால்

(இ-பொ-ரை).

பூமியின்கண்ணேயுள்ள யாவர்களுக்கும் உரிய ஆசையானது மூன்று, அதில், அழகிற்சிறந்த மாதர்களின் மாயையோ கொடிது ஆதலால் காமமானதுபெருகி அப்சரசாம்பையென்னும் பெண்ணை விடாமற்பிடித்து வலுவந்தப்புணர்ச்சி செய்து மிகுந்த சுகத்தைப் பெற்றான் பினபு அம்மாதானவள் இவனைவிட்டுப்பிரிந்து தன்னுடைய நிலைமையையும் சிவபூசையையும் இழந்த வருத்தத்தினால் பிரகாசமுடைய முகமானது வாடி மனத்துள்ளே வெட்கமடைந்து தந்தையாகிய பிரமதேவனிடத்தில் வந்து முன்னே நின்றபோது அந்தக்குறிப்பை அன்னிதிமான் அறிந்து தன்னுடைய மகளுக்குத் துன்பத்தை தவருவித்த பாதகனாகிய தனவைசியன்குலமுழுதும் இது முதல்எழுதினத்திற்குள்ளாக நசித்துப்போகக்கடவதென்று சாபங் கொடுத்துவிட்டு எ-று-ஆல்-அசை (உஉ)

ஆசைமூன்றுவது—மண்—பெண்—பொன்

வண்திறமியுள்ளயர்வுமாறமொழிகூறிப்
பெண் சிசுவையே பெறுவைபெற்றகருவாலே
பண்புடன்வளர்த்துமகிழ்பஞ்சவ்யுதின்மே
லொண்மைமிகுமுதல்வனைசயுள்ளெவிசைத்தன்

(இ-பொ-ள).

பிரமதேவனானவன் அழகில் மிகுந்த தனது மகளின் மனவருத்தமானது விலகும்படி வேண்டிய சமாதானவார்த்தைகளைச் சொல்லி அவள் தெளிந்தபின்பு நீ யிந்தவைசியனிடத்தில் சேர்ந்து பெற்றிருக்கிற கருப்பத்தினால் நல்ல பெண்குழந்தையைப்பெறுவாய் அதைச் செவ்வையாக ஐந்துவயதுவரையும் மனமகிழ்ந்துவளர்த்து அதற்குமேல் அளகையம்பதியில் கொண்டுபோய் நன்மையாக விட்டுவிடுவாயென்று சொன்னான் எ-று (உ௩)

தந்தையுரைபெற்றவளனந்தரனோடி
வந்துதொழுதின்பமொடுவாழளவைபெற்று
ளந்தமுறுபெண்சிசுவையாருயிரெனக்காத்
தைந்துசமையானபொழுதளகையில்விடுத்தாள்

(இ-பொ-ள).

அப்சரசரம்பையானவள் பிரமதேவனுடைய உத்தரவைப் பெற்றுக்கொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்கியிருப்பத்தோடுவந்து சிவபெருமானைத்துதித்துச் சுகமாக வாழ்ந்துவருகின்ற நாளில் அழகியபெண்குழந்தையைப்பெற்று நிறைந்தன்னுயிரைப்போலவளர்த்து ஐந்து வயதானவுடனே தந்தையினது சொற்படி தவறாமல் அளகையம்பதியில் கொண்டுபோய்விட்டுவிட்டுத் தன்னுலகையடைந்து வாழ்ந்துவந்தாள் எ-று (உ௪)

அன்னைசெலவும்முளமலைந்துருகிவிம்மும்
கன்னிவிழிநீரருவிகண்டொருதுறந்தோன்
மின்னரனரும்பெயரைவிண்டுதுதிசெல்லும்
மன்னளகையாளியைமணம்புரிகையென்றால்

(இ-பொ-ள).

அப்சரசரம்பையானவள் சென்றவுடனே இக்கன்னியானவள் மனமுருகிக்கண்ணீரானது பெருகியோடும்படி அழுதுவருந்தின்

றந்த வாமதேவரென்னுமுனிவரானவர் கண்டுபெருமையோடும்வந்து இவளது காதிலே சிவசிவாவென்னும் நாமதேயத்தைச் சொல்லிவைத்து இன்றுமுதல் இச்சிவபெருமானையே துதித்துவருவாயென்றும் அளகையபதியையாளாநின்ற மன்னனாகிய குபேரனையே கலியாணஞ்செய்து வாழ்வாயென்றும் திட்டமாகச்சொல்லிவிட்டு எ-று (உ௰ரு)

இப்படிவனேகவுமிளங்குமரிஞானஞ்
செப்புமொருகன்னியெனமின்னியிகல்சிரா
யொப்பிலுயர்மெய்ப்பயனையுன்னிமிகுபூசை
செப்பமொடுசெய்து வருதிவசமளகைமன்

(இ-பொ-ள்).

வாமதேவரானவர் சென்றபின் அவளுடைய இருமையால் ஞானக்கலையாவருக்கும் போதிக்கும்படியான இளங்குமரியிவளே யெனச்சிறந்து பிரகாசித்துபுகழோடு, ஒப்பில்லாதுயெங்குந்தானாய் நிறைந்துவிளங்காநின்ற மெய்யனாகியசிவபெருமானைத்தியானித்துச் செவ்வையாக மிகுந்த பூசைகள்செய்து வளர்ந்து வருகின்றநாளில் அளகாபுரிக்கரசனாகிய குபேரனானவன் எ-று (உ௰சா)

சந்தமிகுவையமிசைசாரிவருகாலை
இந்தவனமீதிவளிலங்குவதையுங்கண்
டெந்தநகரின்குவரலென்னவிதியென்றுன்
சுந்தமணியக்கனுறுகாதலதுகொண்டால்

(இ-பொ-ள்).

ஒருநாள் அழகுமிகுந்த முத்துச்சிவிகையின் மீதேபவனி வருகின்றபோது வனத்தின்கண்ணே இந்தக்கன்னியானவள் சிவபூசை செய்துகொண்டு பிரகாசத்தோடும் விளங்குவதை, வாசனைகளை யணிந்து கமழாநின்ற மார்பையுடைய தனதனானவன் கண்டுமிகுந்

த் காதல்கொண்டு அவன்முன்னேசென்று ஓ மாதசிரோமணி நீயிருப்பது எந்த நகரம் இந்தக்கானகத்திற்குத் தனியே வரவேண்டிய காரணம் யாது உண்மையைச் சொல்லுவாயென்று கேட்டான் எ-று-ஆல்-அசை. (உ௰எ).

அன்னவன்மொழிக்கினியவமுதமொழியீதே
யென்னமுழுதும்படவிசைத்தளகையாளி
மன்னனைமணம்புரிவன்வண்மையிதுவென்றங்
கன்னிசொல்முன்புரிதகம்மெனமகிழ்ந்தான்

(இ-பொ-ள்).

குபேரனானவன்கேட்ட வார்த்தைகளுக்கு இவள் மறுமொழி சொன்னவார்த்தையானது இனியதேவாமுதம் இதுவேயென்று புகழும்படி ஆதியந்தமாக விரித்துச்சொல்லி அந்த வாமதேவமுனிவர் சொன்ன வாக்குத்தவறாது அளகைநகரத்திற்கு மன்னனாகிய குபேரனையே மணஞ்செய்து வாழுவதன்றி மற்றொருவனையும் விரும்பேன் இது உண்மையென்று கன்னியானவள் சொல்லக்கேட்டு முன்னோர்கள் செய்தநன்மையானது நமக்குக்கிடைத்தது என்று பேரானந்தமடைந்து எ-று-ஆல்-அசை (உ௰அ)

அவ்விறைவன்யானறிவையானையெனவேகண்
டிவ்வனிதை இன்பமிகவெய்தியவனோடுஞ்
செவ்வளகைவந்திவண்சிறக்கவிறைசெல்வன்
ஒவ்விகடிசெய்துமிகுவொண்மையொடுவாழ்ந்தனன்

(இ-பொ-ள்).

ஓ அழகிய பெண்ணே நீ குறித்த மன்னனாகிய குபேரன்யான்தான் இது உண்மையானதென்று அவளுக்கு எளிதில் விளங்கும்படி சொல்லவும் கன்னியானவள் குபேரன் தான்யென்று தெரிந்துக் கொண்டு சிவபெருமானைப்பூசித்து வந்த நன்மையால் நம்முடைய

என்னைப்போல கிருபைசெய்தாரென்று மனமகிழ்ச்சியடைந்து குபேரனேடுஞ் செல்வையான அளகைநகரத்திற்கு வந்து சேர்ந்து சிறந்து விளங்காநின்ற கன்னியைக் குபேரனானவன் மனப்பொருத்தமாக நன்முகூர்த்தத்தில் திருமணஞ்செய்து பெருந்த நன்மையோடுங் கூடிவாழ்ந்து வந்தான் எ-று (உக)

மஞ்சுதன வைசியர்கள் மாயவுமுணர்ந்தே
யஞ்சுதர் மனஞ்சிகுருவடிகளை வணங்கித்
தஞ்சமென துமபல்கடமைழக்கவருள் செய்வாய்
வஞ்சமதுசெய்தனன் மறைக்கொடியனென்றான்

(இ-பொ-ள்).

இச்சரிதையானது இவ்விதமிருக்க, இளமையைப்பெற்ற தனவைசியர்களெல்லாம் பிரமதேவனுடைய சாபத்தால் அழிந்துபோகவும் அழகிய சுதர்மனானவன் அறிந்து நம்மால் அல்லவா இவர்களுக்கு இடையூறு வந்ததென்று எண்ணி மனமானத் அஞ்சி தனது குருவாகிய வல்கலமுனிவரிடத்திற்கு வந்து எந்தையே நான்முகன் யேழைபேரில் கோபித்துமிகுந்த கொடுமையைச்செய்துவிட்டான் ஆதலால் நாயேனுடைய குலமானது தழைக்கும்படி கிருபைசெய்தாளுவாய் நீயேகதியென்று அவருடைய பாதங்களை வணங்கிமுறையிட்டான் எ-று (நூ)

தவனிதையறிந்தனந்து சந்தியினை முன்னேர்
சிவனுதவுவாருறுதிசெப்பின மெனக்கண்
டவனுறுதவர்ப்புரியவனியொடுசெலப்பின்
னிவனிதவிருத்திசெயவெண்ணியுளமேவி

(இ-பொ-ள்).

வல்கலமுனிவரானவர் வசியன்கூறிய யாவற்றையும் கேட்டு ஆராய்ந்து சுதர்மனே உனது அழகிய குலங்களை முன்போல விளங்கும்படி சிவபெருமானவர் கிருபை செய்தருளுவார்

உண்மையைச்சொன்னோம் அறிவாயென்றுசொல்லவும் சுதர்மனு
னவன் கேட்டு மனமகிழ்ந்து மேலான தவத்தைச்செய்வதற்கு அன்
போடுஞ்சென்றான். பின்பு வல்கலரானவர் தனவையியர் குலங்
களை விருத்திசெய்யவேணுமென்று யெண்ணங்கொண்டு மனவிரு
ம்பி வ-று (௯௰௧)

பின்னும் வடவாரணியமீதாதிசேதில்
கன்னிலசெயக்கயிலைநாதனிவன்மெய்யன்
பின்னவிதமென்றுனமிரங்கியுமையோடுந்
தன்னிடபமீதிலுறுதவமுனம்வந்தான்

(இ-பொ-ள்).

பிரகாசமுடைய வடாரண்ணியத்திற்சிறந்த நதிக்கரையிலே
யிருந்து அருமையான தவத்தைச் செய்துவருகின்றாரவில் கயி
லாயத்தின் கண்ணிலங்குகின்ற சிவபெருமானானவர் இவருடைய
உண்மையான மனதன்மை முற்றிலும் ஆராய்ந்து மனமிரங்கி
பார்வதாதேவியோடும் இடபவாகனத்தில் எழுந்தருளி மேலான
தவத்தையுடைய வல்கலமுனிவர் முன்னேவந்து எ-று-ஆல்-அசை
(௯௨)

அந்தவமிழைத்தெனைமனழைத்ததெனவிள்வாய்
வந்தனமுனக்குதவவென்னலுமகிழ்ந்து
வந்தனமளித்தயனழித்தவருணத்தை
முந்தையிலைபெருகவருளெனமுனிமொழிந்தான்

(இ-பொ-ள்).

ஓ பக்தியிற் சிறந்த அன்பனே அழகிய தவத்தைச்செய்து என்
னை அழைத்த காரணம் யாது நீ கருதியதைச்சொல்லுவாய் உனக்கு
வேண்டிய வரத்தைக்கொடுப்பதற்காக வந்தோமென்று சிவபெரு
மான் சொல்லவும் வல்கலமுனிவரானவர் அளவில்லாத பேரானந்

தததோமேங்கண்டு அட்டாங்க நமஸ்காரஞ்செய்து பலவாறுதுதித்து ஓ எவைருஞ்சிறந்த் கங்காதரனே பிரமதேவனால் நசித்துப்போன தனவைசியரது குலத்தை முன்போல விருத்தி யடையும்படி திருவுள செய்தருளவேணுமென்று முனிவனானவன் சொன்னான் எ-று (௬௩)

அப்பவனுவந்துருசமாயிரமுடிந்தென்
கைப்பிடி கமண்டலமையாலதிகருத்தா
யொப்புமறையோதியுளவுண்மைமொடுவிற்
செப்புமுனியாயிரமெழுந்திதுசிறக்கும்.

(இ-பொ-ள்).

இவன் கருத்தைச்சிவபெருமானானவர் அறிந்து மனமகிழ்ந்து ஓ தவசிரேஷ்டனே தருப்பையையெடுத்து ஆயிரமுடிப்பு முடிந்து வைத்து விருப்பமாக மனதன்மையோடேசதருந்த மந்திரங்களைச் சொல்லி யெனது கையிலிருக்கிற கெண்டியின் சலத்தையள்ளி த்தெளித்தாயாகில் நீ கேட்டுக்கொண்டபடி ஆயிரம்பிள்ளைகளுண்டாகி இந்தக்குலமானது பெருகிவளரும் எ-று (௬௪)

என்றரனிசைத்தமுறை இம்முனிசெயச்சே
யொன்று குறையாகவொருவாயிரமுதிக்கக்
குன்றியதெனத்தவசிகூறவிதிகூறிக்
கொன்றையணிவோனுமொருகுழவியெனவந்தான்

(இ-பொ-ள்).

சிவபெருமானானவர் சொன்னமுறைப்படி தவறாமல் வல்கல முனிமானவர் செய்தவுடனே தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்பது குழந்தைகள் பிறந்தது முனியரனவர்கண்டு ஓ சுவாமி நீர் திருவாய்மலர்ந்தருளியவண்ணம் ஆயிரம்குழந்தைகள் பிறக்கவேண்டியதிருக்க ஒன்று குறையவேண்டியதற்குக்காரணமென்னவென்று

வணங்கிக்கேட்கவும் சிவபெருமான் மனமகிழ்ந்து யானே ஒருகுழந்தையாகப்பிறக்கிறேனென்று சொல்லிப்பிறந்தார் எ-று (௬௫)

அன்னிலகனச்சிசுகளாயிரமுமொப்பாய்த்
துன்னியதறிந்துமகிழ்துறவியிடையீசன்
பொன்னனையாளிதருபுதல்விகளைமன்றல்
நன்னெறியுசெய்யெனநடந்தனன்மொழிந்தால்

(இ-பொ-ள).

பிறந்தவுடனே நிறைந்த ஆயிரங்குழந்தைகளுஞ் சரியாகக்கிடைத்ததைக்கண்டு மகிழாநின்ற வல்கலமுனிவரிடத்தில் அழகிய குபேரநகரத்திற்கு அதிபதியாகிய தனபதியானவன் அருமையோடும் பெறநின்ற புத்திரிகளை நன்மையாகத்திருமணஞ் செய்து வைப்பாயென்று சொல்லிவிட்டுச் சிவபெருமானானவர் கயிலாயத்திற்குச் சென்றார் எ-று-ஆல்-அசை (௬௬)

அந்தவிடைநொடிமுனியக்குழவிகட்கா
னந்தமொடு சாதகருமங்களுநடத்தி
யந்தவபிதானமுமமைத்தனனெழுங்கா
யிந்திரனயன்புகழவித்தரணிமீதால்

(இ-பொ-ள).

சிவபெருமானானவர்கொடுத்த விடைபெற்றுச்சென்னியிற்சூடிய வல்கலமுனியானவர் அந்த ஆயிரங்குழந்தைகளுக்கும் இப்பூமியின்கண்ணே தேவேந்திரனும் பிரமதேவனுங்கண்டு புகழும்படி பேரானந்தத்தோடு சாதகருமங்களுஞ்செய்து முறையே அழகிய நாமதேயங்களுமிட்டான் எ-று-ஆல்-அசை (௬௭)

ஆயிரம் பெயர்களுடைய நாமதேயங்களாவன.

திருணன், மௌஞ்சி, மதுகன், மகரத்தன், மது, கிடி, கிரகாவசு, சித்தி, ரவசு, சீமந்தன், நைஷ்டிகன், பிருகு, குரு, விரு

தமன, புன்ஞகன, சம்பகன, கல்பன, சாண்டிலயன, சண்டிலன், பரிக்ஷிகன், நந்தினபுத்திரி, சந்தியாபரன், நிசாபரன, தமாலன, அத்தியன், ஸிங்கன, கௌண்டினியன், கபிலன், உத்தமன, ரோம பாதன், அக்ஷிபாதன, தீர்க்கபாகன், விப்பிண்டகேன, தேனுகன், பிங்கலன, யப்புரு, யப்பு வேயன், மகோதகன், வாதத்தன, வசி, கௌசன் புச்சகன், பன்னகன, ஈசுவரன, மிருகசிருங்கன், மிருகாங்கி, மார்க்கண்டேயன், பீராஜாகரன், ரத்னாகரன, வைத்தியன், பர்வதவர்த்தனன, பங்கு, குடிசகன, தேவன, சர்மிஷ்டன, பிருஷயன, விருஷன, மகதேவன, மஞ்சுனன, விருஷ்டன, சித்திராம்பகன, சிதம்பகன, சித்திராம்பரன, சித்திரகன, பகுநீலன, அதிலோதகன, சிபுன, சூரன, உதிதன, அசுயகன, ரக்தத்தாங்கன, நீலகுந்தனன, வத்திரன, வார்ஷிகன், சாபாலி, முக்தன், மௌனிகன், பாலிகன், சிரிகரணன், பாரிகரணன், சுக்கிரன், பாரரசன, கரீ, அரிதன, மச்சகன, குச்சன, தர்மக்ஞன, தர்மவச்சலன, இராஜதன, ரஜதன, இராஜன, பலபேதன, சபாதகன, பிலபூவன, பிரபூவன, சக்தி, பௌருஷன், புருஷன, ககன, சதாசன, சதகன, சீதன, சைவலன, குயன, முனி, கைரதன, கிரதன, குருத்தன, மர்த்தன, மததாவகன, மிருதன, பிரியந்தன, பிந்துபீடன, பாடலன, பாடகன, பிரீதி, வைணிகன, வேணுகன, கீத்திகன, முரளி, குரலி, சரித்து, புண்டரீகன, வண்ணககன, தம்யன, தரித்திரியன, நிர்மலன, சமன, குடஜன, குட்டிமன, குஷ்டன, வேதண்டன, டிண்டிமன, நேமி, பிரநேமி, சத்தியாதமன, சாதமீகன, சாசன, உத்தமன, மாலி, கேள், மாளவன, மாலி, சுமாலிகன, மாலிகன, சுவர்ணமுகன, தட்சன், வைணுகன, வேணுகன, உம்யன, நகக்கு, ரோதன, சாகதன, உதன, துண்டகன், பலி, மாதவன, மூசுகுந்தன, மாசித்தன், சாந்திகன, சிவன, முரளி, சரளி, கித்தியன, கபாலி, கனகன், திருவன, சுபாணி, சுவர்ணபாணி, இரத்தினபாணி, சுகாசிகன, விராகாதன, பங்மானன, பாவமானியன பிரதாபனன சத்தியன, காத்தியாயனன சாலவன, அசங்கடன, சாமன, சிக, சௌரன, பசுபதி, சௌமியன, சச்சனன.

குணவான, சஜி சங்கரன, சரசன, தாந்தன, சர்வக்ஞியன, சர்வ
கோவிதன, ரதீசன, தீரவன, ரம்மியன, ராத்திரிபுக், ராத்திரி, சஞ்
சாரன, ஸௌம்மியன, இராமன, ரவி, கௌரயன, துருவன,
சங்கு, ஜிதன, சுசி, பிரதுமன, குரதன, அசட்சன, சித்
திரத்தினன, அகத்தியன், கௌஷிகன், பப்புருகு, பகவதன, பர்க்,
கன், பார்க்கவன், பவந்துதி, ரூசன், ருஞ்ஜியன, துவஜன,
விட்ணு, சுண்டாச்சியன், சூரியன், தாவனன், சக்தி, சுசக்தி,
திருதிமான், சாங்கேயன், சக்திமான், குகன், சனி, வசு, தும்பன்,
சருனன், சாருனன், வசி, சதாதயன், விசுவதயன், சுதமன
பிரதபன, அசனன், சுபன், விருத்தனன், விசாலாட்சன்
சங்கமன, சர்ச்சனன, சர்ச்சரன், சரீ, பக்குவின், அடிக்குவான்,
கபுக்பகவி, பலபுக், கந்தசீவனன், பைரீகசன, பஞ்சதன்,
பண்டிகன, முகாகர்ப்பன், தீர்க்ககர்ப்பன, ஸ்தூலகர்ப்பன,
கிருசாகிருதி, மகாகிரீவன், உதாகிரீவன், சம்புகிரீவன்,
மகாமதி, வால்மீகன், வல்மீகன், வல்மீ, மதுசந்தன, சர்வாசபணி
கரவாணி, கீர்வாணி, ஆலயன், பிருகதாலயன, உத்தாலகவி, குசன,
முக்தன, தார்பன, தர்ப்பன, லவன, இந்தகன், தந்துகன, வம்ச
கன், வம்சன, விதாதா, கிருதி, அம்சுமான், காலன், காலாந்தகன்,
விதர், கலிகாலன், உபயன், கரீ, ஸத்குரு, சரன், சகு, சர்மா, சர்த்த
ன், சக்ஷன், ஸலன், சஞ, சக்கிரன், சது, சகா, சத்தியான், சயஞ்ஞ,
சமக, சநீ, சகேசகன், சுபஞ், சங்கு, கவிலாச்சுதன், சமாசயன், சவி
சச்சியன், சகோவைசியன், சநீசாகன, சபாத்சகி. குமாரன, கண்
டாகன், கேகணன், கோபகன, கோகதேவகன், ஆத்தாதன், திரு
புரன, தத்தன், சலாசி, துர்த்தரன, தூரன, ஏகபாதன, துவிபாத
ன, விசங்கன, சங்கன, சடன, கிராகாரன, தபச்சித்தன, வல்க்கல
ன, மௌஞ்சி, மௌஞ்சிகன, இந்திரசீலன, மகாசீலன, சுசீலன, சு
சதன, சுசீ, சாண்டில்லியன, சண்டிலன, குண்டிலன, குண்டகன,
சாண்டன, சாண்டிகன, கருணன, காருணன, கீரணன, கர்ப்பூர
ன, கர்புரன, சுரன, கலாதன, கைவல்லியன, கண்டகல்யாந்தன, க
ங்கணன், கலாக்கினிருத்திரனாக்சந்தியோதன, கலாகாசன, காலா

திதி, சுவேதபாகு, மகாப்பிராக்ஞியன, திராசா, அக்கினி, சிவேபகன, சூலி, சராதனன, தனவீ, நர்மதன, ஸ்கந்தபுத்திரன, கபிலன, காழி லன, அஸ்கந்தன, குந்தன, மந்தாரன, மாலிகன, கிசோரன, கோக் கிரன, புண்டாபன, பாடபன, சுண்டன, சைண்டவனி, சத்தியன, காத்தியாயனன, சத்துவன, சுவேதா, சுவதான, சாண்டிகன, சண் டாரன, சண்டன, வியாக்கியாதா, ப்பிரகஸ்தன, ஸ்துதன, துதி மான, சுவேதான, சுவேதன, வைதிகன, வைத்திகன, தேவதாரி, சிருங்கதாரி, திருசிங்கன, சக்கிரவர்த்தனன, ரசதன, ரப்பாதா, ரம்மியன, ராகவன, சத்தியபண்டிதன, வார்த்திக்கியன, பிருது, விருத்தாகன, பாலகன, பலன, வாலசன, கேசியன, கௌக்ஷகன, கௌசும்பன, தாசிகன, குபசிகன, துருவன, விந்தன, வைந்தன வாணன, விசுவாமித்திரன, கரு, ரவி, வைந்தேயன, திருராஜன, ஆர்த்திரன, பத்திரீ, பாசிபிருதிகாரி, ஹேமாங்கனன, ஹேமவர்ண ன, பைமன, பீஷ்மகன, கோவிதன, விபுலாட்சன, விரூதன, சிதன சதமகன, தரி, சாங்கவனீ, தங்கவன, வேகாரி, சேயன, கோபீந்திரன, பிரமா, பிருகத்தாவமதி, சூட்சுமகாயன, மதநலன, வீதி, அவீது, வேதவித்து, வேதி, வேதப்பாடி, சிதம்பகன, வேபன ன, மார்கணன, சம்புத்திரன, கோவிதர்மவான, இரணியகேசன, சொக்கனன, சாக்கிரேதன, ஜடாதரன, கல்விடன, கலாபதி, அதர லன, யக்கியன, யசுபவித்து, அவ்வியன, கோபன, கோபட் சதன, யாபசு, தியானசதமா, தியானத்தபரன, பிட்சு, க்ஷேமன புண்ணியசாலி, சாந்திமான, உஷ்டாயுதவன, மகாசதடவாகி, சர்த் துவசி, தாமுசி, பகுபுத்திரன, யக்கியசகன, நட்சத்திரசேவி, மகர்தன, யப்புருவன, வாசஸ்பதி, அரிந்தமன, வார்த்தாகன, வாமலூரன, வசமகாயன, பிரதாபனன, கோதுரன, கோஷ்டவத ன, குகியன, அரி, ஆரிதன, விதி, இரணியரேதா, குதபுச், வீதி, கோத்திரன, விசாரதன, பர்ககன, பகந்திரன, வீமன, ருத்திரன, காலாந்தகன, அநிலன, விசுவமூர்த்தி, விசுவசகன, குராட்டி யன, குருரவன, தனஞ்சயன, தர்மசேது, சம்பரன, சாம்பரன, சிக, கோகர்ணன, பூசிதி, பூர்ணன, சாரதன, சங்கரன, ஜனன,

சாத்தியன, அஜூருதன், சம்பூ, சரத்து, சிவன்முக்தன, ஸ்ரீதேசிரியன, மகாபர்ணன, சுவர்ணாங்கன, சயபுசாலன், சதக்கிருது, கோசகன, விசவருப்தன, தனீ, வைசிரவணன, மகது, சுவிதீ, துவான, சாஸ்திரவித், குரூரன, சங்கு, மூர்த்தா, மயாதுதி, சிரீபுதி, காமதேவன, அங்கன, கர்ப்பூரன, கம்பகன, கஷ, சஞ்சகன, குட்சகன், விசுவன், விசுவகுப்தன், விசட்சணன், ஞரயன, இந்திரன, சிருங்கன், ரோமபாதர், பவபாத்வர், சகஸ்திரபாதன, ஊர்த்துரோமன, சப்தரோமன, விரோமயன், சரிகன, சரீமான, வேகன, வேகாத்பாதன, சிராமன, மாதவன், மதுபன், சங்கன, மாணிக்கன, மணிமான, மணி, சயதேவன, யக்கியதேவன, சுபாண்டசன, விருட்சகன, வர்ணசன், சுயசனன, பாண்டு, கவிசன, குருசன, மரு, பௌமன, பௌமசன, சந்திராங்கன, கோவிந்தன, சுரசன, அக்கினிசன, சனந்தனன காமதன், காமி, சனந்தன, அக்கினிதன, ரஜன், தேவாட்டியன, தேவவான், தேவி, யயன, திவ்வியமோகன, தாமரன், உச்சஸ்தன, புல்சன, அங்காரி, புலத்தியன, தேவகாரியவித்து. பிரமா, பிரசன்பதி. விசுவகர்த்தா, மசுவன, வியப்பிரன, ஜாகரன, சிரீனிகன, சாண்டனகன சதாசாரன, சராதிருதி, வாதநீரன், திருணன, உசிரன, பத்திராசனன, மூலாசனன, புவாசனன, சிராகாரன மிதாசாரன, ஏகன் திரிபுஜன, சதுர்ப்புஜன், சரசி, பக்தியபோஜீ, காயாத்திரி, பிருகோதரன, ஏகபிட்சன, கீர்த்தி, கௌதமன, திரிசஸ்திதன, காயத்திரிவல்லபன, பிராம்சு, மூலமந்திரன், மகாமசு, சுவாகன், சுந்தன, வஷட்காரன், வியாதிருதன, அங்காரன, வைதிகன, ஆபஸ்தம்பன, மாண்டவ்வியன, சாத்தியன, காத்தியானன, அம்பகன, சோதி, போதாயனன, புத்தன, புத்தசிவன, திராம்பதி, அசோகானனியன, வரபதி, ஆசுவலாயனன, சனனிதி, திரிகர்த்தன, விசுவகர்த்தன, விகர்த்தன விருஷபன, புதன, பாடசானனன அனபாதன, சுசியாயனன, விருஷனி, அர்ச்சுனன, பீபச்சுரன, திருராச்சியன, அந்தன, சுர்சுதன, தர்புதன, காலகன, காமனன, திர்வாணன, தேவித்தியன, ஞானவித்பரமன், விது, வைபவி, தமிமா

ன், வாயு, தர்ப்பகன், கோசிகன், குசன், சண்டவிருதன், சத்திய சந்தன், சௌரீ, சிலன், உலாயுதன், சாங்கரன், சக்கரபாணி, பத்ம காப்பன், பரந்தாமன், மகாகர்ப்பன், விஸ்ரக்ஷன், விதிஹோத்தரன், விசேஷவித்து, பூசன், பூதிமான், பூதி, குலகேசன், விதாபனன், கதனடங்கன், கர்லகாலன், கம்புராகன், கபாலபிருது, தேவன், தேவலகன், ஜீவன், ஜீவிதாத்மா, ஜனார்த்தனன், கௌபீன பூஷணன், அஸ்திரபூஷன், பஸ்மபூஷன், பூஷிதன், மஹாதபஸ், பஞ்சதபஸ், தேஜஸ்வீ, தீபன்ன, அந்தகன், திவியன், தீபன், ஸகா, பங்கன், ஸௌவர்ணராசி, புரஞ்சயன், தேவராசி, வேதீவாக், தீர்க்காங்கன், தீர்க்கலோசனன், காளாகரு, கோல்ன, பூஜியன், சக்யாதிஹி, அதிக்கியாதிஹி, இனன், உத்தரன், பத்திரீ, பதங்கன், கணதன், காணந்தன், மூளிகன், மூதன், கரீடன், கைடேயகன், அனங்கன், கிரீடகன், தாபனன், அம்பரன், ஸௌமஜன், ஸோமஜன், சௌரீ, ஸௌபுஜன், ஸௌவிருதன், விருதி, வாமதேவன், வாமனன், விஜக்ரீத்தியன், விதிவரன், சதாக்கினி, மூக்கிருத், தானன், மகாயக்கியன், தபோநிதி, லீலாமானுஷன், வெத்ஸனன், ஏமன், சதாசிவன். ஆ. ௬

௬· வொடுவளர்த்துமிகு கலைகளும்வழங்கி
உயவுபலயங்களு நடத்தியுறையெல்லை
மயமுனசிறுமிகளொருவாயிரமதிக்க
வுயவளகையாளிமனை வண்மையொடுபெற்றுள்

இ-பொ-ரை.

இந்த ஆயிரம்பிள்ளைகளையு மேன்மையாக வளர்த்து வேண்டிய கல்விகளையும் வழுவறக்கற்றுக்கொடுத்து நன்மையான பூணூற்சடங்குகளுஞ்செய்து மனமகிழ்ச்சியோடும் வாழ்ந்துவருகின்றநாளில் அளகையம்பதியை யாளாநின்ற குபேரனது மனைவியாகிய நகரியென்பவள் முறையோடும் புகழாக ஆயிரம் பெண்குழந்தைகளைப் பெற்று எ-று ஆல் அசை (௬௮)

பொன்மகள்பயந்தநலபுதல்விகளெனச்சீர்
துன்னிநிமிர்செய்தியதிருயமுனியாராய்க்
கின்னிளைஞர்கட்குமணமின்பமொடுசெய்யத்
தன்மனதிலுன்னிமிகுதனதனிடைவந்தால்

(இ-பொ-ரை).

மகாலட்சுமியானவள் பெற்றெடுத்த அழகிய பெண்மக்களே வென்று புகலத்தக்க புகழோடும் வளர்ந்து வருகின்ற செய்தியை மிகுபரிசுத்தமுடைய வல்கலமுனியானவர் தெரிந்து நமது இளங் குமாரர்களுக்கு அப்பெண்களைத் திருமணஞ்செய்து வைக்கவேணு மென்று சந்தோஷத்தோடும் தன் மனத்துள்ளே நினைத்து நிறைந்த செல்வங்களையுடைய குபேரனிடத்திற்குவந்துசேர்ந்தார் எ-று ஆல் அசை (௩௧)

முன்பவனளித்த திருமொழியெவ்வயுமோதி
என் தவசில்வந்து நிமிரிளைஞர்கடன்க்கு
நின் சுதைகளைக்கொடுநிறைவதுவைசெய்கென்
றன்புமுனியோதநரவாகனின்றிர்தால்

(இ-பொ-ரை).

முன் சிவபெருமானுன்வர் பிரசன்னமாகித் திருவாய் மலர்ந் தருளிய விபரங்கள் அனைத்துஞ்சொல்லி என்னுடைய தவத்திலே வந்து சிறந்து வளர்ந்து வருகிற குமாரர்களுக்கு உனது புத்திரி களைத்திருமணஞ்செய்து கொடுப்பாயென்று அன்புடைய வல்கல முனியானவர் சொல்ல நரவாகனத்தையுடைய குபேரனானவன் அறிந்து எ-று-ஆல்-அசை (௩௨)

மாதவரின்மேனதயுளவர்கைப்புரிமோன
ஞதனிருபாதமனதாடிமுடிசூடி
வேதநிபுணவுனது விசித்மிலுளம்போன்
மாதகமையோடுபுரிவோமெனவழங்கி

(இ-பொ-ரை).

முனிவர் குழாங்களிலே சிறந்து மேன்மையைப்பெற்று நல்ல தவங்களைச்செய்துவராநின்ற வல்கலமுனிவரினது இரண்டு பாதங்களிலும் வீழ்ந்து வணங்கி நாலுவேதங்களையும் ஆராய்ந்த வல்லோனே பொய்யையகற்றி மெய்யைத்தழுவிய உனது மனம்போல அன்போடுஞ்செய்து வைப்போமென்று சொன்னான் எ-று (௬௧)

நன்னளவையன்றலைக்காதனிலறசுதைக்
டன்னுருசுடர்க்கிசைமதாணியுமணிந்தா
ரன்னிளைஞாத்தரளவணிகைமிசைசிராய்
மின்னவுமழைத்திநய்மேவிகடிசெய்தால்

(இ-பொ-ரை).

அளகையம்பதியையாளுங் குபேராதிபதியானவன் தனது ஆயிரம்புத்திரிகளுக்கும் அவர்கள் அழகியமேனியின் பிரகாசத்திற்குப்பொருந்திய ஆபரணங்களையணிந்து மணக்கோலஞ்செய்து வல்கலமுனிவரினது தவத்தால்எழுந்த இளைஞோர்கள் ஆயிரம் பெயர்களையும் முத்துச்சிவிகைகளைக்கொண்டுபோய் அலங்காரமாக அழைத்துக்கொண்டுவந்து நல்ல முகூர்த்தநாளன்று மனவிருப்பத்தோடுந் திருமணஞ்செய்துகொடுத்தான் எ-று-ஆல்-அசை (௬௨)

வல்கலன்வியப்படையமாவரிசையாவு
நல்கியதுகண்டுமுனிநாதனுமகிழ்ந்து
மல்கியவியக்கனிடைவண்ணவிடைபெற்று
நல்சிறுமிகளையுமிளைஞர்களையுமகலி

(இ-பொ-ரை).

பின்பு குபேரனானவன் வல்கலமுனிபரனவர்கண்டு அதிசயிக்கும்படி மிகுந்த வரிசைகளெல்லாங்குறைவில்லாது கொடுத்தான் அதைக்கண்ட முனிநாதன் மனமகிழ்ச்சியடைந்து சிறந்த தனங்

கனையுடைய குபேரனிடத்தில் நன்மையான விடைபெற்று இனை யோர்களையும் அவர்களது மனைவிகளையும் அழைத்துக்கொண்டு எ-று (௪௩)

அங்கொழுமைபெற்ற திருவாலவிபினம்வந்
தங்கிவர்வசிக்கவுமமைத்துமதிகூறிச்
சங்கரனையுஞ்ஞனிவிரதம்புரியவாடி
இங்கிதமுடன்படிவனேகியபிறகுவால்

(இ-பொ-ள).

அழகிய வளஞ்சிறந்த திருவாலங்காட்டிற்குவந்துசேர்ந்து குபேரனதுபுத்திரிகளை மணஞ்செய்த ஆயிரங்குமாரர்களையு மன மகிழ்ச்சியோடுங்கூடி வசிக்கும்படிசெய்து வேண்டியபுத்திகளையும் போதித்து ஆசீர்வதித்து விடைபெற்றுக்கொண்டு சிவபெருமானை நினைத்துத் தவஞ்செய்வதற்காக விரும்பி வல்கலமுனிவானவர் கருத்தோடுஞ்சென்றபிறகு எ-று-ஆல்-அசை (௪௰௪)

இத்தனவசியர்கணலவின்பமொடுமெல்கி
யத்தமிகுமன்னலங்கயாளியிணைவாழெல்
சத்துமிருகண்டுதிணைதன்னில்துலைதாரி
வித்தையில்மிகுத்தெனும்விளங்குமொருசீலன்

(இ-பொ-ள).

வல்கலமுனிவரினது தபோபலத்தினாலும் சிவபெருமானது கிருபையினாலும் இந்த ஆயிரங்குமாரர்களிலிருந்தே தனவைசிய ரென்னும் குலங்கள் விருத்தியாகி மிகுந்த தனங்களையுடையகுபேர னைப்போலச்சிறந்து வாழ்ந்து வருகின்றபோது இவர்கள் வழியில் மிருகண்டகோத்திரத்தில் துலாதாரியென்னு நாமதேயமுடைய வனும் விரும்பி நாலுவேதங்களையும் ஆராய்ந்து தருமங்களையே நடத்திவருகின்ற நற்குணத்தையுடையவனும் ஒருவனிருந்தான் எ-று (௪௰௫)

வாசமுள்ளமண்ணையும்வாரணிப்பட்டத்திக்
காசிதனில்வந்துசிலநாட்களவனைவணங்கி
மாசில்பொருமீளியுறைநவன்புரியில்வந்தத்
தேசுதிருமாளிகைவிசித்திரமறிந்தான்

(இ-பொ-ள்).

ஊர்கள் சிறந்துவிளங்காநின்ற பூமியின்கண்ணே இந்தத்துலாதாரியென்பவன் எவ்விடத்துஞ்சென்று வியாபாரங்களைச்செய்துக்கொண்டு மிகுந்த லாபத்தோடும் ஒருநாள் காசிமாநகரத்திற்கு வந்து பார்வதாதேவியின் நாயகனாகிய சிவபெருமானை முறையோடும் பணிந்து அந்த நகரத்தைக்கடந்து குற்றங்களில்லாது அரசுபுரியாநின்ற ரகுமகாராசனது அயோத்திமாநகரத்திற்குவந்து அழகும் பிரகாசமுமுடைய மாளிகைகளின் அதிசயங்களைப்பார்த்து மகிழ்ந்தான் எ-று-ஆல்-அசை (௬௬)

செம்மணியிழைத்தகலசிகரிகிலவாய்கண்
டம்மனைபுகுந்தகிவசிட்டனொடுமன்பா
யம்மகமிழைக்கவினைறயறிஞருமவ்வங்க
விம்மகிமையோடுறையுமிறைவன்முனம்வந்தான்

(இ-பொ-ள்).

மகிழ்ச்சியோடுந் துலாதாரியானவன் பார்த்து மகிழ்ந்தவரும்போது செல்வையானைகளரத்தினங்களையழுத்தி உன்னதமாக அமைத்த அழகிய கோபுரத்தையுடைய வாயிலைப்பார்த்துப்புகழ்ந்து அரசனையும் பார்ப்பதற்கு ஆசைகொண்டு உள்ளே செல்லும்போது தவத்திற்சிறந்த வசிட்டரை வைத்துக்கொண்டு அவருத்தரவின்படி இரகுமகாராசனானவன் யாகஞ்செய்யவும் முனிவர்களெல்லாஞ்சூழ்ந்திருக்கவும் இம்மகிமையுடனே வீற்றிருக்கின்ற அரசனது சமுகத்திற்கிட்டி ஏ-று-ஆல்-அசை (௬௭)

சந்தடி பணிந்ததுலதாரிதனைமன்கண்
டெந்தவுழிதருவமுறையெண்ணியதெவென்னச்
சந்ததமுமுன்னடிதனைத்தொழுதியங்க
வந்தனமெனக்கருணைசெய்தனமகிழ்ந்தான் ௭

(இ-பொ-ள்).

அழகிய பாதங்களைவணங்குகின்ற துலாதாரியென்னும் வர்த்தகனை அரசனானவன்கண்டு ஓ விவேகமுள்ளவனே, நீயார் இருப்பது எவ்விடம் வந்தகாரியமென்ன மனத்திலுள்ள கருதியதைச் சொல்லுவாய் தடையின்றி உதவுவோமென்று சொல்லவும் வைசியனானவன் வரலாறு முழுமையுஞ் சொல்லி உனது இரண்டு பாதங்களையுந் துதித்துக்கொண்டிருப்பதற்காக ஆசைகொண்டு வந்தேனென்றுசொல்லவும் அரசன் கேட்டு மகிழ்ந்து அவன் மனம்போல வுத்தாரவுகொடுத்துவிட்டு எ-று-ஆல்-அசை (௪௮)

தாரிலுறுசித்தனைதடத்திரிறைதட்டிற்
பாரியொடிருந்துநிதியுமணிகளொன்றில்
வாரிசமமாகமிகவைத்தனையும்வேத
பாரகர்தனக்குவிருப்பினுதவினான் ௮

(இ-பொ-ள்).

பூமியிலுள்ளோர் மிகுந்தயாகத்தைச்செய்து முடித்தவழக்கம்போல ஒருதராசுத்தட்டில் தானும் தனது மனைவியும் உட்கார்ந்துகொண்டு மற்றுமொருதட்டில் பொன்களையும் நல்லமணிகளையும் அள்ளிவைக்கும்படிசெய்து நிறைசரிபானவுடனே அரசனானவனெழுந்து அந்தப்பொன்னையும்மணிகளையும் நாலுவேதங்களையுங்கற்ற அந்தணர்களுக்கு அன்போடுதானஞ்செய்தான் எ-று-ஆல் அசை (௪௯)

இன்னலகடத்திவருமிலை றவனைவணங்கி
மன்னகரில்வாழ்திருஞானத்திலதாரி
தன்னினமதிற்றருமபாலனதிசால்பாய்
மன்னுலகுமன்னனெனநீகர்வாழுமொருநாளில்

(இ-பொ-ரை).

இவ்விதமான நன்மைகளைச் செய்தவராகின்ற சேகுமாரராசனைப்பணிந்து அந்த அயோத்திமாநகரத்திலேயே வாழ்ந்து வருகின்ற திலாதாரியின் குலத்திலே தருமபாலன் என்னும் பெயர்படைத்த ஒருவன் தேவலோகத்திற்சிறந்த தேவேந்திரனைப்போல மேன்மையாக வாழ்ந்துவருகின்றபோது ஒருநாளில் எ-று (ருய)

நக்கனடிசூடுமறைநாரதன்வளஞ்சே
ரிக்கனபுரப்பதியிராமனிடைவந்தா
னக்கணமெழுந்தரிதியாசனமளித்தென்
பக்கம்வருமருளெனதுபடிவமெனவிண்டான்

(இ-பொ-ரை).

சிவபெருமானது திருவடிகளையே சென்னியிற்சூடி மகிழாநின்ற வேதங்களில் தேர்ந்த நாரதமுனிவரானவர் வளஞ்செறிந்த இந்த அயோத்திமாநகரத்திற்கு அரசனாகிய ஸ்ரீராமபிரான் எழுந்தருளிய சிம்மாசனத்தின்முன்வந்துசேர்ந்தார் உடனே இராமபிரான் எழுந்து உயர்ந்த பொன்னாற்செய்த ஒரு ஆசனமளித்து ஓ முனிநாதரே யான்செய்த தவப்பலனோ இவ்விடத்திற்கு கரும்படி கிருபைவந்தது ஆகிலும் இதுசமயம் வந்த காரியத்தைச்சொல்லவேண்டுமென்று வணங்கி நின்றார் எ-று (ருக)

இத்தவனமர்ந்தனியிராமனையமர்த்திச்
சித்திதருபெற்றருசத்திவிளொருபுற்றில்
வத்திரமைந்தன்ளபணிமணியையரியாச
னத்திலுறவைத்தலதிரன்கெனவுறைந்தான்

(இ-பொ-ள்).

நாரதபகவானனவர் அழகிய பொற்பீடத்தில் உட்கார்ந்து ஸ்ரீராமபகவானையும் இருக்கும்படிசெய்து ஓ ராமனேமகிழ்ச்சியான விருட்சங்களையுடைய குசத்தீவிலே ஒரு புற்றிருக்கின்றது அதிலே ஐந்துதலை நாகமொன்றிருக்கின்றது. அதனிடத்தில் விளங்காநின்ற இரத்தினத்தைக்கொண்டுவந்து உனது சிம்மாசனத்தில் வைத்து அழுத்தி வீற்றிருப்பாயாகில் நன்மையான ஒளியைத்தந்து சிறப்புற்றிருக்குமென்று சொன்னார் எ-று (௫௨)

அப்பலனறிந்துமணியணைவுநடையென்பாற்
செப்பெனமகிழ்ந்தனதுதேயவசியரின்மா
மெய்ப்பவனேயேபரவிமின்தருமபாலன்
எப்பொருளையுங்கொணர்வனேவவனை இன்னே

(இ-பொ-ள்).

அந்தப்பிரயோசனத்தையறிந்த இராமபிரானனவர் முனிநாதனை நோக்கி, ஓ பகவானே அந்த நாகரத்தினமானது நமக்கு எவ்விதமாகக்கிட்டும் அதன்வழியை என்னிடத்திற்சொல்லுவீரென்று கேட்கவும் மனமகிழ்ந்து ஓ இராமனே நீ வருந்தவேண்டாம் உனதுடைய நகரத்திலேவசிக்கின்ற தனைவைசியர்களில் சிவபெருமானையே துதித்து விளங்காநின்ற தருமபாலனனவன் இந்தப்பொருளையும் எந்தப்பொருள்களையும் எளிதில்கொண்டுவர வல்லமையுடையவன் ஆதலால் இப்பொழுதே அவனையனுப்புவாயென்று சொன்னார் வி-று (௫௩)

என்றுறுவனேயபின்னிறைநசர்தன்சே
யன்றுவசியன்றனையழைத்திடையுரைத்தா
னன்றெனவிறைஞ்சியுளராடியரிராமா
வென்றமிருகச்சுரமுமின்னவில்கடத்தால்

இ-பொ-ள்.

நாரதபகவானானவர் இவ்விதமாகச்சொல்லிவிட்டு ஏகியபின்பு தசரதமகாராசனது புத்திரனாகிய இராமபிரானானவர் உடனே தருமபாலனையழைத்து முனிநாதர் சொன்னதையெல்லாம் விபரமாகச் சொல்லி அந்த நாகரத்தினத்தைக்கொண்டு வருவாயென்று உத்தரவுகொடுத்தார் வசியனானவன் மனப்பூரணமாக அந்த விடையைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீ ராமபிரானை வணங்கி குசத்தீவை நாடிச் சென்றான் அங்கே கொடியமிருகங்கள் வாழுகின்ற சிறந்த காட்டைக்கண்டு உள்ளம்போடும் இராமாவென்ற மந்திரத்தையே சொல்லிக்கொண்டு ஒரு துன்பமன்னியில் அக்காடுகளையெல்லாங் கடந்து எ-று ஆல்-அசை

(௫௪)

வந்தினியதீவிலகமங்களிடைமேலாய்
வந்தநெடுவாலடியின் மாபணியினாகை
மந்தரமிதோவெனமயங்கியெதிரேகண்
டெந்தவிதங்கொளுமணியென்றெணிவிழுந்தான்

இ-பொ-ள்

குசத்தீவு வந்துசேர்ந்து அதின்கண்ணிறைந்த விருட்சங்களையெல்லாங்கண்டு வியந்து அவைகளுக்கு மத்தியிலே ஆகாயத்தை வளாவிச்சிறந்து தானாய் விளங்காநின்ற ஆல்விருட்சத்தின் அடியில் எழுந்த நாகப்புற்றை தருமபாலனானவன் எதிரேகண்டு பெரிதாகத் தோன்றுவதனாலே மந்தரகிரியோவென்றும் இதனுள்ளே வசிக்கின்ற பெரிய நாகத்தின் மணியானது எவ்விதமாகக் கிட்டுமென்றும் மதிமயங்கி விழுந்தான் எ-று

(௫௫)

அத்தருணநாரதன்வந்தம்மருணீக்கி
வுத்தமனிறைஞ்சியுளவுண்மையுரைக்க
சத்திமறைநாரணனைநாடிலுன்மனம்போற்
சித்திபெறலாமெனவுஞ்செப்பிமறைந்தானால்

இ-பொ-ரை

தருமபாலனானவன் மயங்கிவிழுந்த செய்தியை நாரதபகவானானவர் அறிந்து உடனேவந்து அந்தமயக்கத்தை நீக்கவும் வசியன் எழுந்து ஸ்ரீநாரதரை வணங்கி தான்வந்த உண்மையைச்சொல்லி கிருபை செய்யவேண்டுமென்று முறையிட்டான் அதைக்கேட்டு ஓ வசியனே நீ மனவிருப்பத்தோடு ஸ்ரீமன்நாராயண மூர்த்தியை நாடித்தவஞ்செய்வாயாகில் உன்மனம்போல நன்மையைப்பெறுவா யென்று சொல்லிவிட்டு மறைந்தனர் எ-று ஆல்-அசை (௫௬)

அவ்வணமியற்றிவருமளவையிலுணர்ந்திங்
செவ்வனமுராரிவரவின்னவன்வணங்கிக்
கவ்வையையுரைத்தமைகிருபைபுரியென்ன
நவ்வுகபதியைநினைஎன்றிவணடந்தான்

இ-பொ-ரை

பின்பு தருமபாலனானவன் நாரதபகவான் சொன்னபடியே தவஞ்செய்து வந்தான் இவனது அன்பை நாராயணமூர்த்தியானவர் தெரிந்து மனக்கிருபையோடும் இவனிடத்திற்கு வந்தார். உடனே வசியனானவன் கண்டு வணங்கி தன் மனத்துள்ளே நினைத்து வந்தகாரியத்தைச்சொல்லி இதுசமயம் கிருபைசெய்யவேண்டுமென்று முறையிட்டான் அதைக்கேட்டு ஓ வசியனே நன்மையான கருடபகவானை நாடித்தவஞ்செய்வாயாகில் அனுகூலமாகுமென்று சொல்லிவிட்டு மறைந்தனர் எ-று (௫௭)

மின்னினைமனனுறும்விதித்தபடியன்பா
யன்னவனினைத்துருகவங்கலுழனாய்க்
தென்னசையோதெனவந்தின்பமொடுவினவி
நன்னனுளவாலடியிறைதனைநோக்கி

இ-பொ-ரை.

இலக்குமியின் நாயகனாகிய நாராயணமூர்த்தியானவர் திருவாய் மலர்ந்தருளியபடியே வலியனானவன் அன்போடு முறுகித்தவஞ்செய்து வந்தான். அதைத்தெரிந்த கருடபகவானுக்குக் கருணையுண்டாகி வந்து ஓ தருமபாலனே உன்மனத்துள்ளே விரும்பியதைச்சொல்லுவாயென்று கேட்டு ஆராய்ந்து அவனது எண்ணத்தை நிறைவேற்றும்பொருட்டு அழகிய ஆலவிருட்சத்தின் சமீபத்தில்வந்து நாகப்புற்றைப்பார்த்தார் - எ-று. (௫௮)

மாவலதுசங்கனெனுமாசுணமதற்காய்க்
காவலவரனையிருக்கடவுளரிடம்ப
ரேவருமருண்டிரியவிக்கனுபுரிந்தல்
லோவியவடத்தினிலொளித்திவணிருந்தான்

(இ-பொ-ரை).

மிகுந்த வல்லமையுடைய சங்கன் என்னும் பெயர்படைத்த ஐந்துதலை நாகத்திற்காக அங்கு காவலிருக்காநின்றதேவர்களையும் இராக்கதர்களையுங்கண்டு அவர்களோடு எதிர்த்து யுத்தஞ்செய்தார். அது சமயங் காவலர்களும் அஞ்சாதுநின்று வேண்டிய யுத்தங்களைச் செய்துகொண்டேயிருக்கையில் பொறுக்கமுடியாமல் புறமுதுகிட்டு ஓடிப்போய்விட்டார்கள். வெற்றியடைந்த கருடபகவானானவர் சாப்பமானது வெளியே வருமளவும் அரவமில்லாதிருக்கவேணுமென்று கருதி ஆலவிருட்சத்தின்மேல் மறைவாகவிருந்தார் எ-று. (௫௯)

அரவமதனைமந்தபொழுதரவமதுமன்றில்
வரவுமதனுச்சியைவகிர்த்தகலுழன்வா
னிரவியெனமின்மணியையின்புமொடெடுத்தி
திரவலிதுவென்றொணியிலைகத்துவனடந்தான்

(இ-பொ-ள்).

அப்பொழுது சடோத்திரியாகிவிட்டபடியால் அரவம் ஒடுங்கியிருந்ததைக்கண்டு அரவமானது ஆகாரத்திற்காக மெல்ல வெளியே வந்தது உடனே ஆலவிருட்சத்தில் மறைவாகயிருந்த கருடபகவான் கண்டு எழுந்து சர்ப்பமானது மடியும்படி அதன் தலையைப்பிளந்து சூரியனைப்போலப்பிரகாசிக்கின்ற நாகரத்தினத்தைச் சந்தோஷமாகயெடுத்து அதன் அழகையும் ஒளியையும் பார்த்துப்புகழ்ந்து ஆசைகொண்டார் பிறகு தெளிந்து வசியனுடைய மணியல்லவா வென்றும் நீதியைமறந்து பேராசைகொண்டமனதை தானேவெறுத்தும் நமது கைவசமிருப்பது இரவலென்றும் கருதி தரும்பாலனிடம் கொடுத்துவிட்டுக் கருடபகவான் மறைந்தார் எ-று. (௬௰)

யாவையுமதிக்கும்வசியன்னுளமுவந்தே
யாவருமதிக்கமுடியாதமணிதன்னைத்
தேவருமதாத்து துதிசெயவருமிராமன்
சேவடியில்வைத்தனதிசேமமொடுவந்தால்

(இ-பொ-ள்).

பூமியிலுள்ள சகலபொருள்களையு மதிக்கத்தக்க வல்லமையுடைய தரும்பாலனென்பவன் நினைத்தபொருள் கிடைத்ததைக்கண்டு பேரானந்தமடைந்து ஒருவராலுமதிக்கக்கூடாத நாகரத்தினத்தைக் கொண்டுவந்து தேவர்களெல்லா மகிழ்ச்சியோடுந் துதிக்கப்பெற்ற ஸ்ரீராமபிரானது அழகியபாதத்தில்வைத்து வணங்கினன் எ-று ஆல்-அசை. (௬௧)

கன்மணியிதென்றுளகனிந்துடனிராமன்
மின்மணிகிடைத்தவிதமென்னவுமிழற்றிப்
பன்மணிதருங்கனகபீடமிசைபண்பா
மின்மணியைவசியனிலத்து துதிசெய்தான்

(இ-பொ-ள்).

ஸ்ரீராமபிரானுனவர் அந்த நாகரத்தினத்தைக்கண்டு இத்துவரையும் அனேகமணிகளைப் பார்த்துவந்ததில் இதுவேசிறந்ததென்று மனமகிழ்ந்து இந்நாகரத்தினமானது உனக்கு எவ்வாறு கிடைத்ததென்று கேட்டார் அதன்விபரங்களையெல்லாம் தருமபாலனானவன் சொல்லி பலமணிகளையழுத்திப்பொன்னினாற்செய்து அமைந்த சிம்மாசனத்தின்மீது இந்த நாகரத்தினத்தைச்செவ்வையாக வைத்தழுத்தி அன்போடேத் துதித்துநின்றான் எ-று (௬௨)

அன்னவனுளப்புரிவறிந்தநவிராமன்
றன்னுளமலர்ந்துமணிதங்குமொருபீடத்
தின்பெயருமிம்மிடியினுமமுமிகைத்தா
னன்னரொடுபெற்றரியவிக்ரமதில்வந்தால்

(இ-பொ-ள்).

ஸ்ரீராமபிரானனவர் இந்தத்தருமபாலனுடைய உள்ளன்பைப் பூரணமாகத்தெரிந்து மனத்துள்ளே சந்தோஷங்கொண்டு நவமணிகள் இழைத்த சிம்மாசனப்பேரான மாணிக்கமென்ற பீடத்தின் பெயரும் நாராயணனென்ற கருடனுடையபெயரான இம்மிடியென்றபெயரும்கொடுத்துவாழ்த்தினான் தருமபாலனானவன் அவைகளை நன்மையோடும்பெற்றுக்கொண்டு தனது நகரமாகிய திருவாலங்காட்டில்வந்துசேர்ந்தான் எ-று. ஆல்-அசை (௬௩)

செந்தனதனேருரியதிணைகளொடுவாழெல்
வந்தகலிகண்டினியவளககளைவிட்டு
வந்திவருளம்பெறுசிவாழதிபுகாரில்
வந்தமுன்குடியறுபதாயிரமலிந்த

(இ-பொ-ள்).

செல்வவுடைய குபேரனுக்குச்சமானமாக தனதுகுலத்தோ

மெம்பொருந்திமகிழ்ச்சியாகவாழ்ந்துவருகின்றநாளில் கலியுகம்பிறந்ததைக்கண்டுமேன்மையான வளஞ்செறிந்ததிருவாலங்காடடிலிருந்த வைசியர்களெல்லாம் எழுந்து காவேரிமாநகரத்திற்குவந்து மகிழ்ச்சியோடுமே வசிக்கின்றபோது சிவபெருமானதுகிருபையால் நாளுக்குநாள் விருத்தியாகி அறுபதினாயிரங்குடிகளாகச்சிறந்தார்கள் எ-று (௬௪)

இத்திணையினற்கலைகளனைவையுமிகவாராய்ந்
தித்திணையினோரறமிழைத்துசிவபூசை
பத்தியொடுசெய்துவருபந்தனெனுமிக்கா
னுத்தமகலத்தொழில்களோடுசெயுங்கால்

(இ-பொ-ரை).

இந்த வைசியகுலத்திலே சகலகல்விகளையும் ஆராய்ந்துநீக்கியோடு அனேகதருமங்களைச்செய்தும் மனப்பூதியோடு சிவபூசைகளைப் புரிந்தும் இப்பூமியெங்கும் பெயர்படைத்த பந்தன் என்னும வல்லமையுடையவன் ஒருவனிருந்தான் அவன் வியாபாரங்களில் மிகுந்த கப்பல் வியாபாரங்களையேசெய்து அதிக புகழோடும் வாழ்ந்து வருகின்றபோது எ-று-ஆல்-அசை (௬௫)

வங்கமிசைமிக்கபொருள்வைத்திவனுமூரிச்
செங்கதிரினேரிலொருதிசைதனைநாடி
யங்கலியினள்ளில்வருமமையமறநாளும்
பொங்கவிவனல்குமெழில்புகழறியனந்தன்

(இ-பொ-ரை).

ஒருநாள் பந்தனானவன் கப்பலில் மிகுந்த சரக்குகளைவைத்துக் கொண்டு மாலுமிகளோடு தானுமேறிக்கொண்டு ஒருதிசை நாடிக் கிழக்குத்திசையாகக்கப்பலைவிட்டார்கள் நடுக்கடலில் வரும்போது மிகுந்த தருமங்களைச்செய்துவருகின்ற பந்தனது புகழைநாமுமறிய வேண்டுமென்று கருதி ஆதிசேடனானவன் ஆசைகொண்டு வந்து எ-று (௬௬)

நின்றனனழுந்தலையுணீள்கரம்விளங்க
மின்றிவனறிந்தமதனோயுறியானும்
நன்றெனவுதவினனிறைநவ்வுபொருளியாவு
மொன்றுபிறகொன்றுபினுமோர்கரமியங்க

(இ-பொ-ள).

பந்தனிடத்தில்யாசகங்கேட்பவைப்போல ஆழிக்கடலினுள்ளே மறைந்து நின்றுகொண்டு ஒருகரமட்டும் நீரின்மேல்தோன்றும்படி காட்டிநின்றான் அக்கரத்தைப் பந்தனனவன்கண்டு இவ்விடத்திற் கரந்தோன்றுவதற்கு காரணம் யாதெனயோசித்தும் இன்னதென்று தெரியாதவனாய் எவ்விதமாகவிருந்தபோதிலும் நீட்டியகரத்திற்கு நீட்டவேண்டுமென்று நீயென்று அச்சமயந்தனதுகப்பலில் இருந்த பொருள்களில் ஒன்றையெடுத்துக்கொடுத்தான் மறுபடியும் ஒருகரந்தோன்றியது பின்னும் ஒருபொருளைக்கொடுத்தான் மறுபடியும் ஒருகரந்தோன்றியது இந்த அதிசயங்களைப்பார்த்துப்புகழ்ந்து கரங்கள் தோன்றத் தோன்றக்கப்பலிலுள்ள பொருள்களையெல்லாம் ஒவ்வொன்றாகக்கொடுத்தான் மறுபடியுங்கரந்தோன்றியது எ-று (௬௭)

இப்புதுமையானதியனிங்கெனவியந்து
செப்பொருகரத்தினிடைசென்றறிகுவோமென்
றப்பருவமேசலவனந்தனுளமேவி
யிப்புனிதபந்தனையெடுத்துபதிபுக்கான்

(இ-பொ-ள).

பந்தனனவன் கண்டு கப்பலில் யாதொரு பொருளுமில்லாததினால் இனிமேல்கொடுக்க யாதுமில்லையேயெனக்கருதிச் சிறிது ஆலோசித்து இந்தப்புதுமையானது ஒருபக்கமும் பார்த்ததில்லை இவ்விடத்தில்தான் கண்டோம் ஆகிலும் நாமே சென்றிதையறிந்து வருவோமென்று துணிந்து உடனே அக்கரத்திற்சென்றிருந்தனன் ஆதிசேடனனவன்கண்டு மகிழ்ந்து பரிசுத்தமனமுடைய பந்தனைத் தாங்கிக்கொண்டு நாகலோகத்திற்கு வந்துசேர்ந்து (௬௮)

தன்புரியிலுள்ளவர்தனக்குவல்சேடன்
கன்வசியன்வண்மையுளகாரமும்வழங்கித்
தன்புகழுமேறுமுறுதாரிலெனவேதன்
பொன்மகடனைக்கடிபுரிந்துதவினால்

இ-பொ-ள

தனது நகரத்திலுள்ள யாவருக்கும் நன்மையைப்படைத்த பக்தனது புகழையும் உள்ளன்பையும் எடுத்துச்சொல்லிப் பூலோகத்திலே நமது புகழும் இந்த வசியனாலுண்டாகுமென்று விரும்பி அனந்தனனவன் அழகிய தன்மகளாகிய நாககன்னிகையை இவனுக்குத் திருமணஞ்செய்து கொடுத்தான் எ-று ஆல்-அசை (கூக)

சந்தனமணிந்துகமழ்சந்தனமின்னாளும்
பந்தனுமுவந்துமிகுபாசமொடுகூடி
இந்தநகரின்மிசையிருக்கநிறைசிந்தில்
வந்தபுணைமாலுமிகன்மன்கதியறிந்தால்

இ-பொ-ள

பின்பு வாசனையிருந்த சந்தனக்கலையணிந்து கமழாநின்ற அழகிய தனபாரங்களையுடைய நாககன்னியும் அவனது நாயகனாகிய பந்தனும் மனமகிழ்ந்து மிகுந்த அன்போடுங்கூடிக்கலந்து சுகமே விட்டபடியால் பந்தனனவன் தன்னகரத்தைமறந்து இன்னகரத்திலதானே வாழ்ந்துவருகின்றநாளில் நிறைந்த சமுத்திரத்தில்வந்த கப்பலின்கண்ணேயிருந்த மாலுமிகன் தனது எஜமான் நாகலோகத்திற்குச்சென்ற உண்மையறியாதவர்களானதால் நெடிதொன்று சமுத்திரத்திலே வீழும்படிவந்த கதியையறிந்து எ-று ஆல்-அசை (௬௨)

உள்ளமிகவாடியணியுருவதனைமீட்டி
வள்ளலபயன்புரியைநாடிவரைவந்தின்
குன்னதையுலாக்கில்வருமுறுவலெனவெண்ணி
மெள்ளவெசமானினுசன்மனையின்மேவி

இ-பொ-ள்

மனமானது மிகவுமெலிந்து நாமென்னசெய்கிறதென்று வருந்தி சோழராஜன அரசாட்சி செய்துவராநின்ற தனது காவேரிநகரத்திற்குக் கப்பலைத்திருப்பிக்கொண்டு வந்திறங்கி மாலுமிகள் ஆலோசித்து இங்கு உண்மையைச்சொன்னோமாகில் ஒருவேளை நமக்குத் துன்பம்வந்தாலும் வருமென்றுயெண்ணி மெதுவாக எஜமானது தம்பி வசிக்கின்ற வீட்டிற்குவந்து சேர்ந்து எ-று (௭௧)

வந்தனமுனன்னல்தருவண்விடைபரித்தே
வந்தனமதங்கொருசவளிவணிகமேலா
மூந்தனையதற்குரியவுறுதனமெடுத்து
வந்திடவுரைத்தெமதோடுதவலென்றார்

இ-பொ-ளா

பத்தனாரின் தம்பியைக்கண்டு நமஸ்காரஞ்செய்து ஓ எஜமானே உமது தமையனார் கொடுத்த உத்தரவைப்பெற்றுக்கொண்டு நாங்கள் இங்குவந்தோம். அது என்னவெனில் அவர் தங்கியிருக்கிற தீவில் ஜவளிவியாபார மிகுதியாக நடக்கிறபடியால் அதற்கு வேண்டிய திரவியங்களை யெடுத்துக்கொண்டு உம்மை யெங்களோடு வரும்படியாகச்சொன்னார் சீக்கிரமாகப்போகவேணுமென்று சொன்னார்கள் எ-று (௭௨)

இன்னணமிசைத்துரியவில்லமிசைவந்தன்
றின்னகரைவிட்டிவரிரிந்தனர்மருண்டிங்
குன்னதறியாவசியனந்தவுரைமெய்யென்
றுன்னமுமுவந்தினியவுணவதுநுகர்ந்தால்

இ-பொ-ள்

இவ்விதமாகச்சொல்லிவிட்டுத் தனது மனைகளுக்குச்சென்று யோசித்து எஜமானின் தம்பியானவர் தமையனிடத்திற்கு போக

ருவனுமென்று நம்மை யழைப்பாரே நாம் என்னபுகலுகிறதென்று பயந்து ஊரைவிட்டு ஓடிப்போய்விட்டார்கள் இவர்கள்செய்தியை யறியாதபக்தனது தம்பியானவன் மாலுமிகள்சொன்னதுமெய்யென்று நம்பி வியாபாரஞ்சிறமாய்நடக்கிறதென்று காதிற்கேட்டதனால் மனமகிழ்ந்து இனிய அமுதம் புசித்தானவுடனே எ-று ஆல்-அசை (எங)

நிதிமிகவெடுத்தானைநெஞ்சுறவழைத்தி
மதியுளனையேவியழைமாலுமியையென்று
னதிவிரைவினுடினனகத்திலுமிலர்தா
விதுபுதுமையென்றுமெசமானுழியிசைத்தான்

இ-பொ-ள

வேண்டிய திரவியங்களையு மெடுத்துக்கொண்டு சிவபெருமானையுந்துதித்து விவேகமுள்ள ஒருவனையனுப்பித் தனது மாலுமிகளையழைத்து வருவாயென்று சொன்னான் உடனே ஏவலாளியானவன் விரைவாகச்சென்று அவர்கள் வீட்டிலும் அந்தநகரமுழுதும் தேடிப்பார்த்தான் காணாததினால் இது என்ன புதுமையாகவிருக்கிறதென்று எஜமானிடத்தில்வந்து தெரியப்படுத்தினான் எ-று (எச)

எதிவரகன்றவிதமென்னவிடரக்தோ
யாதறிகிலேனெனமறுவினையரயகவி
நீதியறிவோமெனநெடும்புனையிலூரி
யோதுபுரிநீவெகுவயுராடினனுழைத்தால்

(இ-பொ-ள);

பக்தனது தம்பியானவன் கேட்டுக் கிலேசப்பட்டு இது சமயம் இவர்கள் ஊரைவிட்டுப் போகவேண்டியதென்ன ஆ ஆ எனது தமையனார்க்கு என்ன துன்பம் வந்ததோ யாது காரணமுந் தெரிபடவில்லையே அந்தோவென்றருகி உண்மையையறிவோமென்று வேறு மாலுமிகளையழைத்துக்கொண்டு கப்பலேறிச்சென்று தமைய

ன் போகக்கூடிய தேசங்களோடு அனேக தீவுமுதலான இடங்க ளெல்லா மிருந்த பிரயாணஞ்செய்து தேடிப்பார்த்தான் எ-று

ஆசிரிய-அவ்சை (௭௫)

தென்படவில்லன்னலுறைசெய்தியதனா
ரன்புளமணுங்கிமிகுவம்பிலையமறித்துத்
தன்பதியில்வந்துகணிதளாயகவியோத
வின்றொவெருடமிருசவெல்வருவனென்றார்

(இ-பொ-ள்).

தலைமயனுடைய செய்தியானது யாதொன்றுங் கிடைக்காத தினலே அன்பு நிறைந்த உள்ளமானது வாடிக் கப்பலைத் திருப்பிக் கொண்டு தனது நகரத்திற்குவந்து தேர்ந்த பல சோதிடர் களை அழைத்து இது செய்கியைக்கேட்டான் அவர்கள் ஆராய்ந்து பார்த்து பன்னிரண்டு வருடத்திற்குமேல் சந்தோஷமாக வருவா னென்று சொன்னார்கள் எ-று (௭௬)

அப்பதமறிந்தரனைநாடியடிசூடி
யிப்புதலையானறியனெந்தையருளென்னச்
செப்பியுறைகாலையிருவாறுசலைசென்றுங்
கப்பலிறையண்ணல்வருகாததையறிந்தாள்

(இ-பொ-ள்).

அந்தச்சொல்லையறிந்தும் வருத்தம் நீங்காதவனாய் சிவபெருமா னது ஆலயத்திற்குவந்து அழகிய பாதத்தில் வீழ்ந்து முடிசேர வணங்கி நின்று எந்தையே இப்புதலைமயை யானறிந்திலேன் நீயே கிருபைசெய்து காப்பாயென்று தனது குறையைச் சொல்லிவிட்டு வசிக்கின்றநாளில் சோதிடர்கள் சொன்ன பன்னிரண்டு வருடம் சென்றும் கப்பலுக்கு எஜமானுகிய தனது தலைமயன் வாராததையறி ந்து எ-று (௭௭)

அதிமலமாயினுமியாவுமறுகுங்கா
லிதனடையனந்தனுமறிந்திளமைமாறுக்
கதிருபடாமும்வெகுகாலமுறையச்செய்
புதியகனிபோடு மணிபூடணமியாவும்

(இ-பொ-ள்).

மிகுந்த வருத்தமுண்டாகி தனது குலமுழுதும் மனங்குழம்பு கின்றபோது இதன் செய்தியை அனந்தனெனவன் தெரிந்து இரக்கங் கொண்டு இவனை அனுப்பிவிடவேணுமென்று எண்ணி சரீரத்திலே போர்த்திக்கொண்டால் இளமை மாறாதிருக்கும்படியான பொற் பட்டாம் ஒன்றும் புசித்தால் வெகுகாலஞ்சீவித்திருக்கும்படி செய் கின்ற அற்புதமான கருநெல்லிக்கனியொன்றும் அனேக ரத்தினங் களும் ஆபரணங்களும் இன்னும் வேண்டிய மற்றும் பொருள்கள் யாவும் எ-று (௭௮)

நன்மருகனுக்குதவிநவிலுமுனாகேண்மின்
னின்னிளவலவதியிதுநிலையிலறியின்னே
என்சுதையொடும்பதியிலேகியுறைவீரென்
றன்னவரையகலியபயன்புரியில்விட்டான்

(இ-பொ-ள்).

தனது அழகிய மருமகனுக்குக் கொடுத்து ஓ பந்தரே யான் சொல்லுவதைக்கேளும் பூமியின்கண்ணே உமது தம்பியானவர் உம்மைத்தேடா நின்ற வருத்தமானது இன்னவிதமாகவிருக்கிறதென் றியம்பி இப்பொழுதே எனது புத்திரியாகிய நாககன்னிகையோடும் உமது நகரத்திற்குச்சென்று சுகமாக வாழ்ந்திருப்பீர்களென்று வாழ்த்தி இருவரையும் அழைத்துக்கொண்டுவந்து சோழமகாராஜ னது காவேரிப்பூம்பட்டணத்தில் விட்டுவிட்டு எ-று-ஆல்-அசை (௭௯)

மன்னிளவனந்தனுமறைந்தபினிறைந்த
சென்னிநகரின்மிசைசிறந்தவர்களியாரு
நன்னருளபந்தனையுநாயகியையுங்கண்
டன்னவரிற்சிசுமருவுபிணையகமகிழ்ந்தார்

(இ-பொ-ரை).

இளவரசனாகிய ஆதிசேடனென்பவன் தனது நகரத்திற்குச்சென்ற பின்பு நிறைந்த செல்வங்களையுடைய சோழமகாராஜன் வாழாநின்ற காவேரிமாநகரத்திலுள்ள சனங்கள் யாவரும் நன்மையுள்ள பந்தனையும் அவனது மனைவியான நாககன்னியையுங்கண்டு தாயையிழந்த பிள்ளையானது மீண்டு அத்தாயைக் கண்டுகொண்டால் எவ்வளவு சுகத்தையடையுமோ அதுபோல மனமகிழ்ந்தார்கள் எ-று (அ௰)

மாவளவனிவ்வசியன்வழியதனையாய
மேவியதுகண்டவனுமேதையொடுவேந்த
ராவிகொறகளிறிலொருபாதியையளித்துச்
சேவடிவணங்கிமிகுசெய்தியையும்விண்டான்

(இ-பொ-ரை).

பெருமையிற்சிறந்த சோழமகாராஜனானவன் பந்தனது வரலைக்கேட்டு இவன் நாககன்னியோடு வந்தசெய்தியை அறிய மிகுந்த ஆசைகொண்டு அவனை அழைப்பதற்கு முன்னமே அக்கருத்தை யறிந்த பந்தனானவன் மேன்மையோடும் வந்து அரசனது பாதங்களை வணங்கி ஆதிசேடனிடத்தில் பெற்ற கருநெல்லிக்கனியில் பாதியைக்கொடுத்துச் சகலசெய்திகளையும் விபரமாகச்சொன்னான் எ-று (அக)

மன்னுமலர்த்திவிவரிசைகளுமீய
இன்னவனடைந்தநிறையுவேகியுறைகாலே

சின்னவையிரண்டுபிரபந்தமதுசெய்திங்
கின்னவன்முன்வந்தருளவிதயமுமகிழ்ந்தாள்

(இ-பொ-ரை).

சோழமகாராஜனுனவன் இவன் சரிதையையும் மேலான கனியைத்தனக்கு விரும்பிக்கொடுத்த உதாரகுணத்தையுங்கண்டு மனமகிழ்ச்சியடைந்து அனேக வரிசைகளைக்கொடுத்தான் பந்தனுனவன் அவைகளைப்பெற்றுக்கொண்டு தனது மனையில் வந்து இனிதாக வசிக்கின்ற காலையில் ஞானத்திற் சிறந்த ஔவையாரானவள் இவனது புகழைக்கேட்டு அந்தாதியும், நவமணிமாலையும், பாடிக் கொண்டுவந்து கொடுத்தாள், அதன் மதுரத்தை அறிந்த பந்தனுனவன் மிகுந்த சந்தோஷத்தையடைந்தது எ-று-நல்-அசை (௮௨)

தன்னிடைவயங்குகனிபாதிபொடுசோலை
மின்னியபடாமுமுதவினவளையடைந்தன்
கன்னனுமேகியபினன்பொடுவசித்தா
னின்னகரில்க்குடிகளெங்கணுமலிந்த

(இ-பொ-ரை).

தன்னிடத்தில் பிரகாசிக்கின்ற பாதிக்கனியையும் நல்ல திறத்தையுடைய பொற்படாமென்ற போர்வையையும் கொடுத்தான் ஔவையானவள் அதைப்பெற்றுக்கொண்டு அவளிருப்பிடத்திற்குச்சென்றபின்பு பந்தனுனவன் அன்போடும் வாழ்ந்துவந்தான் இவனுடைய குலங்களெல்லாம் இவனைச்சூழ்ந்து இந்தக்காவேரிமாநகரத்திலே சிறந்து விளங்கியது எ-று (௮௩)

சொக்கனடிபேணுமிகுதோழனெனுமர்ச்சி
யக்கனிவடைமிருதியாவுமுளமேலுந்
தக்கபுவிமீதுபுகழ்தனதரிவரம்பே
லொக்கமுழுதும்பரவியும்பருலகெய்தும்

காலத்தும் பெரிய வானமானது இடிந்து விழுந்து, உலகமே அழிந்துவிட்டகாலத்தும் பொய்யென்பதைச்சொல்லக் கனவிலுங் கூட நினையார்கள் எ-று (அசு)

மாதிமதிகொன்றைநதிபன்னகமணிந்த
சோதிமாறனடிதன்குடிமனநாடி
வேதமொருநாலுமிகவேப்பலதுமாய்ந்து
நீதியொடுமொழுகிநல்லறம்வளர்ப்பார்

(இ-பொ-ள்).

அர்த்த சந்திரனையும் கொன்றையையும் கங்கையையும் சர்ப்பத்தையும் தரித்த சோதியாகிய சிவபெருமானது அழகிய பாதங்களையே சென்னியிற்சூடி மனவிருப்பத்தோடும் நாலுவேதங்களையும் பல சாஸ்திரங்களையும் வழுவறக்கற்று மேகங்களானது எப்படிப் பொழிகின்றதோ அதுபோல மிகுந்த தருமங்களை நீதியோடுவளர்த்துவந்தார்கள் எ-று (அஎ)

இவ்வழியிலிந்திரகுலத்தொருவனின்ற
செவ்வழிநன்மூத்தரசன்செப்புபெயராங்கி
தவ்வழியளித்தவொருதலைவனென்னவேயின்
எவ்வழியுமோதியதனெல்லைகடந்தோன்

(இ-பொ-ள்).

இந்தத் தனவைசியர் வழியில் தேவேந்திரகோத்திரத்தில் ஒருவன் செய்த அரியதவத்தினால்பெற்றெடுத்தநல்ல குமாரனையும், மூத்தரசன் செட்டியென்று பெயர் படைத்தவனையும், நியாயவழியை உண்டாக்கிய அரசனிவனேயென்று சொல்லும்படியாயும் பூமியின் கண்ணே எத்தக்காரணங்களையும் வழுவறக்கற்று அதன் கரைகண்டவனையும் ஒருநற்குணமுடையவனிருந்தான் எ-று (அஅ)

கரியவனுமயனுமிருகண்ணனவோரும்
புரியமனமேவுபலபூசைகளிலீதே
வுரியதெனவேபணியுமொண்மைமிகுசிவராத்
திரியருமைதன்னையொருசெட்டியுளிருத்தி

(இ-பொ-ள்.

தேவலோகத்திற்கு அரசனாகிய இந்திரனும் பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் முனிவர்குழாங்களும் கூடிச்செய்ய மனவிரும்புகின்ற பூசைகளில் இதுவே தக்கதென்று வணங்குகின்ற மிகுந்த நன்மையுடைய சிவராத்திரியின் அருமையை இந்த முத்தரசன் செட்டியான அன்பனுந்தெரிந்து நல்ல குணத்தோடுங்கருத்தில் வைத்து எ-று ௮௯

மறையவர்வியக்கறையாவின்முமரியார்
கறைமலருமேயதிகநாறுமொடுலவிச்
குறைதனையிழந்துநிறைகொண்டுதினைகளையு
முறையொடுவணங்குமிதுமுறையெனவின்றான்

இ-பொ-ள்.

அந்தணர்களெல்லாம்புகழ்ந்து அதிசயிக்கும்படி பெருமையிற் சிறந்த வில்வங்களையும் வண்டுகள் புசிக்கின்ற மதுவையும் வாசனைகளையுமுடைய புட்பங்களையும் எடுத்து மிகுந்த அன்போடும் அருச்சனைசெய்து தன் குறைகளைநீக்கி மாட்சிமைபெற்று மகிழ்ந்து வருகிறபோது ஒருநாள் தன்னுடைய பந்துக்களையழைத்து இந்தச் சிவராத்திரி விரதத்தைக் கைக்கொண்டு யாவரும் உய்யும்படி முறையோடும் வணங்கி வாருங்கள் நன்மையுண்டாமென்றும் இதுவே பூமியில் மேலானதென்றுஞ் சொன்னான் எ-று ௯௰

இப்படிவமேனைதலமென்னதருமென்பாற்
செப்புமெனவன்பனிறைசெம்முகமலர்ந்தின்
வொப்புமிகுகாரைதகவொடுங்கினவொடுங்கா
நிப்புவனமவைச்சிறிதிசைக்கவன்கொடுப்பீர்

வரும் ஆசைகொள்ளும்படி செல்வத்தோடும் வளர்கின்றகாலத்தில் வயதானது பன்னிரண்டாகவும் இப்பெண்ணுக்குத் திருமணஞ்செய்யும் பருவமிதுதானென்று தந்தையானவன்தெரிந்து மனத்துள்ளே மதித்தான். எ-று (௧௧)

மதிவதனமாதையொருமறையவன்வழிக்கே
விதியுளிபுரிந்தருளிவேல்விழிகளித்தான்
மதனெனநிகர்காவலனுமனைவியுமகிழ்ந்தே
புதுமையொடுபுல்லிமிகுபுவியிலுறைநாளில் ௧௨

(இ-பொ-ரை).

இவ்விதமாக எண்ணிய தந்தையானவன் சந்திரவதனத்தையுடைய தன்மகளை ஒரு வேதியனுக்குத் திருமணஞ்செய்துகொடுத்து வேல்போன்ற தன்னிரண்டு கண்களுங்களிக்க ஆனந்தத்தோடிருந்தான் இப்பால் மன்மதனுக்குச்சரியான அழகுடைய நாயகனும் சவுமினியாகிய பெண்ணும் அனேக அற்புதமாக்கூடி மிகுந்த பூமியின்கண்ணே வாழ்ந்து வருகின்ற நாளில் ௧௨

விப்பிரமமாது சவுமினிபருவமேழுந்
தப்பியபினற்புடையதலைவனொழியக்கா
மப்பிணிமிகுந்துளம்வருந்தியுகமீத
கப்பிரியமாயிவன்கலந்தனனபேலை

(இ-பொ-ரை).

அழகிற்சிறந்த சவுமினியானவளுக்குப் பருவம் ஏழுஞ்சென்றபின்பு தனதுநாயகனானவன் இறந்துபோகவும் இப்பெண்ணானவள் காமப்பிணியினாலே மனமானது மிகவும் வருந்தி பூமியிலுள்ள பல ஜாதிகளோடு மனவிருப்பமாகக்கூடியனுபவித்து வந்தாள் எ-று (௧௩)

ளில் கண்ணீரானது பெருகியோடும்படி அழுதுக்கொண்டு கோட்டுவழியாகச்செல்லும்போது அருகே ஒருவாலிபனாகிய வேளாளன் கண்டு அவள் இணங்கும்படிக்கான வார்த்தைகளைச்சொல்லி அழைத்துக்கொண்டு தனது கிரகத்திற்குச்சென்று சொந்த மனைவியைப்போல வைத்து இவளால் இனியசுகங்களையும் அனுபவித்து மேன்மையோடும் காத்துவருவதை இப்பெண்ணானவள் கண்டு மனமகிழ்ந்திருந்தாள் எ-று (௧௭)

வன்னூரமுழுண்டுமுறைமாறியுறைபோதம்
பிள்ளைதன்பிறந்து வளரப்பிரியமாக
தன்னூரிருக்குமெயில்நாடியவனேரொல்
மெள்ளவழிவேகியபின்மின்பிரியவாடி

(இ-பொ-ள்).

இந்தப்பிராமணஸ்திரீயானவள் தன்னுடைய ஜாதி ஒழுக்கத்தைவிட்டு இந்த வேளாளன் புசிக்கின்ற பலஇறைச்சிகளையும் புசித்து வாழ்ந்து வருகின்ற காலையில் இவனுக்குச் சிலபிள்ளைகளானது பிறந்து அன்போடும் வளர்ந்து வரவும் ஒருநாள் வேளாளனானவன் தனது சிநேகிதர்களிருக்கின்ற வூரைப்பார்க்கிறதற்காக ஆசைகொண்டு மெள்ள நடந்துசென்றபோது இவனைவிட்டுப் பிரியாத சவுமினியானவள் அன்று இவன் பிரிந்தவுடனே மனமானது வாடினள் எ-று (௧௮)

காமவெறியாலுமதிகள்ளுணவினாலு
மேமமதிலேதொடுவிலேசிவசுகம்மைச்
சேமமொடுகொய்துமனைசென்றரியுமற்றந்
தீமையறிவின்மையிதுசிவசிவாவென்றாள்

(இ-பொ-ள்).

பின்னும் வாட்டமுற்ற சவுமினியானவள் காமவெறியினாலும் கள்ளுண்டவெறியினாலும் இரவிலே தனது வளவுக்குச்சென்று பசு

வினது கன்றைப்பிடித்து அதன் தலையை இன்பமாக அறுத்துக் கொண்டு வீட்டுக்குள் வந்து அரியுஞ்சமயத்தில் தீப ஒளியில் பசுவின் கன்றெனவறிந்து செயத்தகாத பொல்லாங்கைச் செய்துவிட்டோமே இது என்னபாவம் சிவசிவாவென்று மனமிரங்கினன் எ-று (௧௧)

நடலைபுரிகுந்தியைகைத்துருமறந்நீர்
கடிகைசெலமுடையிலுளகாதலனையாவுங்
கடிவொடுசன்மத்திவன்கறித்தனைதயொளித்தே
கொடியவரிதின்றதெனகோர்தெருமுன்வந்தாள்

(இ-பொ-ளை).

துணபத்தைத்தருகின்ற மதுவை சிந்தித்து மெய்மறந்து இரண்டு நாழிகை வரையும் சிவபெருமானைத்தியானிப்பதைப்போல மயங்கியிருந்து பின்னு மாமிசங்களைப்புசித்து வந்த ஆசையினால் பசுவின் கன்றின் தலையையும உடலையும மணத்தோடும் சமைத்துத்தின்றுவிட்டு அச்செயலை மறைத்து ஐயோ கொடியபுலியானது வந்து கன்றைப் பிடித்துக்கொன்று தின்றுவிட்டுப்போயிவிட்டதேயென்று யாவரும் கேட்கும்படி பெரிய தெருவில்வந்து கதறினள் எ-று (௱)

அவ்வொழியவெல்லையெழுவாடனும்வந்தே
வல்லையதிபாவமெனவாடியுடளித்தா
னல்லலையடைந்துசிலவல்கல்செலமாதுக்
கெல்லவரவொறறர்கொடுவியமனிடைவந்தார்

(இ-பொ-ளை).

இவ்விதமாகயிருக்கின்றபோது இராவானது நீங்கிச் சூரிய வுதயமானவுடனே அயலூருக்குப்போயிருந்த வேளாளன் தனது வீட்டிற்குவந்து இங்கு நடந்தசெய்திதனைத்தெரிந்து விசனமுற்று

பெண்ணே என்ன வருத்தத்தை வைத்தாய் மிகுந்த பாவத்தைத் தேடிக்கொண்டாயே என்று மனமானதுவாடி ஒருவாறுதேறி அது முதல் துன்பங்களையே அனுபவித்திருந்து சிலநாள் சென்றபின் சவுமினியானவளுக்கு ஆயுள்முடிவுவரவும் தூதர்கள்வந்து வருத்தப் படுத்தி எமதருமராசனிடத்திற்கொண்டுவந்துவிட்டார்கள் எ-று (௱௧)

இத்தமடமாதுவினையேனுமறிந்து
நத்தியைநினைத்தவொருகன்மைநரகில்லை
யத்தரணிமீதுபுலைமன்சிறுமியாய்நீ
வந்தணிபெறுவையெனவழங்கினனமன்மால்

(இ-பொ-ள்).

இத்தமாதினது தொழில்களையும் இவன் செய்த பாவங்களையும் முற்றிலுமுணர்ந்து ஆகிலும் இவன் கன்றையறுத்தவனது பின் பாவமென்று யெண்ணி மனம்பதறி சிவசிவாவென்று சிவபெருமானை ஒருகால் நினைத்த விசுவாசத்தைக்கருதி நரகத்தில் இவளைப் போடுவது தகுதியல்லவென்று அழகிய பூமியின் கண்ணே இழிவாகிய புலைனுக்கு மகளாகப்பிறந்து முடிவில் நல்லமோக்ஷத்தைப் பெற்று வாழ்வாயென்று சவுமினியானவளுக்கு எமதருமராசனானவன் கட்டளையிட்டான் எ-று-ஆல்-அசை (௱௨)

மன்னனுரையேசனனமாகிநிமிர்காலை
யன்னைவசுவின்தசையுமக்கணுணுமெச்சக்
தின்னவுமிருத்தகிசெழிப்பொடுவளர்த்தே
யுன்னைநமனுரைறயவப்பனுமடைந்தான்

(இ-பொ-ள்).

சவுமினியென்னும் பிராமணப்பெண்ணானவள் எமதருமராசன் உத்தரவின்படியே பூமியில் புலையனுக்கு மகளாகவந்து

பிறந்து வளர்கின்றபோது தாயானவள் பசுவின் - கன்றினது இறைச்சியையும் நாயினது எச்சியையும் தின்னும்படி இப்பிள்ளைக்குக்கொடுத்து மிகுந்த செழிப்பாக வளர்த்துவந்தாள் இப்பிள்ளை மகிழ்ந்திருக்கும்போது தாயானவள் விதிமுடிவினால் இறந்து எமபுரஞ்சென்றாள் பின்பு தந்தையுமிறந்தான் எ-று (௱௯)

பின்னுதவியன்றிமிகுபிணிதனில்வருந்துங்
கன்னியைமணஞ்செயவோர்களவருமிலாதா
லன்னமனமென்றுளறியையமுமெடுத்துண்
டின்னணமிர்ந்துகிழமாய்விழியிழந்தால்

(இ-பொ-ரை).

தகப்பனுந் தாயும் இறந்துபோனபின்பு ஒருவருதவியுமில்லாமல் மிகுந்த குட்டரோகியினால் துர்க்கந்த நாற்றத்தோடிருக்கின்ற கன்னியை மணஞ்செய்வதற்கு ஒரு வரும்கூடவிரும்பாததினால் வீதியெங்கும் அலைந்து அன்னமிடுங்கள் அன்னமிடுங்களென்று பிதற்றிக்கொண்டு நாள்தோறும் பிச்சையெடுத்துப்புசித்து இவ்விதமாகவே வளர்ந்து வயசு முதிர்ந்து கண்ணொழிவுங் கெட்டுகின்று தவித்தாள் எ-று-ஆல்-அசை (௱௰)

நன்னர்சிவசிவிரதகாடிநாரங்கோ
கன்னகரைமேவவிவள்கண்டுபிறகேகி
யன்னவொருவீதியிலஞ்சந்துகைவிரித்தே
மன்னமெனுவில்வமதையங்கொருவனிட்டான்

(இ-பொ-ரை).

நன்மைகளைத்தாகின்ற சிவராத்திரியினது நோன்பை விரும்பி அனேகசனங்கள் அழகுபொருந்திய கோகன்னகரத்திற்குச் செல்லும்போது இவள்கண்டு அவர்கள் பிறகே தானுங்கூடச்சென்று அந்த நகரத்திற்குப்போய் ஒருவீதியில் இருந்துகொண்டு கன்

ணிழந்த பாவியானவளுக்குச் சிறிது அன்னமிடுங்கோவென்று இருகைகளையும் விரித்துக்கேட்டாள் அது சமயத்தில் அருகே வந்த ஒரு பையனானவன் விளையாட்டுப்போல வில்வத்தளவாரி அன்ன மென்றுசொல்லி இவள் கையிலிட்டான் எ-று (௱௫)

உண்டியஸ்வெனமனதினுன்னியிடைவீசப்
பண்டிவளிழைசதவொருபடைவமரன்முடிமேல்
லண்டிமரகதவணியிதாமெனவுமமைய
வுண்டியிலிராதுயிலொளித்தக்கதியென்னே

(இ-பொ-ரை).

வில்வமானது இவள் கையிலே விழவும் அதை யவள் பார்த்து இது அன்னமல்லவென்று மனதிலேயெண்ணி பக்கத்திலே எறிந்துவிட்டாள் அப்போது இவள் முன் சிவசிவாவென்றுசொன்ன தவப்பலனென்று ஆங்கு எழுந்த சிவலிங்கத்தின் முடிமேல் விழுந்து மரகதமாலையைப்போலப்பொருந்தியது இதுவன்றி யிவளுக்கு அன்னம் அகப்படாமல் இராமுழுதும் பசித்துக்கொண்டு நித்திரையில் லாதிருந்ததினால் இவளுக்கு வருகின்ற அதிட்டத்தை யான் யென்னவென்று சொல்லுவேன் எ-று (௱௬)

வேதனைதர்ப்பபசியுமீறமிகுநோயா
லேதளரமெல்லெனவெழுந்தமொருநீச
மாதினையதோளைவசமாகவிவள்பற்றி
வீதியுளபாலைவழிசென்றிடைவிழுந்தாள்

(இ-பொ-ரை).

இம்மாதுக்குப்பசியானதுமிகுதி வருத்தங்களைத்தரவும் மிகுந்த நோயினாலே தளர்ந்து மெல்லெனவெழுந்து அவ்விடத்திற் கிட்டிய ஒரு இளமையான நீசஸ்திரீயினது தோளைப்பிடித்துக்கொண்டு கொடிய பாலைநிலத்தின் வழியாக நடந்துபோகிறபோது களைத்து நடுவழியிலே விழுந்தாள் எ-று (௱௭)

ஆவிவிடுகாலையரனங்கனகமான
மேவிமணிவாய்மலரமிக்ககணநாதர்
தாவிகொடுவந்தினியதான்பணியவன்றே
பூவையும்வணங்கியவர்பொன்னடியுறைந்தாள்

(இ-பொ-ரை).

விழுந்த மாதானவள் அந்த இடத்திலேயே உயிர்விடுகின்ற சமயத்தில் சிவபெருமானுக்குத்தெரிந்து தனக்கு மனதன்போடும் வில்வங்களால் அருச்சனைசெய்து சிவராத்திரி நோன்பிருந்தாளென மகிழ்ந்து கணநாதர்களை நோக்கி பொற்ப விமானத்தைக்கொண்டு போய் அம்மாதை அழைத்து வாருங்களென்று திருவாய்மலர்ந்தருளவும் உடனேசென்று அழைத்துக்கொண்டுவந்து சிவபெருமானது திருவடியை வணங்கினார்கள் அது சமயத்தில் இந்தமாதுக்கு ஞானமுண்டாகி சிவபெருமானைப்பணிந்து அவருடைய பாதத்தோடு சேர்ந்து வாழ்ந்தாள் எ-று (௩௮)

இச்சனனமையமுனிடாதுபசியுற்றாள்
மிச்சமதுவுண்டிருகண்மின்னொழியநாவி
னெச்சிலையருந்தியதுமேர்வசலையுண்டிங்
கிச்சிறுமைவந்ததிவ்வேவலையுமேவி

(இ-பொ-ரை).

இந்தப்பெண்ணானவள் இவ்விதமான கொடிய துன்பத்தை யடையவேண்டியதற்குக் காரணம் யாதெனில் இச்சனனத்திற்கு முந்திய சனனத்தில் பிச்சையிட்டுப்புசியாததால் பசியால்வருந்தினாள். கள்ளுண்டதினால் கண்ணிழந்தாள். பசுவின்கன்றைக்கொன்று தின்றதினால் நாவினதெச்சிலைப்புசித்தாள். விலைவயானபின் யாவரையும் விரும்பிக்கூடினதால் குட்டவியாதிவந்து சிறுமையடைந்தாள். இப்பாவங்களையெல்லாஞ்செய்தும்முன் சிவசிவாவென்றநினைத்த கதியினாலும் இந்த சனனத்தில் வில்வத்தை சிவலிங்கத்தின் முடிமேலிட்டதினாலும் சிவபெருமானது திருவடியிற்சேர்ந்தாள் எ-று (௩௯)

வெண்பிறைகடுக்கையரவென்புழைமழுக்கார்
கண்புடனணிந்தவரனல்லமையிது காணீர்
பண்பிதெனவேயிவர்கள்பாசமொடுகுடி,
மண்புகலவேபரவிமாபுகழடைந்தார்

(இ-பொ-ரை).

வெண்மையாகிய சந்திரனையும், கொன்றையையும், சர்ப்பத்தை யும், எலும்பையும், மானையும, மழுவையும, கங்கையையும், தரித் த சிவபெருமானுடைய சிவராத்திரியினது மேன்மையானது இத்தன் மையுடையதென்று முத்தரசனானவன் சொல்லவும் இனத்தாராகிய தனவைசியர்கள் யாவருங்கேட்டு அன்போடுஞ் சென்னியிற்குவித் தியந்துரைக்கும்படி பூமியிலுள்ளோர் இந்த நோன்பைக் கைக் கொண்டு துதித்துக்கீர்த்தியடைந்தார்கள் எ-று (௱௰)

வரிசையொடுகனகமணிதனவசியர்சிறப்பு
மரசியலரன்பெருமையுஞ்சிலஉரைத்தோம்
தரிசனமளித்துமிகுசங்கமலபாத,
தரிசனமளித்தவொருசரிதையினிவிள்வாம்

(இ-பொ-ரை).

சங்கையுடைய பொன்களும் இரத்தினங்களுமிருந்த தனவை சியர்களின் சிறப்பையும் உலகங்களெங்கும் செங்கோல்செலுத்திக் காத்துவருகின்ற ஒப்பற்ற பரமசிவனுடைய சிவராத்திரியினது பெருமையையும் இதுவரையுஞ்சொன்னோம் இனிமேல் சிவபெருமா னானவர் முத்தரசன் கனவிலேவந்து தோன்றித்தரிசனங்கொடுத்து யாவருங் கண்ணாரக்கண்டு களிக்கும்படி தாமரை மலர்ப்பாத தரி சனங்காட்டிய சரிதையையும் எம்மாற்றெரிந்தமட்டும் சிறிது சொல்லுவோம் எ-று (௱௰௧)

தனவைசியர்குலச்சருக்க முற்றிற்று,
ஆ. திருவிருத்தம் உ௱௰௧.

சிவமயம்.

# பாத தரிசனம் பெற்ற சருக்கம்.

நம்பிநானமைமேமுத்தரசதிபனயப்பொடும்பாவிட்டேமகிழ்ந்து
பம்பிநானினமும்பணியவேகூறிப்பதமினக்காணிலாவனைகயால்
வெம்பிநனென மார்க்கண்டனைப்புரந்தசெஞ்சமனமறனையுதைத்த
ருளு
மெம்பிரானரனுமுணர்ந்தருள் பெருகியிணையடிகாட்டுதற்கெண்ணி

(இ-பொ-ளை).

முத்தரசனானவன் நம்மை அன்போடுக்துதித்து மனமகிழ்ந்து நீயே கதியென்று நம்பினான் இதுவன்றித் தன்னுடைய குலங்களை யெல்லாம பணியும்படி சொல்லி அவர்களெல்லாம் பணியக்கண்டு ஆனந்தக்கூத்தாடினான் இன்னமும் சிவபெருமானது திருவடியைக் காணக்கிடைக்கவில்லையேயென்று மிகவும் வாடினனென்று அன்பனாகிய மார்க்கண்டனைப்புரந்துக் கொடிய எமதருமராசனைக்காலா லுதைத்து மீண்டுங்காத்தருளிய எமது சிவபெருமானானவர் ஆராய்ந்து கிருபையுண்டாகி தனதுபாததரிசனை கொடுத்தருள வேணுமென்று மனத்துள்ளேயெண்ணினார் எ-று (௪)

கனத்தினிற் செறிந்தவினத்தினி லெழுந்தகாலெனம்பதிக்கணியா
யோர்
தினத்தினிற்பரையோர்புறத்தினில் வயங்கத்திருவிடைவலமெழுந்
தேசெய்
பனத்தினிற்றோன்றிப்பாசனேசிசெய்படிவமேதருமிகுபசே
வனத்தினிற்சிறந்தபொன்னிமா நதியின்வளையருகேலையினிலணை
ந்தும்

(இ-பொ-ள).

பொன்னியிலேசிறந்த தனவைசியர் குலத்திலேவந்து தோன்றிய கன்னியாகிய முத்தரசனுடைய சித்தத்திற்கு சிவபெருமானானவர் அலங்காரமாக ஒருபொலிர்வில் அழகியரிஷபவாகனரூடராய் எழுந்தருளிவந்து அவனது சொற்பனத்திலே தோன்றி, வொராய் அன்பனே நீ செய்துவருகிற சிவராத்திரியின் விரதமே உனக்குவேண்டிய நன்மையைத்தரும் ஆகையால் நீ வீட்டிலேலவைத்துப் பூசித்துவருகிறதை விட்டு இனிமேல் நீர்வளஞ் சிறந்த காவேரிமாநதிக்கரையருகே யாவரும் வந்திருந்து வணங்குவீர்களென்று திருவாய் மலர்ந்தருளினார் எ-று (௨)

என்றலுஞ்சிரமேற்புனைந்தடி பரவியெங்களையாட்கொளுமிறையே
நன்றுனதருளேயெவரும்வியந்துநகைசெகௌக்கருதியவழியை
யொன்றவேகாட்டுமுகமதிலெனவாருளமகிழ்ந்ததிசிவசிசோன்
மன்றெமதரியதிருவடி நோக்கியளவிலாச்சாயலையடையும்

(இ-பொ-ள).

இவ்வாறு சிவபெருமானளித்தவிடையை முத்தரசனானவன் சென்னியிற்கூடிப்பாதங்களில் வீழ்ந்து வணங்கி எங்களை அடிமைகொள்ளுங்கடவுளே கட்டளைப்படி நடக்கிறோம் நன்றுநன்றெனப் போற்றி உன்னுடைய கிருபையை யாவருங்கண்டு துதித்துப்பேரானந்தமடையும்படி காவேரிமாநதிக்கரையருகே நீ எண்ணிய இடத்தை எங்களுக்குக்காட்டியருளும்தேவே என்று வணங்கவும், பரமசிவனானவர் மனமகிழ்ந்துகேட்டு மிகுந்த சிவராத்திரியன்று அவ்விடத்தில் அறனுமாலுங்காணாத எமது திருவடியைக் காட்டுவோங் கண்டுதுதித்து அளவில்லாத மேன்மையைப் பெற்றுவாழ்வீர்களென்று சொன்னார் எ-று (௩)

சங்கரனிசைக்கப்புகன்றமெய்நிச்சயமுணர்ந்தமூத்தரசன்
றிங்களும்பகலுங்கடிகையுங்குறித்துச்சிவநிசிவரவுந்தேறித்
தங்குலத்தவரையுமழைத்துறங்கலின்றடத்திருந்தலமயருமபோழ்
தெங்கனையருணம்பொனடிப்பாதமெழுந்தனரவிபோலங்கு

(இ-பொ-ரை).

சிவபெருமானனவர் இவ்வழியைச்சொல்லி மறைந்தவுடனே அன்பனாகிய மூத்தரசனு மகிழ்ச்சியடைந்து தமுடைய குறைபா னது நீருஞ்சமயம் எப்போதுவருமென்று எதிர்பார்த்திருந்து மாதங் களையெண்ணிகழித்து நாட்களையும் எண்ணிக்கழித்துப்பின்பு நா ழிகைகளையும் யெண்ணிக்கழித்த சிவராத்திரிவரவும் நமது பாசநி வமென்று ஒருவாறு மனந்தேறி தனது குலங்களையும் அழைத்துக் கொண்டு மிகுந்த காவேரிமா நதிக்கரையிலே வந்திருந்து சிவபெ ருமானை நினைத்துருகி இன்னமுங் கருணைசெய்யத் தாமதமெ ன்ன எந்தையே என்று இரங்குங்காலையில் எங்கள் கடவுளாகிய சிவபெருமானருளால் அவரது அழகியபாதகுறடானது அவ்விடத்தி லே சூரியனைப்போற் பிரகாசித்துத்தோன்றியது எ-று (௪)

கண்டனரிறைஞ்சிக்கணைவிழிபிறங்கக்கடிமலர்ப்படிமுடிக்கணிமா
னண்டருந்துளிக்கவயனுங்களிக்கவனைவருமபுதுமையிதென்னே
விண்டனரரன்மெய்த்திருவிளையாட்டைவிள்ளுவாரெனவியந்து
தொண்டனச்செறிந்தவினங்களைத் தழுவிற்றுறையினிற்றுதிக்கவுள்மேவி

(இ-பொ-ரை).

திருப்பாதகுறடானது தெளிவாகத்தோன்றியவுடனே தன வைசியர்களெல்லா மனமகிழ்ந்து வாசனைமிகுந்த மலர்களைப்பூமி தேவியின் திருமுடிநிறையச் சூடியதைப்போல சலசலவென்று பு ட்பமாரி பொழிந்தார்கள் அன்னகரத்தையுடைய சோழமகாராஜ னுந்துதித்துச் சந்தோஷத்தையடைந்தான் மற்றுமுள்ளயாவரும் இ துவென்ன அற்புதமாகவிருக்கிறதென்றும் சிவபெருமானது திரு

விளையாடல்களை எடுத்துச்சொல்ல யாவரால் கூடுமென்றும் அதிசயித்துப்புகழ்ந்தார்கள் கொண்டாடிய முத்தரசனானவன் ஆங்கு விறந்த இலங்கைத்தழுவி ஆனந்தத்தோடும் இந்தக்காவேரிமாநதியில் அதிசகமேவனுச்சமன்று விரும்பினான் எ-று (௫)

மஞ்சுலவிலெழுந்தமஞ்சுலைத்தழுவுமாடனைத்தாறுவமாபூ
கங்கைச்சுடர்மின்மணிதருங்கனிழையக்கனிமிகுங்கனியுளவம்ப
ணங்களைநிருதகடணிபணித்தோரணங்களுமாமணிச்சரமுந்
தொங்கலுந்தொடுததுப்புனிதனுமதிக்கச்சந்தரககாவணமிசைத்து

(இ-பொ-ரை).

விரும்பியவுடனே, ஆகாயத்தில் எழுந்த மேகங்களையளாவி வளர்ந்த மடல்களையும் நெடிய குலைகளையுந்தாங்கிய பெரிய கமுகுகளையும், பிரகாசமுள்ள மணிகளைத்தாரகின்ற கரும்புக்களையும், மதுரமுள்ள பழக்குலையைகொண்ட வாழைகளையும், நிறுத்தி வரிசை வரிசையாக மகரதோரணங்களையுங் கட்டி, முத்துச்சரங்களையும், வாசனையுள்ள பலவித மாலைகளையுந்தூக்கி, தேவேந்திரனுமதிக்கும்படி அழகிய பந்தல் செய்தார்கள் எ-று (௬)

எண்ணிலாக்கனலிடெனமணிச்சுடர்களெங்கணுமிலங்கவேநோக்கி
வெண்ணிலாப்புகழுஞ்சரமணிச்சடர்கள் மிகுதியாங்கழைமணிச்சுடர்கள்
விண்ணின்மீனெனவும்விளப்பினுட்டோன்றவெருவிராவிருளெலாமகலக்
கண்ணிருசகத்திரந்தருமனந்தன்களிக்கவேபுரிந்தனர்காட்சி

(இ-பொ-ரை).

இந்த அலங்காரத்தோடும், கணக்கில்லாத சூரியர்கள்வந்து நிறைந்ததைப்போல, தூண்டாமணிவிளக்குகள் எங்குஞ்சிறந்து பிரகாசிக்கவும், வெண்மைநிறத்தையுடைய சந்திரனுங்கண்டு புகழத்தக்க சரவிளக்குகள் அனேகம் இலங்கவும், கரும்புக்கணுக்களின்

வெடிப்பினுள்ளே யிருந்துபிரகாசிக்கின்ற முத்துக்களானது நட்ச த்திரங்களைப்போல விளங்கவும், இரவிலே நிறைந்த இருளெல்லாங் கண்டு நடுங்கி ஓடவும், இரண்டாயிரங் கண்களைப்படைத்த ஆதிசே டனுங்கூடக் கண்டுகளிக்கவும் வெகு அற்புதங்களாகச் செய்தார்கள் எ-று (எ)

பத்திரையளித்தபயசவிதேனற்பழம்பனிநீரபிஷேகம்
பத்தியாயமைத்துச்சலதரமதிக்கப்பரிமளத்துணரதிவில்வஞ்
சித்தியாயருச்சித்திறைவனாடியைச் சிந்தையுள்ளிருத்திராமுழு
நித்திரையகற்றியுழுவலையப்பரவிநிறைவொடுத்துதித்தனரன்றே ஏ

(இ-பொ-ள்).

இவ்விதமாகச்செய்தவுடனே நல்ல பசுவினது பால்களாலும் நெய்யாலும், தேன்களாலும், கதலிக்கனிகளாலும பனிநீர்களாலும் சிவபெருமானது பாதகுறடுகளுக்கு முறையோடும் வெகுபத்தியாக அபிஷேகங்கள் செய்து மேகங்களெல்லா மதிக்கும்படி வாசனை யுள்ள மலர்களாலும் மிகுந்த வில்வங்களாலும், ஒரு மனதோடும் அருச்சனைகள்செய்து சிவபெருமானது திருவடிகளை மனத்துள் ளேயிருத்தி இராவுமுழுதும் நித்திரையைத்தள்ளி அன்போடும் வண ங்கிப் பரிபூரணமாகத்துதித்தார்கள் எ-று (அ)

படிமிசையிவர்கள்பழவினைக்குறையும்பற்றறக்களையுமங்கிரியை
முடிமிசைப்புனைந்தானந்தமாயாடிமுடியவும்பூசைகளல்போய்
விடியவுமிதுபோற்றெழுமினியெனநன் விடையனித்தெழுந்தன விடையோ
னடிமனைப்பொருத்தவரிய பெர்ப்பாவலன்யர்களுளமெலாங்கவர்ந் தே

(இ-பொ-ள்).

பூமியின்கண்ணேயிவர்கள் செய்த ஊழ்வினைக்குறைகளை வே ரோடு அறுக்கவந்த சிவபெருமானது திருவடிகளைச் சென்னியிற்கு

முத்தரசனானவன் இனங்களுக்கெல்லாம் புகன்று தந்து இரதத்தி
ற்கு வந்து மாற்றுயர்ந்த பொன்னினாலே பிரகாசமுள்ள பாதகுறடு
ஞ்செய்து தகுதியோடு முன் பரமசிவன் குறித்த காவேரிமாநதியில்
உலகமுழுதும் விரும்புகின்ற சிவராத்திரியன்று அழகிய பந்தல்கள்
செய்து வருடந்தோறும் தவறாமல் துதித்துக் காவேரிமாநகரின்
கண்ணே இனிதாக வாழ்ந்துவருகின்றநாளில், எ-று (௰௧)

சம்புவைக்குளாயாய்ச்சமைத்து முன்மாறன்றனக்களித்தன்பனைப்
புரத்தான்] சம்புவைச்சதமுஞ்சதமெனத்தொழுமுத்தரசனம்புவிதரு
மூன்று] ரம்பலுங்கசந்தங்கினத்தவைவாழ்த்திராவணன்வரைகெடுத்த
வரை] யம்பிரானிடையிலிருந்துவாழ்பதவியடைந்தனனமருமியம்
[ப

(இ-பொ-ரை).

நரியைப் பரியாகச்செய்து பாண்டியனுக்குக்கொடுத்து திரு வாதவூரனைக்காத்தருளிய சிவபெருமானையே சதமென்று நாள்தோறும் துதித்துவந்த முத்தரசனானவன் மண், பெண், பொன் என்ற மூன்று ஆசைகளையுந்தரக்கூடிய பூலோகவாழ்வைவெறுத்து இனத்தார்களையெல்லாம் ஆசீர்வதித்து விட்டு இராவணனுடைய புயமானது தாங்கப்பெற்ற கயிலாயத்தையுடைய சிவபெருமானது சமீபத்தில் வாழுகின்ற சாமீபபதவியடைந்தான் எ-று (௰௨)

இப்பலனளித்தவிறைதிருவடியினேற்றமுமுறுதியுமோக்கிச் [பச்
சப்பன்றற்றனையரிருவருமுன்செய்தொண்டனேருலகிலின்றேனுமை
செப்பமாய்த்தூக்கிமுறையொடுந்துதித்துத்திணைகளும்பரவவேமே
வித்] தப்பிலாதாளுந்தகுதியன்றொடன்சாற்றுவனவனைவின்சாற்றும்

(இ-பொ-ரை).

முத்தரசனுக்கு நல்ல கதியைக்கொடுத்த சிவபெருமானது மேன்மையையும் நன்மையையும் அவனது குலத்திலே பிறந்த சுப்பன்செட்டியென்றொருவன் மைந்தன் சித்தனுஞ்செட்டியென்றும்

தம்பாஞ்செட்டியென்றும் பெயர்படைத்த இரண்டு குமாரர்களுங் கண்டு முன் பணிவிடைசெய்துவந்த அப்பனைப்போல பூமியின் கண்ணே இந்தச் சிவராத்திரிகோன்மை யெடுத்து தனது குலங்களை யெல்லாம், மனதின்பேரமும், விரும்பிப் பணியைச்செய்து தாமு முறைமையோடு செவ்வையாகத்துதித்து ஒரு குறைவுமின்றித் தகுதி யோடுங் காவேரிமார்களின் கண்ணே வாழ்ந்துவந்தார்கள் இவர்கள் பெருமையைச்சோழமகாராஜன்கண்டு புகழவும் கீர்த்தியடைந்தார் கள் எ-று (௯௩)

பந்தனைப்புரத்துப்பாகதியளித்தபங்கயப்பதத்திருக்கறைதனைப்
பத்தியாயுரைத்தோமினிப்புலிக்கொடியோன்பாலுறைந்துறுதியாய்
வெள்ளி] முத்தரசனுமாவமைச்சனுயாங்குமுடக்குமாணிக்கமுங்
கோத்த] சித்திரமதனைத்தொகடலுடுத்ததரணியினிற்சிறிதிசைத்
திடுவோம்.

(இ-பொ-ளை)

அன்பனுகிய முத்தரசனைப் பாதுகாத்துப் பதவியுங்கொடுத் தருளிய சிவபெருமானது திருப்பாதச்சரிதையின்மகத்துவத்தை இ துவரையுஞ்சொன்னோம், இனிமேல் காவேரிமார்க்கத்திற்கு அதிப தியாகிய சோழமகாராஜனுக்கு மந்திரியாகி சகலகாரியங்களையுங் குறைவற நடத்தி முடக்கு மாணிக்கமுங்கோர்த்துக்கொடுத்த வெ ள்ளிமுத்துசெட்டியது சிறப்பையும் நெடியகடலை ஆடையாக உடுத் த பூமியின் கண்ணே சிறிது சொல்லுவோம் எ-று (௯௪)

பாதரிசனச்சருக்க முற்றிற்று.

—:-0-:—

௮. திருவிருத்தம் உளங்கிக்.

௨.

சிவமயம்.

# மடக்குமாணிக்கங்கோர்த்த சருக்கம்

—————(:–o–:)—————

படியிற்புரவலருங்கனபகுதிப்பொருளருளி
யடியிற்பணிபுரியப்பெறுமபயப்பதிமாரன்
முடியிற்பலமணிவைத்தபொன்முடிவெல்லிணையிரக்
குடியிற்பொறியுறையக்கனகோல்செய்தனகுமரன்

(இ-பொ-ள்).

பூமியின்கண்ணேயுள்ள அரசர்களெல்லாம் மிகுந்த பகுதிப் பணங்களைக்கொண்டுவந்து கட்டிப்பாதத்திலே முடிசேர வீழ்ந்து வணங்கப்பெற்ற சோழமகாராஜனானவன் அழகிலே சிறந்த மன்மதனிவனேயென்று புகழத்தக்கதாக நவரத்தினங்களையழுத்திய பொற் கிரீடத்தை யணிந்து ஒளியானது சூரியனைப்போலப் பிரகாசிக்கவும் இலட்சுமியானவளுறைந்து சகலசெல்வங்களைத்தரவும், நீதியோடு சிம்மாசனத்தின்கண்ணிருந்து அரசாட்சிசெய்துவந்தான் ஏ-ரு-ஆம். அவை (க,

நாகப்பதிபுகழப்பதினவிறுப்புபுரக்கு
மேகப்பதிவனவன்பதிவழிமந்திரிபொன்னு
டேகப்பதிலினிமிக்கவரெவரென்னலுமவையார்
வேகம்பதிகுலரொருவிறலோனுளனேன்மின்

(இ-பொ-ள்).

தேவலோகத்திற்கு அரசனாகிய தேவேந்திரனும் புகழும்படி யனச்சக்கரவர்த்தியைப்போல பூமிமுழுமையுங் காத்துவருகின்ற சோழமகாராஜனுடைய மந்திரிகளிலே முதல் மந்திரியாக இருந்த

வன் ஆயுள்முடிவினால் சிவபெருமானிலங்கானின்று கயிலாயத்திற் குப்போய்ச்சேர்ந்தபின்பு அரசனானவன் கிலேசப்பட்டு இனிமேல் இவனைப்போலுந்திறமையுடையவர்கள் யாரிருக்கின்றனரென்றும் நமக்கு மந்திரி வேண்டுமே என்றும் வருந்துகின்ற சமயத்தில் அவ் விடத்தில் நிறைந்திருந்த சபையோர்கள்கேட்டு, ஓ ஐங்கதியுடைய புரவிகளுக்கு அரசனாகிய நகுலனுக்குச்சமானமான அண்ணலே, இதனாலே வருத்தப்படவேண்டாம். மந்திரிகளுக்கெல்லாம் வெற்றி யைப்படைத்த ஒரு வல்லவனிருக்கின்றான் அவனது முறையைச் சொல்லுகிறோம் கிருபை செய்யவேண்டுமென்று சொல்லத்தொட ங்கினார்கள் எ-று (௨)

தனவைச்சிரவணனற்சகைதகளைமன்றல்செய்தானுந்
தனவைசியரவையிற்புகழ்சதுர்வேதமுமோதி
னனவைப்பெறுவெண்முத்தெனநவிலப்படிமீது
சினவைத்தருபரனைப்பொருதேவெல்லவும்வல்லான்

(இ-பொ-ள்).

நிறைந்த செல்வங்களையுடைய குபேரனது வரத்தினால்வந்த அழகிய மாதர்களை மணம்புரிந்து வாழாநின்ற தனவைசியர் குழாங் களிலே பலசாஸ்திரங்களோடு நாலுவேதங்களையும் வழுவறக்கற்று த்தெளிந்தவனும் வெள்ளிமுத்துசெட்டியென்று நாமதேயம்பெற் று யாவரும் புகழும்படி சிறந்தவனும் பூமியின்கண்ணே கோபத் தையுடைய சத்துருக்களை யுத்தஞ்செய்து வென்று வெற்றியைத் தாஙின்ற வல்லவனும் ஒரு நீதிமானிருக்கிறானென்று சொன்னார் கள் எ-று (௩)

என்றேசொலவிறையீரயோடிருகாதுகொடுத்து
நன்றேயெனமறுவென்னலாகாடத்தமீதி
லன்றேகொடுவரவள்ளலையன்னோனடிபரவ
வென்றேயமதக்கானவிதியனியுறையென்றான்

(இ-பொ-ரை).

இவ்விதமாகச்சொன்ன சபையாரது வார்த்தையை அரசனானவன் அன்போடுஞ்செவிகொடுத்துக்கேட்டு அப்படியானால் மிகுந்த நன்மையென்று மற்று மந்திரிகளைப்பார்த்துச்சொல்லவும் அந்தக்குறிப்பையறிந்த மந்திரிகள் உடனே யெழுந்து அனேகம் பெயர்களோடு போய் வெள்ளிமுத்துசெட்டியை முத்துச்சிவிகையில் அழைத்துக்கொண்டுவந்தார்கள் வெள்ளிமுத்துசெட்டியானவனெழுந்து அரசனது பாதத்தில் வீழ்ந்து வணங்கினான் அரசன் கண்டு மனமகிழ்ந்து எனக்குத்தகுதியான மந்திரி நீயேயன்றி வேறில்லை ஆகையால் எனனுடைய தேசமுழுமையும் உன்னுடையதாக நினைத்துப் பாதுகாத்துவருவாயென்று கட்டளையிட்டருளினான் எ-று (௩)

௪

மதியேபெறவிதியன்றிருமன்னாதிபதிக
டுதியேபெறமுடிமன்விடைகுடிப்பவனிழலாற்
றிதியேபெறவோட்டிற்கனசிரோடுபுரத்தா
னிதியேபெறமுனருவியினிகாரவிகனையும்

(இ-பொ-ரை).

மிகுந்த அறிவைப்பெற்ற வெள்ளிமுத்துசெட்டியென்னு மந்திரியானவன் அழகிய பூமியின்கண் விளங்காநின்ற அரசர்களினது துதிகளைப்பெற்றகிரீடத்தையுடையசோழமகாராஜனது உத்தரவைச்சென்னியிற்சூடிச்சிவபெருமானதுகிருபையால்பாக்கியங்களைப்படைத்ததேயத்தில் நிறைந்த மனதையுடையமந்திரியானவன் தன்னுயிரைப்போலமன்னுயிரையுங்காத்துவந்தான் எ-று (௫)

கனமும்பொறைமறையும்பணகழறுஞ்சுகிர்தமருள்
மனமும்பொறைமலிவுத்தருவனமந்திரியெனமா
சனமும்பெருமகனும்பெருதலைவர்க்குளவெண்மா
வினமும்பொறிசதனுஞ்சொலவிவன்வாழொருவெல்லை

(இ-பொ-ளை).

சங்கைகளையும், பொறுமைகளையும், வேதங்களையும், உண்மைவ ளார்சொல்லப்பெற்ற முப்பத்திரண்டறங்களையும், நல்ல சிந்தை யையும், பூமி வளங்களையும், தானின்ற மாட்சிமையைப்படைத்த மந்திரியானவனிவனேயென்று பூமியின்கண்ணே மேன்மையான சனங்களும், சோழமகாராஜனும், அரசர்களுக்குறிய மந்திரிகளும், இலக்குமியின் புதல்வனாகிய மன்மதனும் வியந்துரைக்கும்படி வெள்ளிமுத்துசெட்டி என்பவன் சகலகாரியங்களையும் குறைவறந டத்தி வாழ்ந்துவருகின்றபோது ஒருநாளில், எ-று (௬)

நலகுங்குமமணியெண்ணனினத்தன்னொருமிக்கா
ளிலகுங்கதிரினமாமணியேகன்கொடுமுன்வைத்
தலருங்குறையில்மன்றிருவடிகண்டனனம்மூ
வுலகுங்கணியாரோர்பழுதுண்டென்னமுடக்கே

(இ-பொ-ளை).

நல்ல செஞ்சாந்துக்களை அணியாநின்ற இம்மந்திரியினது குலத்திலே மிகுந்த தனங்களையுடைய ஒரு வர்த்தகனானவன் சூரி யனைப்போலப்பிரகாசமுடைய ஒரு இரத்தினத்தைக்கொண்டுவந் து நிறைந்த சோழமகாராஜனது சமூகத்தில் வைத்துக்கண்டுக் கொண்டான், அம்மணியை அழகுபொருந்திய மூவுலகத்திலு மதிக் கமாட்டார்கள், ஆனால் இதற்கு ஒரு குறைவுமட்டுமுண்டு அது யா தெனில், நோக்குகிறதற்கு யாவராலு முடியாதென்று சொல்லும் படி நீண்டு மடங்கிய வடிவாய் அமைந்தது எ-று (௭)

மூத்தேவருமோகங்கொளுமுத்தேயிதெனக்க
ளித்தேயதிசிமிமாமொயளித்தேயிறையத்தை
யுத்தேபெறுவினையார்கைகொடுத்தேயினைவாய்தொ
டுத்தேவருவீரென்னவோருத்தாரமிசைத்தான்

(இ-பொ-ரை).

பிரமா, விஷ்ணு, ருத்திரன் என்று விளங்கிய மூவரும் ஆசை கொள்ளும்படி பிரகாசிக்கின்ற இரத்தினமிதுவே என்று சோழ மகாராஜனானவன் மனமகிழ்ச்சியடைந்து வேண்டிய திரவியங்களையும் அநேகம் குதிரை யானைகளையும் கொடுத்து அம்மணியைப் பெற்றுக்கொண்டு வேலையிற் சிறந்த தொழிலாளிகளை அழைத்து இம்மணியைக்கொடுத்துச்சிக்கிரமாகக் கோத்துக்கொண்டுவாருங்களென்று உத்தரவுகொடுத்தான் எ-று (அ)

கலியாவினையாரவ்வணராடிச்செயமேலும்
வலியாரினுபாயத்திலுமருவாததுகண்டே
மெலியாகிவேகொணர்வந்தொருதிருபாலுமேஎம்மாற்
பலியாதெனவைத்தாரதிப்பிரதம்வணிகி

(இ-பொ-ரை).

எந்த வேலைகளையும் வருந்தாமல் எளிதில் செய்கின்ற தொழிலாளிகள் அரசனுடைய உத்தரவின்படி தொடுப்பதற்கு விரும்பி வேண்டிய பிரயாசையெடுத்தும் முடியாமல், இவர்களுக்கு மேலான வல்லமையுடைய சிலபெயர்களிடத்தில் கொடுத்தார்கள், அவர்களது உபாயத்தினாலும் நிறைவேறாததைக்கண்டு தொழிலாளிகள் அரசனுக்கு என்ன சொல்லுவோமென்று பயமடைந்து பின்னும் மனந்தேறி அரசன் சமுகத்தில் இரத்தினத்தைக் கொண்டுவந்து வைத்து வணங்கி, ஒப்பற்ற கருணாநிதியே மற்றும் எந்தத்தொழிலைக்கொடுத்தாலுஞ்செய்கிறோம், இதைக்கோக்குகிறதற்கு எங்களால் முடியாதென்று சொன்னார்கள் எ-று (௯)

வேளேந்தியசமராரிருவேள்விக்கணியர்ப்பின்
வாளேந்தியவளவன்றொருவலனில்சொலுமெனுமுன்
றானேந்தியமதிமந்திரிமதிவோமெனமன்முன்
றோளேந்தியமொழுதேயிகுகமாகவளித்தான்

(இ-பொ-ரை).

கூர்மையுடைய மந்திரவாளைக் கையிற்பிடித்த சோழமகாராஜனானவன் ஆங்கு கூடியிருக்கின்ற சபையார்களது செவிகளுக்கு இனிமையாக இப்பூமியின்கண்ணே இம்மணியைக் கோக்குகிறதற்கு ஒரு வல்லவனில்லையாவென்று சொல்லுகிறதற்கு முன்னமே அடிமைகளையெல்லாம் காத்துவருகின்ற மந்திரியானவன் அக்குறிப்பையறிந்து சம்மாற் கூடியவனையும் பார்ப்போமென்று அரசன் முன் வந்து இருகைகளையும் எந்திக்கேட்டான் அப்போது அரசனானவன் மகிழ்ந்து இவனால் முடியுமென்று மதித்துக்கொடுத்தான்
ஏ-று (௰)

இவ்வாரமெடுத்தேயிவனில்லேகிமுடக்கா
லெவ்வாறுதொடுத்தாலுமிணையாதனகோவச்
செவ்வாய்மகடேனுரொருசிறுநூலிடவறலி
யிவ்வாய்வழிகொணாக்களித்திகோணிடைஎன்றான்

(இ-பொ-ரை).

மந்திரியானவன் இந்த மாணிக்கத்தைத்தனது வீட்டுக்குக் கொண்டுவந்து கூடிய பிரயாசையெடுத்துப்பார்த்தான், இது மடங்கியிருப்பதினாலே எவ்விதவுபாயமாகத்தொடுத்தபோதிலும் பொருந்தாமலிருப்பதைக்கண்டு மனம் வருந்துகின்றபோது, கொவ்வைக் கனியைப்போலச்சிவந்த வாயையுடைய இவனது மகளானவள் பார்த்து அம்மணியை வாங்கி ஒரு சிறிய சரட்டின் நுனியில் இனிய தேனைத்தோய்த்து மணியின் துவாரத்திலே பொருத்திவைத்தாள், சிறிது பொழுதுக்குள்ளாக ஒரு சிற்றெறும்பானது தேன் வாடையைக்கண்டுவந்து சரடிருக்கிற துவாரத்திற்குட்செல்ல இடமில்லாமல் மறு துவாரத்தின் வழியாகச்சென்று இனிமையான சரட்டைக்கவ்விக்கொண்டு சென்றவழியே மீண்டும் வந்தது உடனே இக்கன்னியானவள் மகிழ்ந்து தந்தையாகிய மந்திரியிடத்திற்குவந்

து காண்பித்து இதைக்கொண்டுபோய் அரசனிடத்தில் கொடுத்து
க்கீர்த்தியடைவீரென்று சொன்னான் எ-று (௰௧)

கன்னாயவமைச்சன் புரிந்தமெய்த்தவத்தானம்பனுய்ந்து மைந்தனை
யன்னவன மகளாயவதரியெனவுமவளுதித்தன்பது பிரியா [னோக்கி
னென்னவேசிறந்த மகளுதைவாங்கியேயியம் மணிதனைநல்க [ன்
மன்னுள மகிழ்ந்திம்மணிதனைக்கோத்த மதியுளாராரெனப்புகல்வா

(இ-பொ-ள்).

மந்திரியானவன் வெகுகாலமாக குழந்தையில்லாது பின்பு அவன் செய்த நல்ல தவத்தினாலே சிவபெருமானானவர் மனமிரங்கி பார்வதிதேவியைப்போய் நீயவனுக்குப்புத்திரியாக அவதரிப்பாயென்று திருவாய்மலர்ந்தருளவும் உடனே தேவியானவள் மகிழ்ந்து அவ்வண்ணமே பூமியிலங்கண்ணே யிவனுக்கு மகளாக வந்து பிறந்து அம்புபிரியாள் என்னும் பெயர்பெற்று வளர்ந்துவராநின்ற தனது புத்திரியானவள் சொன்ன மொழியை மந்திரியானவன் பெற்று அந்தமணியைக்கொண்டு சோழமகாராஜனிடத்தில் கொடுக்க மன்னனானவன கண்டு மகிழ்ந்து இதைக்கோத்த மதியுடையவர் யாவரென்றுகேட்கவும் மந்திரியானவன் சொல்லத்தொடங்கினான் எ-று (௰௨)

மானேறியகாமார்பெருமானேரடிதொழுது
மானேறிலெனமனையீன்றநன்மானேயறியெங்கோ
மானேயெனநகைகொண்டிடவமானேரியனதிசி
மானேயெனவெவ்வூருந்தொழுமானேமிபுரத்தான்

(இ-பொ-ள்).

நிறைந்த கையிலே மானைத்தரித்த சிவபெருமானது திருவடியைத்துதித்து அவரது கிருபையால் உத்திரக்ஷேத்திரத்தன்று எனது மனைவியானவள் பெற்று வளர்த்துவருகிற எனதருமை மகள் தான் கோத்தது எங்கள் அரசனே நீயறிவாயாகவென்று சொல்ல

வும் இளமை பொருந்திய மன்னனானவன் மகிழ்ந்த, இருமையுள்ள வன் இவனே என்று யாவருந்துதிக்கும்படி பெருமையுடைய பூமி முழுமையுங் காத்துவந்தான் எ-று (௨௩)

ஆராவிறையால்வைசியன் றனிமந்திரியாகிச்
சீரார்புவிமீதாரொருஞ்சிந்தைகளிக்க
வாரணமணிதொடுத்ததுமிசைத்தோமினிவசியர்
நீராருந்தன்னகர் நீங்கியசேரும்புகல்வோமால்.

(இ-பொ-ரை).

இவ்வுலகத்திற்கு அதிபதியாகிய சோழமகாராஜனிடத்தில் வெள்ளிமுத்துசெட்டியென்பவன் மந்திரியாக இருந்து பூமியின்கண்ணுள்ள யாவரு மனமகிழ்ச்சியடையும்படி சகல காரியங்களையும் குறைவற நடத்திக் கீர்த்தியடைந்ததையும் மூடக்குமாணிக்கங் கோத்த சரித்திரத்தையும் இதுவரையுஞ் சொன்னோம் இனிமேல் அழகுபொருந்திய வசியர்களெல்லாம் காவேரிமாநகரைவிட்டு நீங்கிய சரித்திரத்தையுஞ் சிறிது சொல்லுவோம் எ-று-ஆல்-அசை (௨௪)

மடக்குமாணிக்கங்கோத்த சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௱௩௰௫.

---

உ

# தனவைசியர் காவேரி நகரைவிட்டு நீங்கிய சருக்கம்.

(:--o--:)

ஆரம்பணியணிமார்பனலகிபன்மகவளவன்
னாரம்பணியணிமந்திரிமற்புத்திரிபுலவோ

யாரம்பணியாவ்முற்றுமறிந்தாசைகொளவுமன்
மாரன்பிடிதாரம்பிடமயல்கொண்டதிதளர்வாய்

(இ-பொ-ள்).

அழகிய நவரத்தினாபரணங்களையணிந்த மார்பையுடையவனும் நல்ல சுகபோகங்களைப்பெற்றவனுமாகிய பாலனைச் சோழமகாராஜனானவன் அவளைபயும் அழகையும் ஆபரணமாக அணிந்த தன் மந்திரியினது மகளின் விவேகத்தையும் அழகு முதலியயாவும் மாணிக்கங்கோத்த மூலமாய் தெரிந்து இவள்மீது ஆசைகொண்டான் அது சமயத்தில் மன்மதனானவன் மலர்க்கணை தொடுக்கவும் காமமானதுமீறி அதனால் மிகவுஞ் சோர்ந்து சகிக்க முடியாதவனாய் (௧)

மதிமந்திரியிடையன்னவன்மகளைக்கடிசெய்தி
யதிபன்மிகுகாசைகொண்டனராமென்றுனைநீபோய்த்
ததியென்றிறைநதன்பொக்கிஷகாரன்பதிசாற்றப்
பதியேசெறியலவென்றுதிணைபாலிவன்வந்தால்

(இ-பொ-ள்).

தனது பொக்கிஷ அறையைக் காத்துவராநின்ற சோழகுப்தனை அழைத்து ஓ. சோழகுப்தனே நீ நமது மந்திரியிடத்தில் சென்று உனது புத்திரியின்பேரில் எங்கள் அரசனானவன் மிகுந்த ஆசைகொண்டு காமனால் வருந்துகின்றபடியால் இது சமயமே அரசனுக்கு அக்கன்னிகையை திருமணஞ்செய்து கொடுப்பாயென்று கேள்க்கும்படி சொல்லவும் அதைக்கேட்ட சோழகுப்தனானவன் ஓ. எங்கள் தலைவனே சமூகத்துக்கு இது நீதியல்லவென்று இரக்கமாகச்சொல்லிவிட்டு தனது இனத்தார்களிடத்திற்கு வந்துசேர்ந்து எ-று-ஆல் அசை (௨)

மாலன்புகழிறைவோரிவ்வகையாவுமொழிந்தோர்
காலன்பகைவருமுன்பெறுகருணைக்கிணைசம்பு

பாலன்பகைவருமுன்னொருபதிவிட்டொருபதிபோய்ச்
சீலம்படவேவாழுதல்திறமென்றுநவின்றான்

(இ-பொ-ரை).

திருமாலும் புகழுகின்ற பாலனைச் சோழமிகாராஜனானவன் சொல்லிய வார்த்தையை விபரமாகவுரைத்து நமனானவன் வந்து துன்பப்படுத்திக் கட்டிக்கொண்டுபோகிறதற்கு முன்னமே சிவ பெருமானது கிருபையைப்பெறுகின்ற அடியார்களைப்போல நமது அரசனது பகையானது வருகிறதற்கு முன்னமே இந்த நகரத்தை விட்டு அடுத்த நகரத்திற்குப்போய் வாழ்வதே நன்மை என்று சோழகுப்தன் சொன்னான் எ-று (௩)

பொன்னாடிதுவென்னவேபுகழ்புரியிற்பொழிலன்றி
இன்னாளவொருவினையுமில்லையேநமதிணையுள்
மின்னாரணிசிறைநூறவும்விதியோமதிதவறிற்
பன்னாளுமிகழென்றனர்பலருஞ்செவினரால்

(இ-பொ-ரை).

தேவலோகமானது இதுதானென்று சொல்லும்படி சிறந்த இக்காவேரிமாநகரின் கண்ணே ஆசமுதலிதுவரையும் நாம் பெருமையைப்பெற்று வந்தோமேயன்றி ஒரு குறைவும் அடைந்ததில்லை அப்படியிருக்க இப்போது நம்முடைய குலத்திற் சிறந்த மந்திரியின் மகளினது கற்பானது அழியும்படிக்கு வந்த விதிப்பயனை இவ்விதமென்று அறிகிலோம், ஆகிலும் நம்முடைய மதியைத் தவறவிடுவோமாகில் எந்நாளும் நிந்தைக்கிடமாகுமென்று ஆங்குள்ள யாவரும் ஆராய்ந்து சொன்னார்கள் எ-று-ஆல்-அசை (௪)

வெற்புக்குறையெனவிம்மிநன்விளையுங்கமழ்முலையார்
பொற்புக்குறைந்திடின்குறைபொறியின்குறையுறுசீர்
நிற்புக்குறைமகரின்குறைநேரிற்பெரிதன்றே
கற்புக்குறைவரிலெம்முயிர்காணீரெனவிண்டார்

(இ-பொ-ள்).

மலையையுஞ் சிறிதெனச்சொல்லும்படியாகப் பருத்தெழுந்து நல்ல வாசனையானது கமழாநின்ற தனபாரங்களையுடைய வசியகுலப்பெண்களெல்லாம், இது செய்தியைக்கேட்டு வருத்தமுற்று இளமைபொருந்திய அழகானது தவறியபோதிலும் திரவியங்களானது தவறியபோதிலும் நம்மிடத்தில் வசிக்காநின்ற இலக்குமியானவள் தவறியபோதிலும், மிகுந்த செல்வத்தைத் தருகின்ற பூமியானது தவறியபோதிலும் அருமையான பிள்ளைகளானது தவறியபோதிலும் பெரிதல்ல, கற்புநிலையானது தவறிவிடுமேயாகில் எங்களுயிரைக் காணமாட்டீர்களென்று ஆடவர்களைப்பார்த்துச் சொன்னார்கள் ஏ-று (௫)

நயமேதருமகளிருறைநகைவயில்விதியெனமா
சயமேதருமிளையோருறுதகைவாகவுணர்ந்தே
மயமேதருமொருமாநிலவறைசெய்துபினுலகிற்
சுயமேதருமிறையும்பல்கொலையச்சமித்தன்றே

(இ-பொ-ள்).

அம்மொழியைக்கேட்ட வசியர்களெல்லாம் நன்மையைச் செய்கின்ற மாதர்குழாங்கள் தனது கற்புக்குப்பழுதுவருமேயென்றுபயந்து சொல்லியவார்த்தையானது மேன்மையென்று உணர்ந்து அரசனுக்குத்தெரியாமல் இந்நகரத்தைவிட்டு நீங்குகிறதற்கான நிலவறையொன்றுசெய்துமுடித்து பின்பு, அரசனது குலமுழுதும் நசித்துப்போகக்கடவதென்று சபித்துவிட்டு ஏ-று-அன்று-அசை (௬)

மறுவெல்லிவரல்வில்நிலவறையின்வழியேசென்
றுறுகாவிரிவரவெள்ளமுழுவர்மான்வரம்திமா
னறுகாடகமணியுந்திருவரனேயெனவணையிற்
சிறுகாதிருவால்கோணியசெம்பாலமிதெனவே

(இ-பொ-ரை).

கிலவறையானது செய்த மறுநாளிரவிலேயே தனவைசியர் குலமுழுதுமசேர்ந்து அந்த கிலவறைவழியாகச்சென்று மிருந்த காவேரிநதியருகேவந்து சேர்ந்தார்கள் அதுசமயத்தில் வெள்ளமானது கட்டுப்போலப் பொங்கிவருவதைக்கண்டு சந்திரனையும், மானையும், அறுகையும், படத்தையுடைய சர்ப்பத்தையும், அணிந்த சிவபெருமானை, மனதிலே நினைத்துச் சிந்தித்தார்கள் உடனே நதியின் கரையருகே நிறைந்து நின்ற இரண்டு ஆலவிருட்சங்களானது செவ்வையாகச் செய்தமைத்த பாலமிதுவோவென்று மதிக்கும்படி வளைந்து கொடுத்தது எ-று (எ)

சிந்தனைக்கடங்கேகுப்தனுமதிமந்திரியுமா திருவிடைமருதூர்
வந்துறைந்தனரினயினனுமற்றுள்ளோர்மணிநடுமண்டலம்வடம்பூர்
கந்தமாஞ்சமயபுரமொடுதுவரங்கட்டி மேன்மஞ்சப்புத்தூர்சேர்
தந்தன் சோழபுரமிதுநகரிற்றங்கிவாழ்ந்தனருளமுவந்தால்

(இ-பொ-ரை).

சிவபெருமானது கிருபையால் வளைந்த ஆலவிருட்சத்தின் வழியாக யாவரும் காவேரிமாநதியைக்கடந்து, சோழகுப்தனும், மந்திரியும், திருவிடைமருதூரில் வந்துறைந்தனர் மற்றுமுள்ள வசியர்களெல்லாம் அழகிய நடுமண்டலம், வடம்பூர், சமயபுரம், துவரங்கட்டி, மஞ்சப்புத்தூர் சோழபுரம் என்று பெயர்விளங்கிய இந்த நகரங்களிலே வந்துறைந்து மேன்மையாக வாழ்ந்து வந்தார்கள் எ-று (அ)

ஆல்-அசை

இன்னமுறைநாளிவரிலன்னடுமண்டலத்தினிலிந்திரகுலத்தா
ரென்னவேவசிக்குஞ்சித்தணன் தம்பானெனுமுடன்பிறந்தவரினத்
தோர்] டுன்னதந்தருசீராவிமேன்வந்தங்குறைந்து வாழ்ந்தனரினி
தாகப்] பொன்னிநாடதின்முன்புரிந்த மாளிகைக்கும்பொற்பென
[ப்புகன்றிடப்புரிந்தால்

(இ-பொ-ள்).

இவ்விதமாகத்தனவைசியர்களெல்லாம் வாழ்ந்து வருகின்ற நாளில் தேவேந்திர கோத்திரத்திலே உதித்து நாமண்டலம் என்னும் நகரத்திலே வசித்துவராநின்ற சித்தணன் செட்டியும் அவனது சகோதரனாகிய தம்பரன்செட்டியும் இன்னும் இவர்களைச்சேர்ந்த இந்திரகுலத்தாரெல்லாம் அந்த நகரத்தைவிட்டு மேன்மைபொருந்திய நீராவிநகரித்திலே வந்துறைந்தி மூன் காவேரிமாநகரத்திலே அமைத்த மாளிகைகளும் இதற்கு இணையில்லை என்று சொல்லும்படிக்கான மாளிகைகளைக்கட்டி இனிதாக வாழ்ந்து வந்தார்கள் எ-று-ஆல்-அசை (௬)

நத்தியரனடி பரவுந்தனவசியர்காவிரிமாநகரைநீங்கி
இத்தரணிமீதெழுமாநகரமதிற்சிறந்துவளரினிமைசொன்னோம்
பத்திமிகுசுராதிகள்பணியவருநிறைகருணைப்பரவையான
முத்தரசகுலநாதன் றிருவவதாரத்தையினிமொழிவோமன்னோ

(இ-பொ-ள்).

ஆசையோடும், சிவபெருமானது அழகிய திருவடியைத் துதித்துவருகின்ற தனவைசியர்களெல்லாம், காவேரிமாநகரத்தைவிட்டு நீங்கி, மேற்கூறிய எழுநகரத்திலும் வந்து சிறந்து இனிதாக வசித்து வருகின்ற சரிதையை இதுவரையுஞ்சொன்னோம் இனிமேல் அன்பு மிகுந்த தேவர்களும் தவத்தில் சிறந்த முனிவர்களும் பணியப்பெற்ற நிறைந்த கருணைக்கடலாகிய முத்தரசகுலநாதனது திருவவதாரத்தையுஞ் சிறிது சொல்லுவோம் எ-று-மன்னோ-அசை (௭)

தனவைசியர் காவேரி நகரைவிட்டு நீங்கிய சருக்கமுற்றிற்று.

———:—0—:———

௮ திருவிருத்தம் ௨௱௬௰௫.

———







உ

திருச்சிற்றம்பலம்.

# திருவவதாரச்சருக்கம்.



நிறைகுடிக்காவிரியற்கரையணிமிட்டினிதாகப்பலன்ருட்கு
கறைகுடிப்பண்ணந்தகடந்தனைநினைந்தினைந்துருகியசையாவெல்லு
மறைகுடிப்புகழுறமாவசிடரெலாமிகாடிவருந்துங்காலை [தான்
பிறைகுடிப்பாணிரங்கிவிடைசகுவிடையளித்திருந்தான் பிறப்பிலா

(இ-பொ-ளை).

நாலுவேதங்களையும் ஆராய்ந்து புகழ்படைத்த தனவைசியர்களெல்லாம் நியாயத்தையே ஆபரணமாக அணிந்து காவேரிமாநதிக்கரையிலே அழகிய பந்தல் அமைத்து மென்மையாகச் சிவபெருமானது திருவடிகளுக்கு வாசனையுடைய புஷ்பங்களால் அருச்சனை செய்து வணங்கி தாமடைந்துவந்த நன்மைகளை சித்தனன் செட்டி தம்பான் செட்டியாகிய இரண்டு பெயர்களும் எண்ணி யெண்ணி

புகுந்தேடி மன்மானது வருந்துகின்றபோது மூன்றாம் பிறையைத் தரித்த சிவபெருமானானவர் இரங்கி நந்திதேவரை அழைத்து நீர்போய் அன்பனுக்குத் தரிசனங்கொடுத்துவருவீரென்று திருவாய் மலர்ந்தருளிப் பிறப்பும் இறப்புமில்லாத முதல்வன் கயிலாயத்தின் கண்ணே வீற்றிருந்தார் எ-று (௧)

நீராழியுடுத்தசெம்படியிடையிற்சுடர்காட்டிநிமிடங்காட்டு [ம்
மோராழித்திகிரியரிக்கெண்மடங்காயுலகமெலாமொளியைக்காட்டு
பேராழிவலையரியைமணந்தவிலைக்கன் றனுமன்பிடைநீக்குஞ் [ற
சீராழியளித்ததுபோற்சித்தனைக் கனவிலதன்சேசிறப்பாய்த்தோன்

(இ-பொ-ள்).

நீர்நிறைந்த நெடிய கடல்சூழ்ந்த பூமியெங்கும் ஒளியைக்காட்டிக் காலநுட்பங்களையுங் காட்டுகின்ற ஒரு சக்கரத்தேரையுடைய சூரியனுக்கும் எட்டுப்பங்கு அதிகமாக அண்டசராசரங்களெல்லாம் பிரகாசத்தைக்காட்டாநின்ற சக்கராயுதத்தையும் சங்கையுந் தரித்த ஸ்ரீமன் நாராயணமூர்த்தியை மருவிய மகாலட்சுமியானவள் சீதையாகப்பிறந்து இராவணனுடைய சிறையில் அகப்பட்டிருக்கும்போது இராமசாமியாகப்பிறந்த நாராயணமூர்த்தியானவர் தனதுபிரியநாயகி வருத்தமானது நீங்கும்பொருட்டு கையிலணிந்திருந்தகணையாழியை அனுமாரிடங்கொடுக்க அவர்கொண்டுபோய் அம்மையைக்கண்டு கொடுக்கும்போது சீதையானவள் எவ்வளவுமகிழ்ச்சியடைந்தனளோ அதுபோல சித்தனுடைய மனவருத்தமானது நீங்கும்படி சிவபெருமான் அனுப்பிய நந்திதேவரானவர் அலங்காரமாக ஒருநாளிரவில் இவன்கனவிலே வந்துதோன்றினார் எ-று (௨)

மாவிலங்கைக்கோபுயந்தவலியசுதனிழைத்தபெருமாயத்தாக்கில்
மாவிலங்கையெடுத்த விராமனுக்கிளையோன்றுணையொடுமயங்கிவீழ
மாவிலங்கல்கவிழும்பறித்தமாருதேசைமூலமலிந்தமாசஞ்
சீவிகொடுபோத்தெளித்தசீரணைசேவடிபாவிச்செப்புவாரன்

(இ-பொ-ரை).

செல்வத்தையுடைய இலங்காபுரிக்கு அதிபதியாகிய இராவண
னது வரத்தினாலுதித்த வலியகுமாரனாகிய இந்திரசித்துசெய்த
மாயைப்போரில் மேன்மையான கோதண்டத்தை அழகியகையிலே
பிடித்த இராமசுவாமிக்கு இளையோனாகிய இளையபெருமாளானவர்
சேனைகளோடு மயங்கிப்போர்க்களத்திலேவீழ்ந்தபோது, பெரியமலை
களையும் விருட்சங்களையும் பிடுங்கி யுத்தஞ்செய்யாநின்ற வாயுகுமார
னென்னும் அனுமாரானவர் அறிந்து நிறைந்த சஞ்சீவிமலையைப்பி
டுங்கிக்கொண்டு வந்தவுடனே யாவருமூர்ச்சைதெளிந்து எழுந்திரு
ந்த தன்மையைப்போல எம்பெருமானிடத்திலிருந்து வந்தநந்தி தே
வரைக்கண்டவுடனே சித்தனனுக்கு மனமானது தெளிந்து அவரது
திவ்வியபாதங்களை வணங்கிச்சிலது சொல்லத்தொடங்கினான் எ-று
(௬)

மேரினுக்குளூறுபுயத்தானிறைவனவனகரொனுங் காவேரியின்கண்
ணேரினுக்குளுறுசிவன்றொழுக வினியாங்குவரவிசையாதெனை
பாரினுக்குளுறுநீரவிப்பதியிற்பதிகொடெனப்பணிந்துகற்ப
தாரினுக்குந்தேனுவுக்குங் கொடைபயிற்றுங்கரத்தான்சாற்றி
னான்

(இ-பொ-ரை).

மலைகளுக்குள்ளே மிகுந்த மலைபோலுந்திரண்ட புயங்களையு
டைய சோழமகாராஜனது நகரத்தில் காவேரிமாநதிக்கரையிலே
அழகுசிறந்த சிவபெருமானது திருவடிகளை இதுவரையுந்துதித்துக்
கொண்டுவந்தோம் இப்போது அரசனது குணத்தைக்கண்டு அடுத்
த நகரத்திற்கு வந்துவிட்டபடியால் அவ்விடத்திற்கு இனிமேல் வ
ருகிறதற்கு மனம்பொருந்தாது ஆகையால் பூமியின்கண்சிறந்த இந்
த நீராவிநகரத்திலேயே துதித்துவரும்படி இடங்கொடுத்தருளவே
ண்டும் எந்தையே என்று கற்பகதருவுக்கும் காமதேனுவுக்கும் கொ
டையைக்கற்றுக்கொடுக்கும் கரங்களையுடைய சித்தனனென்னும்
அன்பனானவன் வணங்கிச்சொன்னான் எ-று (௭)

நினமிகுந்தமுதருறவரிந்திரனுன்முகனரியுஞ்செறிந்துகூடி
மனமிகுந்தரனைப்பணியவரமுனின்றேகையமர்த்திவாழுநந்தி
இனமிகுந்தவன்பனுனையினிதெனக்கொண்டென்சலைதகடீனைடகண்டாங்கு
கனமிகுந்தவாலயஞ்செய்தமைத்தொழுவாயெனப்புகன்றங்கயிலைபுக்கார்.

(இ-பொ-ரை).

மிகுந்த தேவர்களும் தவமுனிவர்களும் தேவேந்திரனும் பிரமா விஷ்ணுவும் செறிந்து கூட்டமாகவந்து நாடோறும் மனதன்போடு சிவபெருமானைப் பணியும்போதெல்லாம் சிவபெருமானது முன்னின்று அவர்களது பணிகளையும்பெற்று சந்நிதியையும்விலக்கிக் கையமர்த்தி வாழாநின்ற நந்திதேவரானவர் வசியகுலத்திற் சிறந்த சித்தனனுனவன் சொன்னமொழியை இருசெவிக்கும் அமுதமெனக்கேட்டு அன்பனே நீ அரியதவத்தால் பெற்றெடுத்த மகனானவன் நம்முடைய கிருபையால் வாயாரச்சொல்லுகின்ற இடம் எதுவோ அவ்விடத்திலே மேன்மையான திருவாலயங்கட்டிடம் எம்பெருமானைப்பூசித்து வருவாயென்று திருவாய்மலர்ந்தருளிக் கயிலாயத்திற்குச் சென்றனர் எ-று (௩)

வேறு

நந்தியேசவுமன்பனுள்ளிருள்போலவேகியரர்வுபின்
வந்தனன்பகலோனரன்செயுமனைமகாணவெழுந்தபோது
சந்திசெய்தரனைப்பணிந்துசிசாவில்வந்தனுவலைதப்
பந்தியானவினைந்தரோபேகர்ந்தனன்பரிவாகவால்

(இ-பொ-ரை).

நந்திதேவரானவர் சென்றபின்பு அவரது தரிசனம்பெற்ற அன்பனது மனஇருளானது எவ்வாறு நீங்கியதோ அதுபோலவே இன்று சிவபெருமானது மகத்துவத்தைக் காணுவோமென்று மிகுந்த ஆ

ளுடுத்த சிற்றிடைமீது பொற்குடத்தை எடுத்து வைத்துக்கொண் டு அழகிய மான்கன்றோ அன்னப்பேடோவென்று மதிக்கும்படி மெல்ல நடந்து தடாகத்திற்குச்சென்று நீராடி குடத்தில் சலம் நிரட்டினுள் அது சமயத்தில் பிரகாசமுடைய செவ்வலரிப்புஷ்பம் ஒன்றும் வெள்ளையலரிப்புஷ்பம் ஒன்றும சலத்தோடு குடத்தில் வந்து சேர்ந்தது எ-று-ஆல்-அசை (அ)

வரவுமாமலர்கண்டுதாதையின்வாயுளாத்திடவேலிலு
தெரிவைமாரிடைசெப்பினளவர்சென்றுகூறவினத்தாய்த்
தரவணிந்தவனருளெனக்கடிவாவுமின்னவளகலிகன்
பிரவைதுனனியகுணமெடுத்துறுபிரசமாவனமேவினுள்

(இ-பொ-ள)

பொற்குடத்திற்குள்ளே அழகிய புட்டியுங்கனானதுவந்த அமை யவும் இக்கன்னியானவள்கண்டு மகிழ்ந்து இதுசெய்திலை தனது பிதாவுக்குத்தெரியும்படி ஆங்குவந்த சிலமாதர்களிடத்தில் சொல்லி யனுப்பினுள் அந்த மாதர்கள்போய் இந்த அதிசயத்தைச் சொன்ன வுடனே தனவைசியர்கள் யாவருங்கேட்டு சிவபெருமானது திரு வைபவென்று ஆராய்ந்து சீக்கிரமாகவந்து கண்ணுரக்கண்டு தரிசித் தார்கள். இக்கன்னியானவள் அதுசமயமே பொற்குடத்தையும் எடுத்துக்கொண்டு அவர்களைநோக்கி என்கூட வாருங்களென்று சொல்லிவிட்டு விட்டிலாபுரத்தில் சிறந்த மாளிகைக்கு வந்து சேர்ந்தார்கள் எ-று (௬)

அன்னிபத்தையுணர்ந்தவன்பனுமாவல்கொண்டுறவொல்லையித்
றன்னினத்தொடுமேலையாயினிதானமாவனம்வந்தபின்
கன்னிகண்டதிபூரவாசனைகமழுமிவ்விடைகண்டீர்
வன்னமேதருமதரினுவிருவட்டமுஞ்செயுமென்றனள்

(இ-பொ-ள).

கன்னியானவள் இனிதாகச்சொன்ன காரணத்தைத்தெரிந்து

சித்தனென்செட்டியானவன் தன் கனவிலேவந்தருளிய கடவுளின து மகத்துவமென்று மனத்துள்ளேயெண்ணி ஆசைகொண்டு சீக்கிரமாகத் தன்குலத்தார்களோடு மேலானமாவனத்திற்குவந்து சேர்ந்தான் கன்னியானவன் இவர்களைநோக்கி இவ்விடத்தில் இப்போது கருப்பூரவாசனையானது பரிமளிக்கும் அதையறிந்து வெண்மையுள்ள மணலின்மேலே இரண்டுபீடஞ்செய்யுங்களென்றுசொன்னான் (௰)

கங்குலைத்தருகுழலினளிதுசழற்வும்பவனிழலினுற்
கொங்குபொங்கியகோடுகண்டுகுவிந்தவைசியரேவருஞ்
சங்கையாவிருபீடமங்குசமைத்தபின்னருணர்ந்தமான்
செங்கையாலுளதாழிநீரபிஷேகமுஞ்செயமெச்சினர்

(இ-பொ-ள),

இருளைப்போலுங் கரியகூந்தலையுடைய கன்னியானவன் இவ்வாறு சொல்லவும் சிவபெருமானது கிருபையால் கருப்பூர வாசனையானது பொங்கியது. இப்புதுமையைக் கூடியிருக்காநின்ற தனவைசியர்களெல்லாம் பார்த்து மனமகிழ்ந்து மதிப்பாக இரண்டுபீடஞ் செய்தமைத்தார்கள். அதையறிந்த கன்னியானவன் தான் கொண்டுவந்த பொற்குடத்தினது நீரை இரண்டுபீடங்களுக்கும் அபிஷேகஞ் செய்தனன் யாவருங்கண்டு துதித்தார்கள் எ-று (௰௧)

மேலைவட்டமெழுந்தவெண்மணர்மின்குணக்குமுகந்தரச்
சாலயாமியவட்டமீதுறைதாரதக்குமுகந்தர
வாலமீரதில்வெண்சவாமியமருணமம்பிகையென்றுமா
சீலமானுமகிழ்ந்துசாற்றியநிலைகளுக்குமியம்பினன்

(இ-பொ-ள).

கன்னியானவன் அபிஷேகஞ்செய்யவும் வெள்ளைப்புஷ்பமானது மேலைப்பீடத்தில் எழுந்தருளியிருந்து கிழக்குமுகமாக இலங்கவும், சிவப்பு புஷ்பமானது தெற்குப்பீடத்திலெழுந்தருளியிருந்து வடக்குமுகமாக இலங்கவும், அல்லகுணத்தையுடைய கன்னியானவள்

கண்டு புகழ்ந்து தன்னைச்சூழ்ந்து நிற்கின்ற தனவைசியர்களைப் பார்த்து ஓ அன்பர்களே இந்தப்புஷ்பங்களிரண்டில் கிழக்குமுகமாகத்தோன்றிய வெள்ளைப்புஷ்பத்தினது பீடமே சுவாமியென்றும வடக்குமுகமாகத்தோன்றிய சிவப்பு புஷ்பத்தினது பீடமே அம்பிகை யென்றுந் தெளிவாகச்சொன்னான் எ-று (௯௨)

வாசமாமதுகண்டுபால்கனிவாயனங்குனாலேயுப
தேசமென்றெணிமுடிபுனைக்கொருதிருவரம்பெறவெண்ணிமா
தேசமெங்குமிலங்கமாபெயர்செப்புமென்றவணங்கவே
யீசருக்கதிபாசராகியவேவருக்குமியம்புவான்

(இ-பொ-ள).

வாசனைமிகுந்த தேனோ, கற்கண்டோ, பாலோ, கனியோ, என்று புகழாநின்ற இனிமைபொருந்திய வாயையுடைய கன்னியானவன் சொல்லிய வசனத்தையேயுபதேசமென்று சென்னியிற் சூடி அழகிய வரமொன்று பெற்றுக்கொள்ளக்கருதி எங்கள் குலதெய்வமே மேன்மையைப்படைத்த நாடெங்கும் பிரகாசிக்கும்படி யாங்கள் நாவாரச்சொல்லி வாழ்த்துதற்கு தகுந்தபடி இப்போது உற்பத்தியான சுவாமியினது திருநாமமும் அம்பாளது திருநாமமும் விளங்கும்படி செப்பியருளவேண்டுமென்று வணங்கிக் கேட்கவும் கன்னியானவன் மகிழ்ந்து சிவபெருமானது மிகுந்த அன்பர்களுக்குச்சொல்லுவதாயினான் எ-று (௰௧)

முன்னமொல்லுமிறைஞ்சிவந்தணிமுத்திபெற்றனை றயன்பனு
வின்னரும்படிமீமுறைறமுறைறயாயிறைஞ்சினீராதலா
லன்னவன்றிருநாமமேதகுமாறுனைமக்கதுமற்புதம்
முன்னம்வைத்தருளம்பிகைக்கிசைமுத்துமாலையெனச்சொனான்

(இ-பொ-ள).

ஆதியிலே நாடோறும் வணங்கிக்கொண்டுவந்து முத்திபெற்று வாழாநின்ற அன்யனது அனுகூலத்தினாலே அருமையான பூமியின்

கண்ணே வழிவழியாக வணங்கிவந்தீர்கள் ஆதலால் அந்த அன்பனுடைய நாமதேயமே சிவபெருமானுக்குப் பொருந்தியிருக்கின்றபடியால் சுவாமியினது திருநாமம் முத்தரசகுலநாதன் என்றும் அன்பர்களை மனத்திலே வைத்துக்காத்துவருகின்ற அம்பிகையினது திருநாமம், முத்துமாலையம்மன், என்றும் சொல்லிப்பணியுங்களென்று புகழாகச்சொன்னான் எ-று. (௰௪)

கோதிலாதவணிமல்கவேடறலுந்தனைக்கிய
நாதிமுத்தரசகுலநாதனின்னருமையானபதத்தையுஞ்
சோதியாகியமுத்துமாலையின்தூயபாதமுமேவியே
நீதியோடுபணிந்துவந்திவர்சிறையகத்தினில்வாழுநாள்.

(இ-பொ-ள்).

யாதொரு குற்றமுமில்லாத கன்னியானவன் இவ்விதமாக உண்மையைச் சொன்னவுடனே தனவைசியர்களெல்லாம் மனக்களிப்படைந்து முத்தரசகுலப்பெருமானது திருவடிகளையும் பிரகாசத்தையுடைய முத்துமாலையம்மனது பரிசுத்தமான திருவடிகளையும் பணிந்து தனது கிரகங்களுக்கு வந்து செல்வத்தோடு வாழ்ந்து வருகின்றநாளில் எ-று (௰௫)

மாவியங்கெகாவினிற்பெருமானியங்கியபாலினிற்
பாவியக்கயியங்கமாநலபாழியாடவலித்தநன்
மாவியன்பனுமேவியங்குளமாகுசங்கினுறவுங்
கூவிடாவலாயேவிஞானிகொண்டபண்டத்தகாத்தினுள்.

(இ-பொ-ள்).

மேகங்களானது சஞ்சரிக்கின்ற மாஞ்சோலையின்கண் சிவபெருமானானவர் வந்து தங்கியருளிய இடத்தில் புகழ்பெற்ற வேதாகமமே விளக்கும்படி மேன்மையுள்ள திருவாலயஞ்செய்யவேண்டுமென்று வாசனையுள்ள மாலையையணிந்த அன்பனென்னும் சித்த

ணுனவன் கருதி வனத்திற்குவந்த பெரிய விருட்சங்களையெல்லாம் வெட்டியழிக்கும்படி கூலியாள்களை விடுத்தான் மிகுந்த கொடைகளைப்படைத்த கரத்தையுடைய அன்பன் எ-று (௰௩)

நாகமிந்துளமாரமாமடநறவமாதுளைபிண்டியால்
பாகல்கொக்கொடுகோளிசாதிமொய்பலவருக்கமனைத்தையும்
வேகமாகவிறுத்தினர்படிமீதிரிந்தநாகமும்
நாகமும்பெலனுகமுங்கனநாகமெங்குநடுங்கவால்

(இ-பொ-ள).

புன்னை, கடப்பம், சந்தனம், மேன்மையுள்ள, தாழை, குங்குமம், மாதுளை, அசோகம், ஆல், பலா, மா, அத்தி, தேக்கு, இவைகளோடுகூட்டமாயுள்ள பலசாதிவிருட்சங்களையும், கூலிக்காரர்கள் கூடி கடுமையாக வெட்டினார்கள் அம்மரங்களானது, வனத்திலுள்ள அரவங்களும் குரங்கினங்களும் எட்டுத்திசையிலுமுள்ள மலைகளும் ஆகாயமும் பூமி முழுமையும் நடுங்கும்படி சாய்ந்தனகள் எ-று
ஆல்-அசை (௰௪)

கந்தமாமலர்தூவிநற்கனிகளையுமீய்த்தெழுமாவெயி
லுக்கதடுத்திடைநின்றிலங்கியவுறுதிகண்டதிவொல்லையி
லெங்கணீசமுத்தரசகுலநாதனிரங்கிமுத்தியளித்திடச்
சத்தருக்கள்பணிந்துவேண்டியதகைமைபோலவிழுந்ததால்

(இ-பொ-ள).

இந்தவிருட்சங்களானது சிவபெருமானுனவர் இவ்விடத்தில் பரமானந்தமாயெழுந்தருளியிருக்கின்ற புகழினால் வாசனையுடைய புஷ்பங்களைச்சொரிந்தும் இனிமையுள்ளகனிகளையும், தேன்களையும் விருப்பமாகக்கொடுத்தும், சூரியனால்வீரப்பட்ட வெயிலைத்தடுத்தும் பக்கத்திலே நின்று பிரகாசித்துக்கொண்டும், நின்று செயலை யற் றதயாகிய முத்தரசகுலப்பெருமான் தெரிந்துமனமிரங்கி சேவிர்த்

தில் இதுகளுக்கு முத்திக்கொடுக்க அவரதுதிருவடியில் வீழ்ந்து வணங்கி அதைப்பெற்றுக்கொண்ட தன்மையைப்போல விருட்சங்கெல்லாஞ்சாய்ந்ததுகள் -எ-று-ஆல்-அசை (௰௮)

வானளாவியகொக்கினங்களின்மருப்பழங்களுதிர்ந்துசெந்
தேனளாவிமிர்ந்தபாகல்செறிந்தளித்தபழந்தினைக்
கானளாவியவோலையின்கனிகசிவுபொங்கியுருட்டிமன்
மீனளாவியகானிலோடுதன்மின்னிலங்கைமொயொத்ததால்

(இ-பொ-ரை).

ஆகாயத்தையளாவிய மாமரங்களிலுள்ள மிகுந்த கனிகளானது உதிர்ந்து நைந்து அதிலுள்ள மதுக்களானது ஓடிப்பாய்ந்து அதை யுண்டு வளர்ந்த பலாமரங்களினது கனிகளை வாசனைமிகுந்த வாழையின் கனிகளிலுள்ள மதுக்களானது சிந்திப்பொங்கி உருட்டிக்கொண்டு அழகிய மச்சங்கள் உலாவாநின்ற கானில்போய் விழுந்தோடுகின்ற தன்மையானது பிரகாசமுடைய இலங்காபுரியில் ஆதியில் நடந்த யுத்தத்தில் இராமசுவாமிக்கு இளையோனாகிய இளையபெருமாளானவர் விடுத்தபாணங்களினால் அறுபட்ட அசுரர்களது தலைகளை இரத்தவெள்ளமானது எவ்விதமாக உருட்டிக்கொண்டு போயினதோ அதுபோல விருந்தது எ-று-ஆல்-அசை (௰௯)

மாவனத்தையழித்தபோதுபைமாசுணங்களெழுந்துதேம்
பூவனச்சதுரகிரிசென்றுளபொற்குகங்களைநாடியே
மேவவங்குறைமோனராவிதுவேறலைக்களைபுக்குசீர்
தேவதேவனெழுந்துறைந்தருள்செய்திலையச்சொனதொத்ததால்

(இ-பொ-ரை).

மாஞ்சோலையை வெட்டி அழித்தபோது படத்தையுடைய சர்ப்பங்களெல்லாம் எழுந்து வாசனையமைந்து நிறைந்த புஷ்பவனஞ்சிறந்த சதுரகிரியை நோக்கிச்சென்று அங்குள்ள அழகிய குகைகளைக்கண்டுவிரும்பி அதனுள் செல்லவும் தவமுனிவர் உள்ளே வாச

ம் செய்துகொண்டிருப்பதைக்கண்டு மற்றமுள்ள குகைகள்தோறுஞ் சென்று முனிவர்கள் தவமுமலிருப்பதைப்பார்த்து வியந்து இவ்விதமாகப் புகுந்துபுகுந்து வெளியே வருகின்ற தன்மையானது ஓ முனிவர்குழாங்களே இந்தக்குகையைக்காத்துக்கொண்டிருப்பதினால் உங்களுக்கு என்ன பிரயோசனம் சிவபெருமானனவர் விட்டிலாபுரத்திலகண்ணே எழுந்தருளியிருக்கின்றார் அன்போடும் சென்று கண்ணாரக்கண்டு தரிசித்து வேண்டிய நன்மைகளைப்பெறு) வீர்களென்று தெரியப்படுத்தியதைப்போல இருந்தது எ-று-ஆல் அசை. (௨௰)

ஆதியோருழைதொட்டபீடுமேகத்திலுன்னிவனத்தையும்
பூதியாகவழித்தெனைமக்கொடுபோகமேவியகள்வனே
மீதியானதனுக்கழற்சிலைமின்பிரம்பறைபட்டுமுன்
வீதிதோறுமிரந்தருந்தியவிற்லெனப்பிணமுகைசெல

(இ-பொ-ள).

ஆதியிலே ஒருமானைப்பிடித்துக் கையில் வைத்துக்கொண்டிருக்கிற பெருமையை மனத்துள்ளே எண்ணி அந்த ஆசையினால் இந்தப்பெரிய வனத்தையும் புழுதியாகும்படி அழித்து எங்களைப் பிடித்துக்கொண்டுபோக வந்த கள்வனே, மிகுந்த வில்லாலும், செருப்பாலும், கல்லாலும், பிரகாசமுடைய பொற்பிரம்பாலும் அடிபெற்று மேன்மையான வீதிகள்தோறும் அலைந்து பிச்சையெடுத்துண்ட வீரத்தினால் இவ்விடத்திற்கு வந்தாயோ எங்களுக்குவேறு இடமில்லையென்று நினைத்தாயோவென்று மதிக்கும்படி மான் குழாங்களெல்லாஞ் சென்றதுகள் எ-று (௨௰௧)

வில்லால் அடித்தது அருச்சுனன்.

செருப்புக்காலாலுதைத்தது கண்ணப்பநாயனார்

கல்லாலெறிந்தது சாக்கியநாயனார்

பிரம்பாலடித்தது பாண்டியன்

அவ்வினத்தொருபிணையெழுந்தெனதாருயிர்க்கொருதுணைவரே
இவ்வனப்பெருமானிடத்துறையிடபமும்பிணையுமிவைபோற்
கெவ்விதஞ்செலும்விடுவரோவெனவென்னவற்புதமறிவிலா
வெவ்வனப்புயலும்பதங்களுமிடைவிடாதுதரித்ததேன்

(இ-பொ-ரை).

இவ்விதமாக மான்களானது செல்லும்போது அதிலொரு மானானது தன் இனங்களைப்பார்த்து எனது உயிர்க்குயிராகிய துணைவர்களே இந்தமாவனத்திலே எழுந்தருளிய சிவபெருமானிடத்திலிருக்கின்ற மாடும் மானும் சிறையில் அகப்பட்டதைப்போல இவரைவிட்டு நீங்காமலிருக்கின்றதே இவைகளுக்கு எவ்விதமாகச் செல்லும் ஆனால் அச்சமயம் மேய்ச்சலுக்கு விடுவரோவென்று கேட்கவும் ஓகோ அறிவில்லாதாய் நீ கேட்கிறது என்ன புதுமையாகவிருக்கின்றது அவர் விடுவாரேயாகில் விரைவாக ஓட்டம்பிடிக்குமென்று அறியாயா அதற்காகவல்லவா கங்கையையும் அறுகம்புல்லையும் இடைவிடாமல் தலையில்வைத்துச் சுமந்துகொண்டிருக்கிறார் அதையும் பார்த்ததில்லையாவென்று அந்த மான்கூட்டங்களானது சொல்லிக்கொண்டு சென்றதுகள் எ-று (௨௰௨)

மதனையுங்கதைசமனையுஞ்சிவன்மாபதம்பணிதொண்டனின்
சுதனையும்பவமென்றெணுதொலைத்தவன்கடுவுண்டவன்
அத்தனமாகியகம்பினத்தரினதளையும்புனைதீரனன்
லத்தன்முன்வரிஞ்சியிலாசைகொள்வானெனப்புலிமொழிசெல்

(இ-பொ-ரை).

மன்மதனையும் தண்டாயுதத்தையுடைய நமனையும் சிவபெருமானது திருவடியை வணங்குகின்ற சிறுத்தொண்டன் மகனையும் பாவமென்றெண்ணாது கொன்றவனும் கொடியவிடத்தையுமுண்டவனும் வலியிருந்த கம்பினத்தாரின் தோலையணிகின்ற தீரன் இவனது இலைத்த வதனத்திற்குமுன் நாம் தோன்றுவோமேயாகில் நம்மைப்

பார்த்து இதுகளின் தோல்கள் மிகவும் அழகாயிருக்கிறதே என்றெண்ணி போராசைப்படுவான் அதற்கு முன்னமே இவ்விடத்தை விட்டு நீங்குவது நன்மையென்று புலியினங்களெல்லாஞ் சென்றதுகள் எ-று (௨௱௩)

மணிமுடிக்கொருதசரதன்மகவாகிலங்கையைவென்றமால்
பணிபவிங்கினிவருவனமிகுபலமுளோரெனவறிவன்மா
துணிவொடுந்திரியலவெனநருவிடொழிலிவர்க்குளதாவினந்
துணைசெயும்படிகோருவானதிசோலியென்றரிமுகைசெல

(இ-பொ-ரை).

இரத்தினக்கிரீடத்தையணிந்த நீதியோடும் செங்கோல் நடாத்திவரத்தக்க பெருமையையுடைய தசரதமகாராஜனுக்குக் குமாரனாக வந்துதித்து இலங்காபுரி மன்னனை வென்றருளிய ஸ்ரீ ராமபிரானென்னும் திருமாலானவர் இந்தவனத்தின் கண்ணே எழுந்தருளிய சிவபெருமானைவணங்குகிறதற்காகவருவார் நாமெல்லாமிகுந்த பலசாலிகளென்று முன்னமே அறிவார் திடனோடும் பகைவரையெல்லாம் வெல்லக்கூடிய வல்லமை இவருக்குண்டும் ஒரு சமயம் பகைவர்மேல் போருக்குப் போகவேண்டியதாகவிருந்தால் முன் இலங்கைப்போரில் செய்தவுதவியைப்போல இன்னமும் ஒரு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்வாரேயாகில் தடைசொல்லுவது சரியல்ல யுத்தங்களிலேயோ மிகுந்த தொந்தரைகளுண்டும் ஆகையால் இப்பொழுதே இதைவிட்டு வேறு இடத்திற்குப் போகிறது நன்மையென்று குரங்கினங்களெல்லாஞ் சென்றதுகள் எ-று (௨௱௪)

பங்கயாசனனஞ்சமாயதிபதுமைநாதன்வராகமாய்த்
தங்கணாண்மைவிளக்கிநாடியுமறுகுருதுனிப்பொருள்
இங்கெழுந்தருணிதிமாவிடையோதமாககபதியினத்
துங்கமாகவெழுந்தபோல்விளைகுழும்வேண்டீம்வந்தால்

(இ-பொ-ள்).

பிரமதேவனானவன் அன்னப்பட்சி வடிவுகொண்டும் மகாவிஷ்ணுவானவர் வராக வடிவுகொண்டும் தங்களது வல்லமைகளை எடுத்துக்கூறி வெகுகாலமாகத்தேடியும் கிட்டாத சிவபெருமானானவர் இந்த மாவனத்தின்கண்ணே எழுந்தருளிய மகத்துவத்தை மகாவிஷ்ணுவினது சமுகத்தில் தெரியப்படுத்தவேண்டுமென்று மேன்மையாக எழுந்ததைப்போல கருடப்பட்சிகளெல்லாம் இவ்விடத்தைவிட்டு நீங்கி திருவேங்கடத்திற்கு வந்து சேர்ந்தது எ-று (௨௫)

சந்தனப்புழுகேறிமீறியதனவிடைச்சியர்மனைதொறுஞ்
சொந்தமாகவிருந்தணைந்திசுகமடைந்தவனோடுநீ
முந்தநாடியபரமெழுந்தனர்காணெனத்திசைமுகனிடை
இந்தமேதைசொலக்கிளர்ந்தனவெகினமொய்க்கணெனச்செல

(இ-பொ-ள்).

சந்தனங்களையும் புழுகுகளையும் புனைந்து வாசனையானது மிகுந்து திரண்டெழுந்த தனபாரங்களையுடைய இடைச்சியர்கள் மனைகள் தோறும்தனதாகப்போயிருந்து அவர்களைத்தழுவிக்கூடி நல்ல சுகங்களைப்பெற்ற திருமாலோடு முன்னம் விரும்பித்தேடியசிவபெருமானானவர் இவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்றாரென்று பிரமதேவனிடத்தில் சொல்லுகிறதற்காக எழுந்ததைப்போல அன்னப்பக்ஷிகளெல்லாம் இந்தமாவனத்தைவிட்டு நீங்கியது எ-று (௨௬)

அயிலெடுத்தவனேயெனப்பணியன்பருக்கருட்கதையே
கயிலையெம்பெருமானெழுந்தனர்க்கந்தமாவனமீதிலென்
றுயிலுடன்சொலவோவெழுந்தனவுறுகுரல்மினவென்னமா
மயிலினங்கடிருப்பரங்கிரிவலமிறங்கியசைந்ததால்

(இ-பொ-ரை).

வேலாயுதத்தைக் கையிலேபிடித்துத் தாருகாசுரனைவென்று தேவர்களது சிறையைமீட்டுக் காத்தருளாநின்ற வல்லவனேயென்று பணிகின்ற அன்பர்களுக்குக் கிருபைசெய்துவரும் தந்தையே சிவபெருமானானவர் மீனத்தின்கண்ணே எழுந்தருளியிருக்கின்றாரென்று சுப்பிரமணியக்கடவுளது சமுகத்தில் தெரியப்படுத்துகிறதற்காக மிகுந்த சிறகுகளைவிரித்துப் பிரகாசிக்கும்படி எழுந்ததுகளோவென்று மதிக்கும்படி மயிலினங்களெல்லாம் திருப்பரங்கிரிமேல் வந்துநின்று ஆடியது எ-று-ஆல்-அசை (௯௫)

இவ்வனத்துளசீவசெந்துகளேகவும்பினிலத்தையுஞ்
செவ்வைசெய்துகணிதருரைப்படி திருமுகூர்த்தந்தம்புரிந்
தெவ்விடத்துமிதற்குநேரிலையென்றுலகருமெச்சவே
யெவ்வனத்தின்மிகுந்தவன்பணியற்றினன்றிருவாலயம்

(இ-பொ-ரை).

இந்தமாவனத்திலுள்ள சீவபிராணிகளெல்லாம் இவ்விதமாக நீங்கியபின்பு அந்தஇடத்தைத் திருத்திக்கொண்டு சோதிஷியர்களை அழைத்துவந்து சிவபெருமானது ஆலயங்கட்டுகிறதற்கு நாள்பார்க்கும்படிசொல்லி அவர்கள் குறிப்பிட்ட நன்முகூர்த்தவேளையில் தொடங்கி இதற்குச்சமானமாக எந்தத்தேயங்களிலுமில்லையென்று தேவர்களும் புகழும்படி அழகிய சித்தனானவன் திருவாலயம் செய்துமுடித்தான் எ-று (௯௬)

மணியிலங்கியமேரெழுந்துவமைந்ததோகனகத்திரு
லணிபடப்பலபிரதிமைப்பணியாவலைத்தரமாமவ
மணியழுத்தியிழைத்ததோபெருமானிரக்கமெழுந்ததோ
வணிதமென்றுபுகழவிளங்கிலமவுரனளாவியசிகரியால்

(இ-பொ-ள்).

மேகத்தையுடைய ஆகாயத்தையளாவி அமைந்த கோபுரமானது அழகிய பொன்மலையேவந்து பொருந்தியதோ மாற்றுயர்ந்த பொன்னினாலே பலபதுமைகளை அணியணியாக நிறுத்திய நற்பணிகளானது பார்த்தவர்கள் கண்களுக்கெல்லாம் ஆசையைக்கொடுக்கும்படி மேன்மையான நவரத்தினங்களை வைத்தழுத்திச்செய்ததோ சிவபெருமானது கிருபைதான் இவ்வுருக்கொண்டெழுந்ததோ வெகு அழகாயிருக்கிறதென்று யாவரும் அதிசயிக்கும்படி சிறந்து விளங்கியது. எ-று-ஆல்-அசை (௨௯)

நாகலோகமதின்முளைத்துறநாகமுட்டியநாகமோ
வாகனந்தனையுன்னிவீறெனமாதிரத்தையெடுத்ததோ
மாசறுத்தனசிற்பருள்ளளிவைத்தமைத்தவிநோதமோ
மாகபாலியினுய்யத்தவனைத்தியங்கியபுரிசையால்

(இ-பொ-ள்).

மேன்மையுள்ள சிவபெருமானது திருவாலயத்தைச்சுற்றி அமைந்த மதிலானது, ஆதிசேடனெனவன் வசிக்கின்ற உலகின் கண்ணே ஆகாயத்தைத் தொடும்படி மிகுதியாக வளர்ந்தெழுந்த மலையோ அழகியசேடனெனவன் நீங்காது பூமியைத்தாங்கிக்காத்துக்கொண்டிருப்பதையும, ஆகாயமானது ஒரு உதவியுமன்றி நிற்பதையும் பார்த்திரங்கி நாம் இதைப்புரப்பதுபுண்ணியமென்று தாங்கிக்கொண்டு நிற்பதற்காகவெழுந்ததோ, வேலைகளிலே மிகு கருத்துடைய சிற்பர்கள் சுவாமியினது கிருபைக்காக மனதிலே அன்பு வைத்துச்செய்த மகத்துவமோவென்று சொல்லும்படி சிறந்து விளங்கியது எ-று-ஆல்-அசை (௩௰)

வாமமேதரும்பசாலுளமாடமுன்னிறைபீடமேற்
சேமமேதருநந்திகேசர்சிறுமரியிரமனவிகள்
வாமமேதருமவிகமழ்திருவாட்சியுங்கனதம்பமும்
நாமமேதருகரிமுகன்குகனுந்தனம்மையினுழியுமேல்

(இ-பொ-ரை).

அழகிய நாலுகால்களால் அமைத்த சிங்காரமண்டபத்திற்கு முன்னே நிறைந்த பீடத்தின்மேல் யாவருக்கும் நன்மையைச் செய்கின்ற நந்திதேவரானவர் எழுந்தருளியிருக்கின்ற பெருமையும் ஆயிரஞ்சூரியர்கள் வந்து நிறைந்த பிரகாசத்தைப்போல நெய் விட்டெரியப்பெற்ற திருவாட்சியும் பொன்னினாற் செய்திலங்கிய சுயத்தம்பமும், விநாயகமூர்த்தியும், சுப்பிரமணியக்கடவுளும் இருபக்கத்தில் எழுந்தருளியுநிறைந்த வாயலின் சிறப்பும் முத்தரசகுலநாதனும், முத்துமாலையம்மையும் எழுந்தருளி வயங்காநின்ற கெற்பக்கிரகமும் திருவாலயப்பணிகளும் மேலாகச்சிறந்து விளங்கியது எ-று-ஆல்-அசை (௩௧)

இக்குமுக்கனிகண்டகோமிதற்கமிழ்தருமாமதை
மிக்ககானமருப்படீமிதற்கெலாம்விரையேதருந்
தக்கதாருகளுஞ்சுமந்துதழைத்திடும்மலர்வனமதுஞ்
சிக்கிலாதுநிமிர்ந்திலங்கியசித்தனன்னைவிசேஷமால்

(இ-பொ-ரை).

கரும்பு, மாங்கனி, கதலிக்கனி, பலாக்கனி, பால், இவைகளுக்கெல்லாம் இனிமையைக்கொடுக்காநின்ற, மதுவை, கஸ்தூரி, மரு, சந்தனம் இதுகளுக்கெல்லாம் வாசனையைக்கொடுக்காநின்ற புட்பங்களானது ஏந்திக்கொண்டு பரிமளிக்கின்ற புட்பவனமானது முத்தரசகுலப்பெருமானைப்பூசிப்பதற்காக மனதன்போடும் சித்தனானவன் வைத்துண்டுபண்ணிய விசேஷத்தினால் யாவருங்கண்டு புகழும்படிவளர்ந்து புட்பங்களைச்சொரிந்துசிறந்தது எ-று (௩௨)

மாவிசேடமொடெவையுமாடியுள்மகிழுமன்பனுமருகுகும்
பாவிசேகமியற்றுதற்கியல்பானவேதியர்தம்மினம்
பூவிசேடமமைத்தவிபுனரிலங்கியபொருநி
லேவிசேடவளஞ்சிறந்தருளித்தலத்திறைவனையுமால்

திருவாலயமும் அதற்குரிய மற்றுஞ் சகலமும் மிகு அலங்காரமாகச் செய்துமுடித்துக் கண்ணாரக்கண்டு மனமகிழாநின்ற சித்தனானவன், கும்பாபிஷேகமும் செய்ய விரும்பி இதற்குத்தகுதியான வேதப்பிராமணர்களையும், தனது குலத்தவர்களையும், அழகியபூமியின்கண் நன்மைகளைச்செய்து வருகின்ற அறிஞர்களையும் செங்கோல் நடாத்துகின்ற அரசர்களிலே மேன்மையான வளஞ்செறிந்த இந்த விட்டிலாபுரநகரத்தையாளாநின்ற அரசனையும், எ-று (௩௩)

தன்மையாகவிளித்துமாமகசாலைசெய்தபினேவரும்
மென்மையாகவெழுந்துநந்துளவிசயமாநதிசென்றதில்
நன்மையாகவுமாடியம்பிகைநாதனாரடிசூடியின்
பொன்மையானகடங்களிற்றெருள்புனலையொண்டணியாகவால்

(இ-பொ-ள்).

இவர்களையெல்லாந்தன்மையாக அழைத்துக்கொண்டு வந்து, மேன்மையான யாகசாலையும்செய்து பின்பு எல்லாரும் எழுந்து மிரு திவாக நடந்து சங்கினங்கள் ஊருகின்ற விசயமாநதியில் வந்து நன்மையாக ஸ்நானஞ்செய்து முத்தாசகுலநாதனது திருவடிகளைச் சென்னியிற்சூடித்துதித்து மாற்றுயர்ந்த பொன்னினாற்செய்த குடங்களிலே தெளிந்த தீர்த்தத்தைத்திரட்டி எ-று-ஆல்-அசை (௩௪)

மாகயங்களின்மீதுவைத்துறுமணிகவிப்புகவென்னவ
னேகநாதகீதங்கள்பேரிகைநேயகாளமியங்கஞு
மேகமாகமுழங்கநீரொலியிக்ளிபாமெடங்கவந்
தாகமாயதிமந்திரங்களையோதியோமம்வளர்த்தனர்

(இ-பொ-ள்).

வலியுடைய யானைகளின்மீது குடங்களைவைத்து முத்துக்குடைகள் நெருங்கி வெயிலை மறைக்கவும் சங்குநாதங்கள் பம்பமென்று முழங்கவும், சங்கீதங்கள் நடத்தவும் மடமடவென்று பேரிகைகள் அறையவும் நன்மையான எக்காளங்கள் ஆரவாரிக்கவும்

பலவிதமான வாச்சியங்கள் வாசிக்கவும் இவைகளினது ஒலியான து ஏகமாகவெழுந்து கடலிலுள்ள அலையினது சப்தங்களையும் ஆகா யத்தில், முழங்காநின்ற இடியினது சப்தங்களையும் அடக்கவும், இவ்விதமான ஆனந்தத்தோடும் திருவாலயத்திற்கு வந்துசேர்ந்து முறைப்படியே கும்பங்களை யெடுத்துவைத்து வேதமந்திரங்களைக் கருத்தாக ஓதி ஓமம் வளர்த்தார்கள் எ-று (கூடு)

இன்னறும்புகையாடிபூரியிதெனவெழுந்தொருகோபதி
மன்னெழிற்கழறனைவணங்கிவானவர்க்கிதுகழறுமான்
பொன்னகர்ப்பதிபுக்கிகங்கையர்பொற்குழைக்கிடகிற்புகை
யின்னறைதனையும்புசித்திணையில்மலிந்துகமழ்ந்ததால்

(இ-பொ-ரை).

இந்த ஓமகுண்டத்திலுண்டாகிய நறும்புகையானது மேகத் தைப்போல அசைந்தெழுந்து தேவேந்திரனது திருவடியைத் துதிக் காநின்ற தேவர்களுக்கெல்லாம் இங்கு நடத்துகிற கும்பாபிஷேக மகத்துவத்தைத் தெரிவிப்பதைப்போல தேவலோகத்திற்குச்சென் று அங்குள்ள தேவஸ்திரீகள் அழகிய கூந்தல்களுக்கு ஊட்டுகின்ற அகிற்புகைகளிலுள்ள வாசனைகளையும் உள்ளடக்கி தனக்கிணையில் லாது எங்குந்தானும் நிறைந்து மேலான வாசனைகளைப்பரிமளித்து க்கொண்டிருந்தது எ-று-ஆல்-அசை (கூகா)

முத்தொழிற்கொருவித்தராய்வருமுத்துமாலையிறையகன்
சித்திரக்கழலருளிறைலொருதேய்வுமில்நெறியாகமின்
சத்திரத்தையியற்றிவந்துறுதானமாலிணைகல்கிமா
பத்தியாகவேபூசைசெய்திவர்பரிவந்தனரெல்லுமால்

(இ-பொ-ரை).

சிருஷ்டி, திதி, சங்காரமென்னும் மூன்றுதொழிலுக்கும் காரா ணியாக எழுந்தருளிவிளங்காநின்ற முத்துமாலையம்மையினது நல

யகனுகிய முத்தரசகுலப்பெருமானது பாதகிருபையால் ஒரு குறைவுமில்லாது நீதியோங்கும்படி கும்பாவிசேகமுஞ்செய்து முடித்து மனக்களிப்படைந்து கேட்டவர்களுக்கெல்லாம் இல்லை என்றது மேகத்தைப்போல மிகுதானங்களைக்கொடுத்து அன்போடுந்தவறாமல் நான்றோறும் பூசைசெய்து எவரும் வணங்கிவந்தார்கள் எ-று ஆவ்-அசை (கஎ)

அன்பருள்ளறியாதிகன்மலரடியைநாடி இறைஞ்சுதற்
கின்பமாய்வருவோரிடத்துள்ளிடருமுள்ளுறைதவலையும்
முன்பெணுதுபுரிந்தவினைமுழுதுநீக்கிநலந்கொடுத்
தும்பரிந்திரனரியயன்தொழவுளமலிந்துவழங்கினன்

(இ-பொ-ள).

தன்னைப்பூசிக்கும் அன்பர்களினது உள்ளத்தை அறிந்து கிருபைசெய்துவரும் முத்தரசகுலப்பெருமானனவர் அவரது திருவடியை வணங்குகிறதற்காக விரும்பி வருபவர்கள் இடத்திலுள்ள துன்பங்களையும் மனக்கவலைகளையும் முன்செனமத்தில் செய்த பாவங்களையும் விலக்கி வேண்டிய நன்மைகளைக்கொடுத்து தேவர்களும் இந்திரனும் பிரமா விஷ்ணுவும் மற்றுமுள்ள யாவர்களும் துதிக்கும்படி கருணையோடும் இவ்வாலயத்தின்மீது மன்மகிழ்ந்திருந்தனர் எ-று (கஅ)

முப்புரத்தகைத்தெரித்தருள்முன்னவன்செயுமாணல்கண்
டெப்புரத்தருமடிதொழத்தினமெக்களித்துவருவதின்ற
செப்புமித்தலமீதுளீதுசிறந்ததென்றுவியந்துதன்
விப்புரத்ததிபதியுமன்பனுமிக்கியாதமுணர்ந்துமால்

(இ-பொ-ள).

இரும்புமதில், வெள்ளிமதில், பொன்மதில் என்றுசொல்லாநின்ற திரிபுரங்களையும் தகனஞ்செய்த சிவபெருமானனவர் முத்தரசகுலப்பெருமானுக இங்கு எழுந்தருளியிருந்து நடத்திவருகின்ற

மாட்சிமைகளை அந்தத்தேயங்களிலுள்ளவர்களும், கண்டு மிகு மகிழ்ச்சியோடும் வந்து துதித்து வருவதினாலே பூமியின் கண்ணேயுள்ள தலங்களுக்கெல்லாம் இதுவே சிறந்ததென்று இன்னகரத்திலுள்ள அரசனாகிய கலங்காதகண்டனும் அன்பனாகிய சித்தனனும் இந்த மேன்மையை அறிந்து வியப்படைந்து எ-று-ஆல்-அசை (௩௯)

ககனமீதொளிர்கதிரவன்வருகயனினுலுறபடிதனிற்
பகருமாதமீராறிலேகனபாருலத்தினலாரலும்
நிகழுமாசியிலேவருஞ்சிவநிசிவிழாவுமெடுத்துமா
தகுதியாகநடத்திவந்தனர்சமைதொறும்புகழேறவால்

(இ-பொ-ள)

ஆகாயத்தின்கண்ணே பிரகாசத்தோடும் எழுந்தருளிவாாநின்ற சூரியபகவானது பெருமையினால், சொல்லப்பட்ட பன்னிரண்டு மாதங்களில் சிறந்த கார்த்திகைமாதத்தில், கார்த்திகைநாள் மகத்துவத்தையும், மாசிமாதத்தில் சிவராத்திரி மகத்துவத்தையும் எடுத்து இந்த இரண்டு உற்சவத்தையும் கீர்த்திவளருமபடி வருடந்தோறும் மேன்மையாக நடத்திவந்தார்கள் எ-று-ஆல்-அசை (௪௰)

வேறு

இத்தலமெய்த்தின்பணிதனைக்குறைவில்லியற்றியவேற்றஞ் சித்தன
சொந்தமாயவனுக்கிளையதம்பானுஞ்சுகமொடுவாழ்ந்திறுதியினி
லந்தமாங்கயிலைபுக்கிமாபதவியடைந்தனரதையிவரினத்தில்
வந்தமாமுத்தாக்குமரன்சேயுணர்ந்திம்மாபணிபுரிந்துவந்தானல் [னுஞ்

(இ-பொ-ள).

முத்தாசகுலப்பெருமானனவர் எழுந்தருளியிருந்து விளங்காநின்ற இந்த ஆலயத்திலே சகலபணிவிடைகளும் குறைவில்லாது நடத்திவந்த மேன்மையினால் (அன்பனாகிய சித்தனனும் அவனது தம்பியாகிய தம்பானும்) பூமியின்கண்ணே வேண்டிய சுகத்தோடு

ம் வாழ்ந்துவந்து முடிவில் அழகிய கயிலாயத்திற்குச்சென்று நல்ல பதவியடைந்தார்கள் பின்பு இவர்களது குலத்திலே சிறந்த முத்துக் குமாரனது வரத்தினுலுதித்த புத்திரனென்னும் பெரியரசனைவ ன் இந்த தன்மைகளையறிந்து அந்தப்பணிவிடைகளை முறையோடு ஞ் செய்து வந்தான் எ-று ஆல்-அசை (சக)

ஆதவனகைமானண்டமீதோற்றமடங்குஞ்சூற்பொருளெனவிளங்கு
காதனாவதாரத்தையுமுரைத்தோகனிவொடுமித்தலத்தாளும் [ம்
நீதமன்கலங்காதகண்டன்கள்கொடுத்தநித்திலச்சரப்பளியதனைக்
காதலாயளித்துக்காட்சியுங்கொடுத்த காதையுமினிப்புகல்வோமால்

(இ-பொ-ளை).

சூரியனிடத்தில் ஒளியானது உண்டாகி மீண்டும் அதனிடத்தி ல்ஒடுங்குதல்போல அனேகங்கோடியண்டங்களும் அதில்தோன்றி ய யாவும் ஒடுங்குதற்கிடமாகிய காரணப்பொருளென்று விளங்காநி ன்ற சிவபெருமானது திருவவதாரத்தையும் விவரித்துச்சொன்னே ம் இனிமேல் இந்தவிட்டிலாபுரத்தை யாளாநின்ற நீதியுடைய கல ங்காதகண்ட மன்னனானவன் களவுகொடுத்த முத்துச்சரப்பளியை தருவித்து அவனுக்குக்கொடுத்து காட்சியுங் கொடுத்தருளிய சரி தையை சிறிதுசொல்வோம் எ-று (சஉ)

அண்டமொடுங்குதலாவது.

பராபரத்தில்-பரமும், பரத்தில்-சிவமும், சிவத்தில்-சத்தியும், சத்தியில்-நாதமும், நாதத்தில்-விந்துவும், விந்துவில்-சதாசிவமும், சதாசிவத்தில்-மஹேசுரனும், மஹேசுரனில்-உருத்திரனும், உருத்தி ரனில்-விஷ்ணுவும், விஷ்ணுவில்-பிரமாவும், பிரமாவில்-ஆகாச மும், ஆகாசத்தில்-வாயுவும், வாயுவில்-அக்கினியும், அக்கினியில் அப்புவும், அப்புவில்-பிருதுவியும், பிருதுவியில்-அன்னமும், அ ன்னத்தில் சராமிருக பக்ஷிதாபரசங்கமாதிகளும் தோன்றின.

மீண்டும் ஈரமிருகபக்ஷிதாப்பரசங்கமாதிகள்-அன்னத்திலும், அன்னம்-பிருதுவியிலும், பிருதவி-அப்புவிலும், அப்பு-அக்கினியிலும், அக்கினி-வாயுவிலும், வாயு-ஆகாசத்திலும், ஆகாசம்-பிரமாவிலும், பிரமா-விஷ்ணுவிலும், விஷ்ணு-உருத்திரனிலும், உருத்திரன்-மஹேசுரனிலும், மஹேசுரன்-சதாசிவனிலும், சதாசிவன-விந்துவிலும், விந்து-நாதத்திலும், நாதம்-சத்தியிலும், சத்தி-சிவத்திலும், சிவம்-பரத்திலும், பரம்-பராபரத்திலும், ஒடுங்கியவாறு காண்க

திருவவதாரச்சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௯௱௭

——◯(o)◯——

உ

திருச்சிற்றம்பலம்.

# கலங்காதகண்ட பாண்டியனுக்கு சரப்பளியளித்த சருக்கம்.

——◯o◯——

தரங்கவாழியைத்தரித்தவித்தலத்தினிற்சாற்றும்
புரங்களிற்றிருவிட்டிலாபுரத்துமன்பெருமான்
வரங்களாற்சுடர்மணிமுடிபுனைந்துகோல்வளரத்
திரங்களாய்கடத்தினனறமறைகளிற்றேர்ந்தோன்

(இ-பொ-ளை).

அலைகடலை ஆடையாகத்தரித்த பூமியின்கண்ணே சொல்லப்பட்ட நகரங்களிலே அழகிய விட்டிலாபுரத்தை யுடையானாகின்ற கலங்காதகண்ட மன்னனானவன் சிவபெருமானது திருவருளையால்பெற்ற

வரங்களினாலே மணிமிகுந்த இரத்தினக்கிரீடத்தையணிந்து செங்கோல் வளரும்படி நீதியாக அரசுபுரிந்தான் அவன் எத்தன்மையுடையவனென்னில் வேதங்களைக்கற்றும் தருமங்களைச்செய்தும் தெளிந்தமனமுடையவன் எ-று (௪)

வெண்ணிலாக்கதிர்வீசியவிபுலையிற்சிறந்த
தண்ணிலாமுகத்தணங்கெனுந்தலைவியைத்தழுவி
எண்ணிலாச்சுகபோகமுமெய்திவாழின்றவை
விண்ணிலார்புகழாதவாவலனென்னவியந்தால்.

(இ-பொ-ள்).

வெண்மையாகிய சந்திரனது ஒளியைக்காட்டாநின்ற பூமியிலே மாசில்லாது குளிர்ந்த சந்திரனைப்போலும் வதனத்தையுடைய நங்கையென்னும் பிரியநாயகியோடு இன்பமாகக்கூடி மிகுந்த சுகானுபவங்களையடைந்து வாழாநின்ற கலங்காத கண்டமன்னனை அனேக அரசர்களுக்குள்ளே இவனே சிறந்தவனென்று ஆச்சரியப்பட்டு புகழாதவர்கள் தேவலோகத்திலுமில்லை எ-று-ஆல்-அசை (ரு)

சேனமேறியசேவகன்மைத்துனன்செயலால்
மானமேறியவமைச்சர்நாற்படைகளும்வாழ்த்தக்
கானமேறியவிலம்பகங்கலம்பகம்புழுகு
நானமேறியபுயத்ததிபதியுறைநாளில்

(இ-பொ-ள்).

கருடவாகனத்திலே எழுந்தருளிவாராநின்ற திருமாலுக்கு மைத்துனனாகிய சிவபெருமானது திருவருளால் அபிமானமுயர்ந்த மந்திரிகளும் இரத-கஜ-துரக-பதாதிகளென்று சொல்லப்பட்ட நாலுவகைச்சேனைகளும் சிறந்து துதிக்கும்படி வாசனை தங்கிய மலர்மாலைகளையும் நறுஞ்சாந்து புழுகு கஸ்தூரிகளையும் அணியப்பெற்ற புயங்களையுடைய அரசனானவன் இனிதாகவாழ்ந்து வருகிறபோது ஒருநாளில் எ-று (௬)

வாரமீர்முறைறத்தயிலமுச்சியிலிடமணிமின்
ஞார்முங்களைந்தாடகப்பேழையுள்ளடைத்தா
ஞாமன்னதைப்பூட்டவன்றயர்ந்ததாலடைப்பைக்
காரன்காலிகடந்தனன்சரப்பணிதனைக்கவர்ந்தால்

(இ-பொ-ளா).

மாலையணிந்த கலங்காதகண்ட மன்னனானவன் வாரத்திற்கு இரண்டுமுறை சனியும் புதனுமாக முழுகிவருகின்ற தயிலத்தை வழக்கப்படி ஒருகிழமை முழுகுவதற்காக இரத்தினங்கள் பிரகாசிக்காநின்ற ஆபரணங்களைக்கழற்றிப் பொன்னினாற்செய்த கைப்பெட்டியில் வைத்தவன் அன்று அப்பெட்டியைப்பூட்டுகிறதற்கு மறந்துவிட்டான் அதைப்பார்த்திருந்த அடைப்பைக்காரன்மகன்அப்பெட்டியிலிருந்த மூத்துச்சரப்பளியை யூரவருக்கும் தெரியாமல் திருடிக்கொண்டு போய்விட்டான் எ-று-ஆல-அசை (ச)

மன்னனம்பணிதனைமறுநாளினில்வனையச்
சின்னப்பேழையைநோக்கவுந்திறந்தவாறுயுஞ்
சன்னமாசரப்பளியிலாதிருப்பதுந்தரிசித்
தென்னகுய்யமென்றெணிமதியமைச்சர்பாலிசைத்தால்

(இ-பொ-ளா).

பின்பு அரசனானவன் அப்பியங்கஸ்நானஞ்செய்த மறுநாளில் ஆபரணங்களையெடுத்து அணிந்துக்கொள்ளவிரும்பி கைப்பெட்டியை யெடுத்துப்பார்க்கும்போது அது பூட்டாமலிருப்பதையும் முத்துச்சரப்பளியில்லாதிருப்பதையும் கண்டு இதுவென்னசூதாகவிருக்கிறதென்றெண்ணி மதியுடைய மந்திரிகளையழைத்து அவர்களிடம் தெரியப்படுத்தி எ-று-ஆல்-அசை (ரு)

ஆதிமுத்தசகுலநாதனுக்கெனுமன்பாய்ச்
சேதிமப்பணிசெயும்பெரியரசனைச்சீராய்க்
கேதியொல்லையில்வரவிடையளிக்கவுங்கினர்ந்தே
நீதிகாணமைச்சருமழைத்துவந்தனர்நேராய்

(இ-பொ-ளை).

கட்டுளாகிய முத்தரசகுலப்பெருமானது திருவாலயப்பணி விடைகளை அன்போடுஞ் செய்துவராநின்ற அன்பனுகிய பெரியரசன் செட்டியைச் சீக்கிரத்தில் அழைத்துவாருங்களென்று அரசனானவன் உத்தரவு கொடுக்கவும் ரீதியைப்படைத்த மந்திரிகள் கேட்டு உடனே போய் அழைத்துக்கொண்டுவந்து அரசனது சமுகத்தில் தெரியப்படுத்தினார்கள் எ-று (௬)

என்மையைப்பொருளாயெண்ணியுகவியவிறையே
யுண்மையாதெனவிறைஞ்சுமன்பனைப்புகழ்ந்தரசனே
வண்மையாமொருவள்ளிகள்போனதிப்பெருமான்
றிண்மையாய்த்தருமிதந்திடுவேனெனத்தெரித்தான்

(இ-பொ-ளை).

பெரியரசன் செட்டியானவன் அரசனைக்கண்டு பணிந்து ஓ; மகாராஜனே எளியேனை ஒரு பொருளாக மதித்து அழைத்துவரச் சொன்ன காரணம் யாதென்று கேட்கவும் அரசனானவன் அன்பனைப்பார்த்து மகிழ்ந்து ஓ; அறிவுடையவனே, யாவரும் புகழத்தகுந்த ஆபரணம் ஒன்று களவுபோய்விட்டது ஆதலால் முத்தரசகுலப்பெருமானவர் இதன் களவை வெளிப்படுத்தி எனது ஆபரணத்தைத் தருகிறவரையும் நான் அவரது ஆலயத்திற்குவந்து துதிப்பதில்லையென்று உறுதியாகச்சொன்னான் எ-று (௭)

வளைந்தவாளாவாய்க்காவலருறுதியாய்வழங்க
விளைந்தசோரமிதெவர்புரிந்தனர்கொலோவிடங்கர்
திளைந்தவானனங்குழைந்துளமவலமாய்ச்செப்பு
மிளைத்தையேயிதுபுதுமையென்றன்புனுமிசைத்தான்

(இ-பொ-ளை).

நிறைந்த அழகுண்டிய முகமானது வாடி மனவருத்தமாய்ச்

சொல்லுகின்ற இளவரசனே சுற்றியிருக்காகின்ற மதில் வாயிலின்கண்ணே காவலாளிகள் திடனாகக்காத்திருக்கும்போது இவ்விடத்திலேவந்து திருடியவர்யாவர் இதுவென்ன புதுமையாகவிருக்கிறதென்று அன்பனானவன் சொல்லி எ-று-ஆல்-அசை (அ)

போனவள்ளியைப்பிஞ்ஞகனுட்போதலும்புகழா
யானசுக்கிரவாரமன் றுதவுவிராசே
னனமில்செருவெனவிசைத்தன்பனுமேகி
ஞானநாயகனலயம்புகுந்திதை நவில்வான்

(இ-பொ-ரை).

ஏ. மகாராஜனே களவுபோன ஆபரணத்தை சாலுதினத்திற்கு மேல்சுக்கிரவாரத்தன்று உனக்குக்கிடைக்கும்படி எம்பெருமான் கிருபைசெய்வார் யாதொரு குறைவுமில்லை மனம் தெளிவாயென்று சொல்லிவிட்டு அன்பனானவன் ஞானநாயகனாகிய முத்தரசகுலப் பெருமானது திருவாலயத்திற்குவந்து இந்த நீதியைத் தெரியப் படுத்துவதானான் எ-று (௯)

மிக்ககாடினின்மெய்யடிதொழுமுன்குணவேந்தன்
பக்கமோதியவனவையுஞ்சிறிததுயமுன்
தக்கவள்ளியைத்தருதலுன்னெறியெனமைத்தாங்கு
முக்கண்ணநலவமைதியிதெனப்பினுமொழிவான்

(இ-பொ-ரை).

முக்கண்ணையுடைய முத்தரசகுலப்பெருமானே மிகவும் விரும்பி உனது மெய்ப்பதங்களையே துதித்துவருகின்ற நற்குணத்தையுடைய அரசனிடத்தில் நான் சொல்லிவந்த தவணைநாளோ கொஞ்சம் அது முடியுமுன்னமே ஒப்பற்ற ஆபரணத்தைக்கொடுத்துக் கருணைசெய்யவேண்டியது உனது கடமை இது நல்லதருணமென்று முறையிட்டுப் பின்னுஞ்சொல்லுவான் எ-று (௰)

வேறு.

விடையாவருட்கொடையாவொருவிடையாகிலுங்கொடையா
சடையாபுரிவுடையாவினத்தடையாவுரியிடையா
அடையார்தனைப்படையாற்பொருமதிபன்பணிபெறமுன்
னுடையாய்ப்பணிவிடையேசெயுங்கடையேன்மனநுகரேன்

(இ-பொ-ள்).

இடபவாகனத்தையுடையவனே தயாளுமான ஈகையுடையவனே, திருவாய்மலர்ந்து ஒரு உத்தரவாகிலுங் கொடுத்தருளும் ஐயனே, சடாமகுடத்தையுடையவனே, அன்புடையவனே, யான் சொல்லுவது உனது செவிக்கேற்கவில்லையோ இன்னமுங் கருணை செய்யத்தடையென்னவிருக்கின்றது எந்தையே, புலித்தோலையுந்த் இடையையுடையவனே வலிமைபெற்ற ஆயுதங்களினாலே பகைவர்களை வென்று வெற்றியடையாநின்ற மன்னனது ஆரணமானது கிடைக்கிறவரையும் உனக்கு அடிமையாகிப் பணிவிடை செய்தவரும், கடையேனாகிய யான் அமுது புசிப்பதில்லை எ-று (௰௪)

மின்னார்மழுமானேந்தியவிமலாகலைவமலா
முன்னாணதிதாவக்கனமுதிராலைவனைத்தாய்
பொன்னாரடிபுனையன்பர்கள்பொறைநூபுள்ளுறைபொருளே
என்னாளுநின்றனைவேறிலையெம்மானெனையாள்வாய்

(இ-பொ-ள்).

பிரகாசமுடைய மழுவையும் மானையும் தரித்த சிவபெருமானே சிறந்த அழகுடையவனே ஆதியிலே எங்குலத்தார்கள் வெள்ளப்பெருக்கால் நதியைக்கடக்கமுடியாமல் வருந்தும்போழ்து முதிர்ந்த ஆலவிருட்சத்தை வளைத்து அதன் வழியாகக் கடக்கும்படி செய்த தேவனே உனது திருவடிகளைச் சென்னியிற்சூடாநின்ற அன்பர்களது பொறுமையுள்ள மனத்தின்னே விளங்கியருளுமெய்ப் பொருளே சதாகாலமும் உனது உதவியைத்தவிற வேறு கதியின்

லை எங்கள் தெய்வமே இது சமயமும் காத்தருள்வாய் எ-று (௪௨)

என்றேவுளகைசயாவெழிலிசைணய்ச்சதுரெல்லும்
தினறேசொலவல்லைதொழுநெடுவேல்விழிநோல்
மன்றேபார்தஞ்செய்தருண்மன்றறபதகனைய
நன்றேதருகருணாகரநாதன்மனத்தழைத்தால்

(இ-பொ-ரை).

இவ்விதமாய் நாலுநாளாக நின்ற மனதாசைகொண்டு அழகிய இசையோடும் அநேக பாடல்களை வாயாரச்சொல்லிக் கையார வணங்கி நெடிய வேல்போலுங் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பமானது பெருகியோடும்படி அன்பனானவன் உருதுவதையும் அந்த நீரிலே கனகசபையில் நடனம்புரிந்த தனது திருவடிகளானது புனலாடவும் கருணைக்கடவுளாகிய முத்தரசகுலப்பெருமானவர் கண்டு மனமகிழ்ந்து எ-று-ஆல்-அசை (௪௩)

நன்பாலனமருந்தாதெனைநாடித்தொழுதுருகு
மன்பாவெருளாதேமணியணிதவாரியகலனை
என்பாலுறைபணிதொட்டியிரேகும்படிபுரிவோம்
நின்பாலவன்குரவன்வருவானுன்னைநெருங்கி

(இ-பொ-ரை).

நல்ல மதுரமாகிய பாலையும் அன்னத்தையும் புசியாது மறந்து என்னை விரும்பித் துதித்து மனமுருகாநின்ற அன்பனே பயப்படாதே அரசனது ஆபரணத்தைத்திருடிய திருடனை, நாம் ஆபரணமாக அணிந்திருக்கின்ற சர்ப்பத்தையனுப்பி நாளையே அவனது உயிர்போகும்படி தீண்டிவரச்செய்வோம் பின்பு அந்தக் கள்வனது தந்தையாகிய அடைப்பைக்காரனானவன சீக்கிரத்தில் உன்னைத்தேடி வருவான் எ-று (௪௪)

சேர்வாரமுன் முனைவவ்வியகோதோய்ந்தனனலதயின்
கேவாவெனிலீவோமுயிரெனவோதிவிளைந்தென்
றேவாவெனவிபுலர்தருதிருநீற்றையணிந்தன்
ஞவாலழைவருவாரெனவோதன்விடையருளி

(இ-பொ-ள்).

அடைப்பைக்காரன் வந்தவுடனே அரசனுடைய ஆபரணத்தை உன்து புத்திரனானவன் திருடியகுற்றத்தினால் அரவமானதுதீண்டி இறந்தான் ஆதலால் அந்த ஆபரணத்தை இந்தச் சன்னிதி முன்பாக கொண்டுவந்து கொடுப்பாயேயாகில், அவனது உயிரைக்கொடுப் போமென்று அவனிடத்திற் சொல்லி அப்பொருளைப்பெற்றுக்கொண்டு என்னுள்ளத்தேவே கிருபைசெய்வாயென்று பெருமையுள்ள திருநீற்றை, அள்ளி அப்புத்திரனுக்குப்பூசி உனது நாவாரச்சொல்லி யழைப்பாயாகில் உயிர்பெற்றெழுந்திருப்பானென்று முத்தரசகுலப் பெருமானானவர் உத்தரவுகொடுத்து எ-று (௩௫)

கதிபெற்றசுருதியன் பனேகளைகொண்டளைபசியால்
விதிபெற்றவின்மனைபுக்கெனவிழல்வைத்திதுதருணம்
துதிபெற்றகடவுளேயளிசண்டிச்சலமென்றான்
மதிபெற்றவன்விடைசொல்முனமாகந்தியுணர்ந்தால்

(இ-பொ-ள்)

நல்ல பதவிகளைத்தார்கின்ற நான்குவேதங்களையும் கற்ற அன்பனே பசியினாலே மிகவும் சோர்ந்தனை ஆதலால், சம்பத்துடைய உனது கிரகத்திற்கு மெள்ளச்செல்லுவாயென்று சொன்னார் உடனே அன்பனானவன் வணங்கி ஒ துதிகளைப்பெற்ற கடவுளே இதுசமயம் எழைமீது கிருபைசெய்து எனதுகளையான்து நீரும்படி கொஞ்சம் சுக்குவெந்நீர் கொடுத்தால் என்னால் நடந்து போகக்கூடுமென்றுசொல்லவும் பிரகாசமுடைய சந்திரனைத்தரித்தமெய்யனானவன் கேட்டுமனமகிழ்ந்து உத்தரவுகொடுப்பதற்கு முன்னமே நந்தியெம்பெருமானானவர் அக்கருத்தையறிந்து எ-று-ஆல்-அசை (௩௬)

கொண்டானுருமறையோனிகர்குணவன்பனன்மனையைக்
கண்டானரனந்தட்டியல்கல்வேலையரிவைபால்
விண்டானெனமதிடைகாகரவெந்நீர்கொடுமிதுவுன்
கொண்டானுரையெனமல்கினள்கொடுவந்துத்தவினளால்

(இ-பொ-ள்).

அந்தக்கருத்தையறிந்த நந்திதேவரானவர் உடனேதன்னுருவைவிட்டு அந்தணனுருக்கொண்டு நற்குணமுடைய அன்பனது கிரகத்திற்குச்சென்று இராவேளையானதினாலே கதவுபூட்டப்பட்டிருப்பதைப்பார்த்து கதவுதட்டி அவன் மனைவியை அழைத்து உனது நாயகன் சுக்குவெந்நீர் வாங்கிக்கொண்டுவரும்படி எமதிடத்திற் சொல்லியனுப்பினார் கொடுமென்று கேட்கவும் அப்பதிவிரதையானவள் பர்த்தாவுக்கென்று வேதியன்வந்து சொன்னதினாலே சீக்கிரமாகக்கொடுத்தனுப்பினாள் நந்திதேவரானவர் கொண்டுவந்து அன்பனுக்குக்கொடுத்தார் எ-று-ஆல்-அசை (௫௭)

வேறு.

அருந்திறன்கலியகலவுமழலவுங்கதித்துத்
திருந்தியாய்வாவிசயமாகதிக்கெழுந்திவண்சென்
றருந்திறாய்ப்புனலாடியதியையும்புரிந்து
விருந்தியாயரன்கற்கொவந்தடிபணிவேலை

(இ-பொ-ள்).

நந்திதேவர்கொடுத்த சுக்குவெந்நீரை அன்பனானவன் வாங்கிப்பருகினவுடனே கலியாணதிரவும் இராவுநீங்கிச்சூரியனானவனெழுந்து பூரணமாகவருவதைக்கண்டு விசயமாகதிக்குவந்து தீர்த்தமாடி முறைப்படி நியமநிட்டைகளையுமுடித்து அலங்காரமாக முத்தரசகுலப்பெருமானது திருவாலயத்திற்குவந்து அவரது திருவடிகளைப் பணியாநின்ற சமயத்தில் எ-று (௫௮)

வேறு.

பையோங்கியபணியா லுடல்பதறிச்சுதனைமைவிட்
டையோதவறினனென் விதியன்பாவொருதுணையில்
மெய்யோவியலேனையருள்வீரென்ன வடைப்பைக்
கையோனிவைசொலவந்திறைகதழ்வென்றெணியன்பன்

(இ-பொ-ள).

அடைப்பைக்காரனானவன்வந்து ஒமுத்தரசகுலப்பெருமானுக்கு உகந்த அன்பனே பெரியபடத்தையுடைய அரவமானது எனதுமகனைத்தீண்டி அதனால்மெய்பதறி இறந்துபோய்விட்டான் ஐயோ எனதுவிதியோயான யென்னசெய்யப்போகின்றேன் எனக்கு வேறு யாதொரு துணையுமில்லை நீதனே கிருபைசெய்வாயென்று வணங்கிச் சொல்லவுமஅன்பனானவன் கேட்டு இதுமுத்தரசகுலப்பெருமான் மகத்துவமென்று மனத்துன்னெண்ணி மகிழ்ந்து எ-று (௱௧)

பாரினிறைபணிமார்பணிபணியென்றகத்துன்னிப்
பாசத்துபடிறுசெய்தநின்பாலன்றகன்கமிக்தோ
மேவாயுயிர்பெறவானிழையதயிங்களியெனவுஞ்
சேரயிவன்மனைசென்றிதுசெயலாய்ந்துகொணர்ந்தால்

(இ-பொ-ள).

பூமியின்கண்ணே அரசபுரியாகின்ற கலங்காதகண்டமன்னனானவன் அழகிய மார்பிலே அணிகின்ற ஆபரணமிதுவென்று மனத்தின்னே சிறிதேனும் கவனிக்காது களவுசெய்த உன் மைந்தனது குற்றத்தை நீ நம்மை வேண்டிக்கொண்டபடியால் இன்று பொறுத்தோம் எம்பெருமானது கிருபையால் அவன் உயிர்பெற்றெழுந்திருப்பான் ஆதலால் அந்த ஆபரணத்தை இந்தச் சந்நிதானத்தில் கொண்டுவந்து கொடுப்பாயென்று அன்பனானவன் சொல்லவும் அதைக் கேட்ட அடைப்பைக்காரனானவன் திகிலடைந்து உடனே தனது

ரகத்திற்கு வந்து விசாரித்து ஆபரணமிருப்பதைத் தெரிந்தெடு த்துக்கொண்டு எ-று-ஆல்-அசை (உ௰)

தன்பாலனையுங்கொண்டணிதருகோயிலின்முன்வைத்
தென்பாவிங்கறியேனெனவிழையீய்ந்தடிதொழுங்கா
லன்பாயணிபெற்றன்பனுமான்முன்னைதனைவத்தே
முன்பார்வதிகொழுநன்சொனமுறைசெய்தெழுப்பினனால்

(இ-பொ-ள்).

தனது புத்திரனையும் தூக்கிக்கொண்டுவந்து திருவாலயத்திற்கு முன் வைத்து அன்பனைப்பார்த்து எங்கள் சுவாமியே எனது பாலனவன் திருடியசெய்தியை ஏழையாகிய யான் அறியேன் கிருபை செய்யவேண்டுமென்று ஆபரணத்தையுங்கொடுத்துத் துதிக்கும்போது அன்பனவன் மனமகிழ்ந்து அடைப்பைக்காரன் கொடுத்த ஆபரணத்தைவாங்கி முத்தரசகுலப்பெருமானது முன் வைத்துவிட்டு அவர் முன்னமே திருவாய் மலர்ந்தருளியவண்ணம் விபூதியை அள்ளி மைந்தனது நெற்றியில் தரித்து யாவரும் புகழும்படி அவனை எழுப்பினன் எ-று-ஆல்-அசை (உ௧)

அப்பாலனெழவுமரையம்வந்தன்பனுமுறைநகா
லப்பாரதிபனும்வந்தணியளியென்னவுமீய்ந்தா
னப்பாலரனருளென்றடிதொழுதாரமதைக்கொண்
டொப்பாலுயர்மனைவந்திவனுயர்வாகவேவாழ்ந்தான்

(இ-பொ-ள்).

அடைப்பைக்காரன் மைந்தனவன் முத்தரசகுலப்பெருமானது கிருபையால் எழுந்திருந்தபின்பு அன்பனவன் அவ்விடத்தைவிட்டு திருவாலயத்திற்கு வந்தவுடனே இப்பூமியையாளாநின்ற கலங்காதகண்ட மன்னனும் வந்து சேர்ந்து அன்பனைப்பார்த்து எனது ஆபரணத்தைக் கொடுப்பாயென்று கேட்டான் அதைக்கேட்

அன்பனுனவன் மகிழ்ந்து சீக்கிரமாக சுவாமி முன்னிருந்த சரப்ப ளியை எடுத்துக்கொடுக்கவும், அரசனுனவன் கண்டு இது முத்தர சகுலப்பெருமானது திருவுபவென்றுகூவாது பாதங்களை வணங்கி ஆபரணத்தையும் பெற்றுக்கொண்டு தனது அழகிய மாளிகைக்கு வந்து மேன்மையோடும் வாழ்ந்து வந்தான் எ-று (உஉ)

ஆராயுமைநாளன்பனுமவனன்மனைவியுமா
யோானபதவியெய்தியபின்னன்னவர்புதல்வ
ராராரவெனிலய்யப்பனெட்டியானவீரப்பன்
சீரானசின்னயன்மார்க்கண்டன்செப்புங்கருப்பனும்மால்

(இ-பொ-ரை).

பெரியாசனுகிய அன்பனும் இனிதாக வாழ்ந்து வருகின்ற நாளில் முத்தரசகுலப்பெருமானது கிருபையால் இவனும் இவன து மனைவியும் இவ்வுலகத்து ஆசையை வெறுத்து கயிலாயத்திற்கு ச்சென்று நல்ல பதவியடைந்தார்கள் இவர்களது வரத்திலுதித்த புத்திரர்கள், அய்யப்பன்செட்டி, வீரப்பன்செட்டி, சின்னய்யசெட் டி, மார்க்கண்டன்செட்டி, கருப்பன்செட்டியென்று பெயர் விளங் கிய ஐந்து பெயர்கள் இருந்தார்கள் எ-று-ஆல்-அசை (உங)

இம்மைந்தருமிவர்தாதையினிலோனுமடுத்தாய்ந்
திம்மந்திரமிசைமாபணியினிதாகவியற்றத்
தம்மில்வருமார்க்கண்டனையுந்தக்கவீரப்பன்
செம்மல்தனையும்வைத்தனரவர்செய்துவந்தனரால்

(இ-பொ-ரை).

பதவியடைந்த பெரியாசன் புத்திராாகிய இந்த ஐந்து பேர்களும் இ வர்களது சிறியதந்தையாகியசின்னரசன்செட்டியும் ஆகஆறுபேருங் கூடி முத்தரசகுலப்பெருமானது திருவாலயத்திற்குப்பணி விடை செய்யத்தக்கவர் யாவரென்று யோசித்து இவர்களில் அன்புடைய வீரப்பன்செட்டி மகனுகிய சாமிசெட்டியையும், மார்க்கண்டன்

செட்டியையும் நியமித்தார்கள் இந்த இருபேர்களும் குறைவின்றி பணிவிடைசெய்துவந்தார்கள் எ-று-தில்-அசை (உ௪)

இயமன்பணிபெறுமன்பர்களிதயங்களிகொளமா
வியமன்பணிதீர்கலிவழியோஇனமிதுக
லியமன்பணிபெருமானிற்றமன்னோர்புரியாளும்
நயமன்பணிநிரைகலியேற்காதையும்விள்வாம்

(இ-பெர-ள்).

நமனானவன் வணங்கப்பெற்ற அன்பர்களினது உள்ளமானது களிப்படையும்படி, மிகுவலியுள்ள கலங்காதகண்ட மன்னனுக்கு முத்தரசகுலப்பெருமானானவர் முத்துச்சரப்பளியளித்தகாதையை இதுவரையும் சொன்னோம் இனிமேல் பிரமதேவனும் வணங்கப்பெற்ற அப்பெருமானானவர் மன்னார்கோட்டை நகரத்திற்கு அரசனாகிய இராமசுவாமிப்பாண்டியனுக்கு நிரையளித்த சரிதையையும் சிறிது சொல்லுவோம் எ-று (உ௫)

கலங்காதகண்டபாண்டியனுக்கு சரப்பளியளித்த சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் (௯௱௯௰௨).

---

௰

திருச்சிற்றம்பலம்.

## இராமசுவாமிப்பாண்டியனுக்கு நிரையளித்த சருக்கம்.

---

கற்புரப்பொரப்பினுங்கயல்கொள்சேணிகுழ்
நற்புரிவான்தொடவலதக்கோபுர
மற்புதமாளிகையரங்கமண்டபம்
பொற்புறத்திகழும்விண்புகழ்மன்னூர்புரம்

(இ-பொ-ளை).

பொன்னிறைந்த கடலினும் ஆழமாயுள்ள நீர்சிறந்த அகழியால் சூழப்பெற்ற கல்லுமதிலானது ஆகாயத்தை அளாவி நிற்கவும் புதுமையான கோபுரங்களும் அலங்காரமுள்ள மாளிகைகளும், சபைகளும், மண்டபங்களும் அழகுபொருந்திப் பிரகாசிக்காநின்ற கீர்த்தியுடைய மன்னார்புரியாம் எ-று. (க)

பொன்மகளுஞ்றந்தருள்பொன்னகத்தொறு
மின்மகமேரெனமிளிறுமேனிலை
யின்மகமதிக்கறைதுடைப்பதென்கொடி
நன்மகிலைத்தெருவனிநியங்குமால்

(இ-பொ-ளை).

மகாலட்சுமியானவளிருந்து கருணைசெய்துவராநின்ற வீடுகள்தோறும் ஒளியுடைய மகமேருவைப்போலும் பிரகாசமுள்ள மேல்வீடுகளிலே சந்திரனது மாசைத்துடைப்பதைப்போல நின்று அசையும்படி கட்டிய கொடிகளானது அழகிய தோரணங்களையுடைய வீதிகளெங்களுஞ் சிறந்து விளங்கும் எ-று-ஆல்-அசை (உ)

அல்லகல்மணிகளிலமைத்தமாடமீச்
செல்லுமக்குணமுருத்திரியுமுன்னுளை
தல்லவென்றமரருமறையப்பன்னிற
மெல்லவனிரதமாவேழுங்காட்டுமால்

(இ-பொ-ளை).

இருளையோட்டாநின்ற நவமணிகளை வைத்தழுத்திய மேல்வீடுகளுக்கு மேலே சூரியனுடைய ரதமானது செல்லுகிறதினாலே அதில் பூட்டிய பச்சைப்புரவிகள் எழும் அந்த மணிகளின் பிரகாசத்தினால் உருமாறி முன்னுள்ள புரவிகளல்ல இது வெண்மையென்றும் அல்ல இது சிவப்பென்றும் நீலமென்றும் சொல்லும்படி பல நிறங்களையும் காட்டும் எ-று-ஆல்-அசை (௩)

வெஞ்சுடரெல்லையும்விழுங்குமாமணி
யஞ்சுடர்மேனிலையார்ந்தநங்கையர்
மஞ்சமைக்குழற்கிடுமருவகிற்புகை
யுஞ்சரர்புரம்புகுந்துறமணக்குமால்

(இ-பொ-ரை).

சூரியனுடைய ஒளியையும் கீழ்ப்படுத்துகின்ற மணிகளினது அழகிய பிரகாசம்பொருந்திய மேல்வீடுகளிலே மாதர்கள் நின்று மேகத்தைப்போலுங் கரிய கூந்தலுக்கு ஊட்டாநின்ற அகிற்புகையானது தேவர்கள் வசிக்கின்ற நகரத்திற்கும் போய்பரவி தேவஸ்திரீகள் புகழும்படி பரிமளித்துக்கொண்டிருக்கும் எ-று-ஆல்-அசை (ச)

சேலிமைவிழிச்சிலையின்னுரிணைக்
காலிடம்பரிபுரங்கலின்முன்மாடமே
லோலிடுங்கந்துகவோசையான்முலை
மேலிடும்புலியணிவிசிதந்தூறுமால்

(இ-பொ-ரை).

கெண்டையைப்போல நீண்டு மைதீட்டிய கண்களையும் சிலையைப்போல வடிவையுமுடைய ஸ்திரீகளது இருகால்களில் அணிந்த சிலம்புகளானது கலகலவென்று சப்திக்கவும் தனபாரங்களிலணிந்த கச்சானது படீரெனத்தெரிக்கவும் கலைச்சாந்துகள் நெகிழவும் ஆபரணங்கள் அழிந்து சிதறவும் அழகிய மேல்வீடுகளிலே நின்று பந்து ஆடுவார்கள் எ-று-ஆல்-அசை (ரு)

குத்திரமெனுங்குயக்குழையப்பற்றிமா
மத்திரத்தொடும்புணர்கொழுநர்மாதருஞ்
சித்திரமிழைத்தபதியிலொளிர்த்திடிற்
சித்திரக்குமாருந்திகைப்பர்சேடியால்

(இ-பொ-ரை).

மலையைப்போலுந் திரண்டெழுந்த தனபாரங்களை மெழுகைப் போலுங் குழையப்பிடித்து ஆசையோடுங் கூடி சுகத்தைப்பெறு கின்ற ஆடவர்கள் அழகுவாய்ந்த சித்திரங்கள் எழுதிய அவரது மனையில் தனது மனைவிகள் ஒளித்துக்கொள்வார்களேயானால் அத் தக்கணவர்களுங் கூடக் கண்டுபிடிக்கமுடியாமல் தேடித்திகைப்பார் கள் எ-று-ஆல்-அசை (௬)

சேவலங்கிளரிருசிறையடித்தெழுங்
கூவலெத்தலத்தருங்கேள்விழிப்பரிங்
கேவருமறுதொழிலினியவிப்பிரர்
நாவிலுமாமறைநாதத்தின்னரோ

(இ-பொ-ரை).

"சேவலானது தனது அழகிய இரு சிறகுகளையும் தட்டிக் கூவு வதைக்கேட்டு எந்தத்தலங்களிலுள்ளவர்களும் நாள்தோறும் கண் விழிப்பார்கள். இந்த மன்னார்புரியிலுள்ளவர்களோவென்றால் அறு தொழில்களையுடைய பிராமணர்கள் ஓதுகின்ற வேதகோஷத்தைக் கேட்டு விழிப்பார்கள் எ-று-அரோ-அசை (௭)

பிராமணர்—அறுதொழிலாவன.

வேதமோதல், வேதமோதுவித்தல், யாகஞ்செய்தல், யாகஞ் செய்வித்தல், தானங்கொடுத்தல், தானம்வாங்கல் என்பதாம்.

இன்னயர்தரும்புரிக்கிறைறவ்வரிபோற்
பொன்னயமணிமுடிபுனைந்துகந்தொழுந்
தன்னயவமைச்சருந்தரிக்கக்கோல்செயு
மன்னனிராமசிரமி யெனும் [illegible],

(இ-பொ-ளை).

இவ்விதமான நன்மைகளைப்படைத்த மன்னூர்புரத்திற்கு அரசன் யாரெனில் மாசற்றபொன்னினாற் செய்தமைத்த மணிகளையழுத்திய மின்முடியைத்தரித்து பூமி எங்கும் துதிக்கும்படி சிம்மாசனத்திலிருந்து இருப்பக்கத்திலும் மந்திரிகள் சூழ்ந்திருக்க நீதியோடும் தேவேந்திரனைப்போல செங்கோல் நடாத்துவாராநின்ற மன்னனானவன் இராமசாமிப்பாண்டியனென்னும் வள்ளல் எ-று-ஆல்-அசை (அ)

இன்புறவாழுநாளிசைந்தவேட்டமுன்
வன்புடனடத்தாரதையழைத்துமா
வன்பெருஞ்சுரத்திற்சென்றாடிவாகையாய்த்
தன்பதிக்கிவன்வருந்தடத்தின்பக்கமால்

(இ-பொ-ளை).

இந்த அரசனானவன் மிகுந்த நன்மையோடும் வாழ்ந்து வருகின்ற காலத்தில் ஒருநாள் வேட்டையாடி வரவேணுமென்று மனதிலே அன்பானது பெருகி தனது சேனைகளுக்கு உத்தரவுசெய்து அவர்களையும் அழைத்துக்கொண்டு கொடிய வனத்திற்குச்சென்று தனக்குப்பொருந்திய வேட்டைகளாடி வெற்றியடைந்தபின்பு தனது நகரத்தைநாடிவருகின்றவழியின் பக்கத்தில் எ-று-ஆல்-அசை (கூ)

மட்டிலாப்படிமுடிமன்னர்மெய்ச்சவுந்
தட்டிலாதெவணாயுந்தாங்கியாளுமெல்
விட்டிலாபுரத்தரன்விளங்கும்பாழியி
விட்டகடனைத்துணிக்கெடுத்தில்வேதியாள்

(இ-பொ-ளை).

அளவற்ற பூமியின்கண்ணே முடிபுனைந்த அரசர்களெல்லாம் புகழும்படி ஒரு குறைவுமின்றி குடிகளெல்லாங்காத்து அரசபுரி

ந்து வருகின்ற இராமசாமிப்பாண்டியனானவன் விட்டிலாபுரத்தில் முத்தாசகுலப்பெருமான் எழுந்தருளிவிளங்காநின்ற ஆலயத்திற்கு வந்து சிவசொத்தென்றுங் கருதாமல் திருப்பணிவேலைக்காக குவித்திருந்த செங்கல்களை தனது மாளிகைக்கு அள்ளிக்கொண்டுபோய் சேர்ந்து எ-று-ஆல்-அசை (ம)

ஆனிலையமைத்தனனசலமுற்றவிக்
கோனிலைவடுவெனக்கூறக்கோயிலிற்
றனிலையன்பரிற் சாற்று மார்க்கண்டன்
றனிடத்திருந்தனன் தக்கசாமியால்

(இ-பொ-ள்).

இந்த மன்னனானவன் நடத்துகின்ற செய்கையானது நீதியல்லவென்று பூமியிலுள்ள யாவரும் குறைசொல்லும்படி இராமசாமிப்பாண்டியனானவன் அந்தச்செங்கல்களைக்கொண்டு பசுக்கொட்டில் செய்து முடித்தான். அதுசமயம் கோயிலில் அன்பர்களுமில்லை. மார்க்கண்டன்செட்டி யென்பவன் தன் கிரகத்திற்குப்போயிருந்தான் சாமிசெட்டியென்பவன் எ-று-ஆல்-அசை (மக)

பசுபதியாலயக்குறிச்சியிற்பணம்
வசிகரித்திடவெனிவல்லை சென்றுபெற்
றசிதனுமீண்டு தன்னூரை நாடியே
இசைநலத்தேவன்பட்டியிடைவந்துமால்.

(இ-பொ-ள்).

முத்தாசகுலப்பெருமானது திருவாலயத்தைச்சேர்ந்த கிராமங்களில் வரவேண்டிய பணங்களை வசிகரித்துக்கொண்டுவருகிறதற்காக விரும்பி சீக்கிரத்தில் அந்தக்கிராமங்களுக்குச்சென்று பணங்களைப்பெற்றுக்கொண்டு திரும்பி தனது நகரத்தைநாடி நல்லத்தேவன்பட்டியின் சமீபத்தில் வந்து சேர்ந்து. எ-று-ஆல்-அசை (மஉ)

(இ-பொ-ளா).

அந்தக்கள்ளனது மனக்கருத்தை அன்பனனவன் தெரிந்து நீ சொல்லுகிறது உண்மையானவார்த்தைதான் இந்தவூரைவிட்டு நான் வருகிறதற்கு ஆறு நாள் செல்லும் ஆனதால் அந்த நகரத்திற்கு நீ போவாயென்று உடனே சொல்லவும் திருடனனவன் ஆராய்ந்து நம்மைத்தெரிந்துகொண்டானென்று அவ்விடத்தைவிட்டு நீங்கவும், அன்பனனவன் தெளிந்து அந்த நல்லத்வேன்பட்டியில் தனது பந்துக்கள் வசிக்கின்ற ஒரு வீட்டில் போய்ச்சேர்ந்தான்
எ-று (௫௫)

அப்பதிதனிலுறைந்தடுத்தநாளிவ
னற்புரிக்கேகித்தன்னனியகத்தில்வந்
தொப்புமார்க்கண்டனேவெந்துகோவில்வந்
தப்புரப்புரிசெய்தநீதியாய்ந்தரோ.

(இ-பொ-ளா).

அந்த வீட்டிலேயே அன்பனனவன் அன்று தங்கியிருந்து மறுநாளில் தனது நகரமாகிய விட்டிலாபுரத்திற்கு வந்து தன் வீட்டிற்குப்போய் மார்க்கண்டனென்னும் அன்பனையழைத்து சகல சங்கதிகளையுங் கலந்து பேசி மனமகிழ்ந்து அவனோடு திருவாலயத்திற்குவந்து முத்தரசகுலப்பெருமானை வணங்கி மன்னார்புரத்திற்கு அரசனாகிய இராமசாமிப்பாண்டியனனவன் அவ்விடத்தில் செய்த நீதியையும் பார்த்து ஏ-ற-அரோ-அசை (௫௬)

நாடியபொருட்டுருநாதனேயெனைத்
தேடிவந்தக்கள்ளன்செய்திகூறினய்
சேடனெசங்கலைத்திருமன்வாரிய
கோடியிங்கதிலேலெனக்குழைந்தரோ.

(இ-பொ-ரை).

அடியார்கள் விரும்பிக்கேட்டுக்கொண்ட பொருளை நன்மையாகக்கொடுத்தருளுமுத்தரசகுலப்பெருமானே ஏழையாகிய யான் கிராமத்திற்குப்போய் பணவசூல் செய்துக்கொண்டு கல்லத்தேவன்பட்டியருகேநிறைந்த சோலையில் வந்து நித்திரைசெய்யும்போது அவ்விடத்திற்கு எழுந்தருளிவந்து இப்பொழுது உன்னிடத்திற்கு ஒரு திருடனானவன் வருகிறான் அவனைத்துணைக்கொள்ளாதே இன்று இந்த வூரிலிருந்து மறுநாள் மதிடத்திற்குவந்து சேருவாயென்று திருவுளம்பற்றிய மகத்துவத்தையும் உனது ஆலயத்தில் குவித்திருந்த செங்கல்களை இராமசாமிப்பாண்டியனானவன் கொள்ளையிட்டுக்கொண்டுபோகும்படி இங்கு பார்த்துக்கொண்டிருந்த புதுமையையும் இன்னவிதமென்று நாயேன் அறிகிலேன் என்று மனமாழ்கி வாட்டமுற்று எ-று அரோ-அசை (௰எ)

இன்னணமழுங்கியுள்ளிரங்குமன்பரால்
மின்னரன்பாலனாய்விளங்குங்கௌசிகப்
பொன்னதிப்பாங்கய்யன்புனிதப்பாழிமுன்
றுன்னியமேய்ப்பரின்சதளாக்கிட்டியால்

(இ-பொ-ரை).

இவ்விதமாகத்தானேசொல்லி மனங்கலங்கி வருந்தாநின்றஅன்பர்களது உள்ளத்தை திருப்திசெய்வதற்காக விரும்பி எங்கும்பிரகாசமுடைய முத்தரசகுலப்பெருமானானவர் ஏழுவயதுக் குழந்தையாக வடிவெடுத்து அழகிய கவுசிகநதியின் பக்கத்தில் ஐயனாரெழுந்தருளிய திருவாலயத்திற்குமுன்னே பசுக்கூட்டங்கள் நிறைந்த மந்தையில் மாடுமேய்க்கின்ற இடைப்பிள்ளைகளிடம் போய்ச்சேர்ந்து எ-று ஆல்-அசை (௰அ)

அம்பகங்கவித்துமாடுவமென்றந்திரி
யம்புகன்சொலக்களித்தாயர்சேயரி
ரம்பகங்கவிக்கவுமாசிற்காலினையச்
செம்பதியாலங்குடிகிரிசேர்த்தரோ

(இ-பொ-ள்).

ஓ பிள்ளைகளே நாம் கண்ணும்பொத்தி விளையாடுவோமென்று மூக்கண்ணனென்னும் பாலனானவன் சொல்லவும் இடைப்பிள்ளைக ளெல்லாம் இவன்று, மாண்பயினுலேமன்மகிழ்ந்துகூடி இருகண்க ளையும் பொத்தியபோது முத்தரசகுலப்பெருமானானவர் அந்த ப்பசுங்கூட்டங்களை யெல்லாம் சீக்கிரத்தில்கொண்டுபோய் செவ் வையான பூமியையுடைய ஆலங்குடியில்தனது மைத்துனரென்னு ம் பெருமானானவர் எழுந்தருளிய மலையில் அவரிடம் சேர்த்துவிட் டு ஃறு-அரோ-அசை (௧௯)

வந்தரன்பாழியில்வதிந்தபின்னரம்
மைந்தருமலைத்திறைவயின்வந்தன்றும்
பந்தனைக்கரந்தொருபாலனேகினு
னந்தரப்படரெனுமதிரக்காணிலோம்

(இ-பொ-ள்).

பாலனுக்கெழுந்த முத்தரசகுலப்பெருமானானவர் தனது திரு வாலயத்திற்குவந்தமர்ந்தபின்பு இடைப்பிள்ளைகளெல்லாம் கண்வி ழித்துப்பார்த்து பசுக்கூட்டங்களையும் பாலனையும் காணதிருப்பதை க்கண்டு மனந்தமொழி அரசனிடத்திற்குவந்து ஓ எந்தையே உனது பசுநிரைகளையெல்லாம் ஒரு பாலனானவன்வந்து திருடிக்கொண்டு போய்விட்டான் அவன்பூமிவழியாகச்சென்றானென்றும் அந்தரமா ர்க்கமாய்ச்சென்றானென்றும் எங்களுக்குத்தோன்றவில்லைத் தோன் றவே என்றுசொன்னார்கள் எ-று (௨௰).

(இ-மொ-ரை).

அரசனானவன்சொல்லிய வார்த்தையே நன்மையென்றுணர்ந்து மந்திரியானவன் எழுந்து தேர்ந்த சோதிடர்களைத் தருவித்து இந்த நிலையைத்தெரிந்து சொல்லுவீர்களென்று கேட்கவும், உடனே அந்தச்சோதிடர்களறிந்து இராமசாமிப்பாண்டியனது முகத்தைநோக்கி ஓ மகாராஜனே கேட்பீராக மூத்தரசகுலப்பெருமானது ஆலயத்தில் திருப்பணிவேலைகளுக்காகக் குவித்திருந்த செங்கல்களை அள்ளிக்கொண்டுவந்த குறையேதவிற வேறில்லை ஆதலால் அந்தச்செங்கல்களை அந்த ஆலயத்திற்கு கொண்டுபோய் அன்பரிடம் ஒப்புவித்து ஏழையாகிய யான் தெரியாமல் செய்த குற்றத்தைப்பொறுத்தருளவேண்டும் எந்தையே என்று மூத்தரசகுலப்பெருமானது திருவடியைத்துதிப்பீராகில் தவறிய பசுக்கூட்டமானது உமக்குக் கிடைக்குமென்று சொன்னார்கள் எ-று (உரு)

மன்னிலையெனவரன்வதியுங்கற்கிலவர்
தென்னரில்கமித்தருளெனத்துதித்துமா
பொன்னளித்தனனைதப்புகழ்ந்தனன்பரு
முன்னிராவருமனைக்கொதுங்கென்றேகினர்

(இ-பொ-ரை).

அரசனானவன் இந்த வியாயத்தைக்கேட்டு உண்மையென்றுணர்ந்து மூத்தரசகுலப்பெருமானெழுந்தருளியிருக்கின்ற திருவாலயத்திற்குவந்து ஏழையினது குற்றங்களைப் பொறுத்தருளும் எந்தையே என்று துதித்து அன்பர்களிடத்தில் செங்கல்களின் கிரயத்திற்குமேலான பொருளுங்கொடுத்தான், அன்பர்களிருவரும் அரசனது வேண்டுதலைக்கண்டு புகழ்ந்து ஓ. இராமசாமிப்பாண்டியனே நீ இனிமேல் வருந்தவேண்டுவதில்லை உனது பசுக்கூட்டங்களானது இன்றையத்தினமே வந்துசேரும் அரண்மனைபோய்ச்சேருவாயென்று சொன்னார்கள் எ-று (உசு)

அவ்விடையணிந்திறையகத்திற்சேர்ந்தபின்
செவ்வியன் பருமதிசிவனைப்போற்றியின்
னெவ்வியனிலாதனையுதவுமென்னலும்
நவ்வரன் மேகவண்ணனையுள்ளெண்ணினான்

(இ-பொ-ள்).

அரசனானவன் அந்த உத்தரவைப்பெற்றுக்கொண்டு தனது அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தபின்பு செவ்வையுள்ள அன்பர்களிருபேரும் முத்தரசகுலப்பெருமானைத்துதித்து ஏழைகளுக்காக மனம்பொருந்தி அரசனது சிலையை இன்றைக்கே கொடுத்தருள வேண்டும் என்றதையே என்று வணங்கவும் நன்மையுடைய அப்பெருமானானவர் மனமகிழ்ந்து ஆலங்குடி மலையிலே எழுந்தருளியிருக்கின்ற தன்னுடைய மைத்துனரென்னும் திருமாலை உள்ளத்திலே நினைத்தார் எ-று (உயஎ)

அன்னினைவதையுணரரிவந்தேத்திடப்
பொன்னரனுக்கினின்பொருப்பிற்றங்கிய
மன்னிலாதனையவன்மனையிற்சேர்செய்
யென்னவந்தனுப்பினனிறைமனைக்கரோ

(இ-பொ-ள்).

முத்தரசகுலப்பெருமான் நினைத்தவுடனே திருமாலானவர் அக்கருத்தையறிந்து எழுந்தருளிவந்து துதித்து நிற்கும்போது அவரது முகத்தைநோக்கி உனது கிரியிலே முன் நாம் கொண்டுவந்து சேர்த்து அது முதல் அங்குதங்கியிருக்கின்ற இராமசாமிப்பாண்டியனது சிலையை அவனது அரண்மனைக்குப்போய்ச்சேரும்படி செய்வீரென்று திருவாய்மலர்ந்தருளினார் உடனே தான் எழுந்தருளியிருக்கின்ற கிரிக்குச்சென்று அந்த சிலையை அரசனது மனைக்குப் போய்ச்சேரும்படி அனுப்பிவைத்தார் எ-று-அரோ-அசை (உஅ)

ஆலெலாந்தொழுவில்வந்தமரக்கிமன்
மூவரிலொருவனும்மூணாத்தசோதியை
யேவரினறிபவனெத்துதித்துமா
பூவரசிலைழத்தனன்புகழைநாட்டியால்

(இ-பொ-ள).

மூத்தரசகுலப்பெருமானது கருணையினால் கிளையானது தனது தொழுவிலே வழக்கம்போலவந்து தங்கியதை அரசனானவன் கண்டு வியந்து பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்று சொல்லாநின்ற மூவரில் முதன்மையாக எழுந்தருளி விளங்காநின்ற சோதியே உனது மாட்சிமையை அந்தப்பிரமா விஷ்ணுவாலுமே அறியக்கூடாதென்னில் பூமியின் கண்ணோ அறியத்தக்கவர் யாரிருக்கின்றனர் ஒருவருமில்லையென்று துதித்து அரசனானவன் எங்கும்புகழை நாட்டி அரசசெலுத்திவந்தான் எ-று-ஆல்-அசை (உக)

அரனுறையாலயப்பணிசெய்யன்பரோ
ரிருவரில்மார்க்கண்டனிலைழத்தனன்னாற்
பாகதியடைந்தனன்புகருஞ்சாமிவே
ளரியமார்க்கண்டன்சேயைவர்தன்னிலால்

(இ-பொ-ளா).

பின்பு மூத்தரசகுலப்பெருமானது ஆலயத்திற்கு வேண்டிய பணிவிடைசெய்துவராகின்ற அன்பர்களிருவரில் மார்க்கண்டன் செட்டியானவன் செய்த நன்மையினால் நல்ல பதவியடைந்தான் பின்பு சாமிசெட்டியானவன் சிலநாள் பார்த்துவந்து பதவியடைந்த மார்க்கண்டன் செட்டியினது குமாரர்கள் வெள்ளையன் செட்டி மூத்துக்கருப்பன் செட்டி ஆண்டி செட்டி வீரபத்திரன் செட்டி சுப்பன் செட்டி என்றுபெயர் விளங்கிய ஐந்து பெயர்களில் ஆல்-அசை (உஉ)

நற்பணிசெயுமிளைஞனுக்குளாத்தரன்
பொற்பதமடையவும்புனிதன் சுப்பவேள்
கற்பிதப்படியரன்கழலைச்சூடியே
யற்புதப்பணிபுரிந்துவருங்காலரோ

(இ-பொ-ள்)

இளையோனாகிய சுப்பன் செட்டியையழைத்து நீ இந்த ஆலயத்திற்குவேண்டிய பணிவிடைகளை இன்றுமுதல் செய்துவருவாயென்று சொல்லிவிட்டு முத்தரச குலப் பெருமானது கிருபையால் சாயுச்சிய பதவியடைந்தான் பின்பு பரிசுத்தமனமுடைய சுப்பன் செட்டியானவன் பதவியடைந்த சாமிசெட்டியினது கட்டளைப்படி அப்பெருமானது பாதங்களைவணங்கி அலங்காரமாகச்சகலபணிவிடைகளையும் நடத்திவருகின்ற நாளில் அரோ-அசை (௬௪)

எல்லதுமுன்மாடமொன்றியற்றித்தன்றிரி
மைந்தரிற்பணிசெயவிளைஞன்பாலமைத்
திந்திரபதவியதடைந்தபின்னரீங்
கந்தமாய்வயிரவன்புரிந்துவந்தரோ

(இ-பொ-ள்),

முத்தரசகுலப்பெருமானது திருவாலயத்திற்கு முன்பாக சிங்காரமண்டபமொன்று செய்துவைத்துவிட்டு தனது புத்திரராகிய சொக்கன்செட்டி நாராயணன்செட்டி வயிரவன்செட்டி என்று பெயர்விளங்கிய மூவரில் இளையோனாகிய வயிரவன்செட்டியையழைத்து ஆலயப்பணிசெய்து வரும்படிக்கு நியமித்துவிட்டு நல்லபதவியடைந்தான் பின்பு தந்தையினது உத்தரவின்படி வயிரவன்செட்டியானவன் ஆலயத்திற்குவேண்டிய பணிவிடைகளை குறைவின்றிச் செய்துவந்தான்.

இன்னிலத்திருக்கவெங்கெந்தக்கணையகன்
மன்னிராமிருத்தத்தைவழங்கினேமொளிர்
பொன்முடிச்சங்கரவேலம்பூபதிக்
கின்முகமளித்ததுமியம்புவாமரோ

(இ-பொ-ள).

இந்தப்பூமியின்கண்ணே யாவருந்திகைக்கும்படிக்குவந்து எழுந்தருளிய முத்தரசகுலப்பெருமானுனவர் இராமசாமிப்பாண்டியனுக்கு கிரையளித்த சரிதையை இதுவரையும் சொன்னோம் இனிமேல் பிரகாசமுடைய இரத்தினக்கிரீடத்தையணிந்த சங்கரவேலுப்பாண்டியனுக்கு முகவளித்த சரிதையையும் சிறிதுசொல்லுவோம் எ-று-அரோ-அசை (௩௪)

இராமசாமிப்பாண்டியனுக்கு கிரையளித்த சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௱௩௰௫.

உ

திருச்சிற்றம்பலம்.

## சங்கரவேலுப்பாண்டியனுக்கு முகவளித்த சருக்கம்.

வீரமிடுங்கலியுகத்திலுறுபுரியுட்சேர்பிறங்கிவிமலமாதுக்
தாளமிடுமுபரிகைமாளிகைக்கொடுமாடமறந்தழைத்துமல்கிச்
சாரமிடுங்குழகமன்னூர்புரத்திறைதாரணிராமசாமிமாவன்
சரளமிடுந்திருவரயன்கருணையினுற்பயக்கெடுத்தகாலின்காலால்

௧ (இ-பொ-ள),

விசாலமுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியின்கண்ணேயுள்ள நகரங்களிலே மிகுந்த செல்வமுடையதாயும் நவமணிகளாலிழைத்த மேல்வீடுகளையுடையதாகவும் சிறந்தமாளிகைதோறும் இலக்குமியானவள் ஆனந்தக்கூத்தாடிக்கொண்டிருக்கவும் தருமங்களானது தழைத்தோங்கவும் நிலைபெற்று அழகாய்விளங்காநின்ற

மனுர்புரத்திற்கு அரசனும் மனமாலையணிந்த இராமசாமிப்பாண்டியனது புத்திரனுகிய சங்கரலிங்கப்பாண்டியன் வரத்தினுல் பெற்றெடுத்த புதல்வனென்னும் சங்கரவேலுப்பாண்டியனுனவன் எ-று ஆல்-அசை (க)

விண்மணிமின்முடிபுனைந்து கோலோச்சிப்பெருநிலயாவிசனைத்தன்
[னீர்
கண்மணிபோற்புரத்துவருஞ்சங்கரவேல்பாண்டியமன் கலின்மின்
[னூர்க்குன்
வண்மணிவல்லவையொடுருவேளிரதிக்கருவர்துவாழுமெல்விற் [க்
பண்மணியாசனத்திலவதிக்தாள முளையிலவெனவுட்படார்ந்தேவரய.

(இ-பொ-ளை).

சூரியனைப்போலும் பிரகாசமுடைய இரத்தினக்கிரீடத்தைச் சென்னியிற்புனைந்து பெரியபூமியிலுள்ள உயிர்களையெல்லாம் தன் இருகண்மணியைப்போல பாதுகாத்து அரசாட்சிசெய்துவராநின்ற சங்கரவேலுப்பாண்டியனுனவன் பெண்களுக்குள்ளே மிகு அழகைப்படைத்த பிரியநாயகியோடு மதனும் ரதியும் போலக்கூடி மகிழ்ந்து வாழ்ந்துவருகின்றபோது ஒரு நாளில் இந்தச்செவ்வையாகிய இரத்தினச்சிம்மாசனத்தில் நமக்குப்பின்னிருந்து ஆளுவதற்கு ஒரு புத்திரனில்லையே என்று மனதிலே நினைந்து வருத்தமடைந்து எ-று-ஆல்-அசை (உ)

றமிழைத்தபொருகர்முனஞ்செய்புணாயோவிறைவிதமோசெறிக்
[தவும்பல்
மறமிழைத்ததோமதற்பாதமதோவெனக்கருதியடனேரண்ணு
றைமிழைத்தரு முனைனப்பல பிரபஞ்சாலயிழைந்தரிச்சிகன்
போ] னிறமிழைத்தநேணிப்பிஞ்சகனுளமெய்யெனிலவாய்க்குதில
[யேதன்மூல்

(இ-பொ-ள).

மேன்மைகளைச்செய்துவந்த நமது அரசர்கள் முன் செய்த குற்றமோ கடவுளினது செயலோ ஊழ்வினைதானோ நெருங்கிய குலம்

செய்த பாவமோ என்று பலவாறுக எண்ணி சந்திரனைப்போல
வெண்மை நிறத்தையுடைய விபூதியை அணியும் சிவபெருமான்
ஒருவன் உண்டென்பது மெய்யேயாகில் நமக்குக் குழந்தை கிடை
க்குமென்று ஒருவாறு தேறி முப்பத்திரண்டறங்களையுஞ் செய்த
குமுணனிவனேயென்று சொல்லும்படிக்கு அனேக தண்ணீர்மடங்
களும் அன்னசத்திரங்களும் கட்டிவைத்து வேண்டிய தருமங்களை
யும் விரும்பிச்செய்தான் எ-று-ஆல்-அசை (ரு)

முப்பத்திரண்டறங்களாவன.

ஆதுலர்க்குச்சாலை-ஓதுவார்க்குணவு-அறுசமயத்தோர்க்குண்
டி-பசுவுக்கு வாயுறை-சிறைச் சோறு-ஐயம்-தின்பண்டநல்கல்-அற
வைச்சோறு-மகப்பெறுவித்தல்-மகவுவளர்த்தல்-மகப்பால்வார்த்தல்
அறவைப்பிணஞ்சுடுதல்-அறவைத் துரியும்-சுண்ணம்-நோய்மருந்து
வண்ணார்-நாவிதர்-கண்ணாடி--காதோலை--கண்மருந்து--தலைக்கெண்
ணெய்-பெண்போகம்--பிறர்துயர்காத்தல்--தண்ணீர்ப்பந்தல்--மடம்
தடம்--சோலை-ஆவுரிஞ்சுதறி-விலங்கிற்குணவு--ஏறுவிடுத்தல்--விலை
கொடுத்துயிர்காத்தல்-கன்னிகாதானம்.

மிக்கவரன் பாரப்பாவத்தகவுபுரிமனச்செவ்வேளைத்தந்த
தக்கவரன்கோகனகத்தாடுணையென்றுன்னிவருந்தலையாற்கோம
இக்கவரம்பொழியமெமதுழிவுரிலென்றிறைநனவிற்றிருகாதன்வி
தித்கவரன்முறையதித்துள்ளுவக்கிருந்தோன் வீங்கிமறுகிவசத்தன்று
[ல்

(இ-பொ-ளை).

சிறந்தோர்களெல்லாம் அன்பானது பெருகும்படி வந்து தரி
க்கப்பெற்று மனமகிழ்ந்து இருளை புரியாநின்ற கந்தக்கடவுளைப்பய
ந்த மேன்மையுள்ள சிவபெருமானது தாமரைமலர்ப்பாதங்களே
கதியென்று நம்பி பூசித்துவராநின்ற புர்சனது குணத்தை மூத்தா
சகுலப்பெருமானானவர் அறிந்து மனமிரங்கி ஒருநாளிவன் கனவி
லேவந்து தோன்றி ஓ. சங்கரவேலுப்பாண்டியனே நீ நமது ஆலய

இன்றது ஆதலால் சீக்கிரத்தில் பழுதில்லாத ஒரு பாலனைக் கறி சமைத்து அன்னமிடுவாயென்று திருவாய் மலர்ந்தருளியவுடனே உனது கருத்தின்படியே தொண்டனானவன் தனது பாலனைக் கொன்று கறி சமைத்துப்படைக்கவும் அதைக் கண்ணாரக்கண்டு மனமகிழ்ந்து அந்தச் சீராளனை உயிர்பெற்றுவரும்படிக்கு அழைத்து வைத்து சிறுத்தொண்டனுக்கு முத்திகொடுத்தாண்ட புகழுடைய எந்தையே உனது பெருமைகளை யான் என்னவிதமென்று சொல்லப்போகின்றேனென்று மறுபடியும் துதித்து உனது கிருபைக் கண்ணால் என்னையை நோக்கி இந்தப்பூமியை ஆளும்படிக்கு எனக்கு ஒரு குழந்தை தந்தருளவேண்டுமென்று வணங்கி எ-று-ஆல் அசை (சு)

வார்மாலைச்சொற்குமுத்துமாலைபங்கனழைக்குமலர்த்தொடையெனக்
ணிமாலையுறச்சாற்றிநின்றிதயங்கசிந்துருகுநீதியென்னுஞ் [கண்
சீர்மாலையனும்பணியுமுத்தரசகுலப்பெருமான்செவியிற்புக்கித் [ல்
தார்மாலைப்புரவலனேயுனக்கிருசேயளித்தமெனத்தருக்கிப்பெற்று

(இ-ரை-ள).

கச்சையும், மாலையையும் அணிந்த தனபாரங்களையுடைய முத்துமாலையம்மையினது நாயகனாகிய முத்தரசகுலப்பெருமானது திருவடிகளுக்கு பூமாலையணிவதைப்போல தன்னுள்ளத்தின் அன்பானல் பொங்கிவராநின்ற பேரின்பக்கண்ணீரையே மாலையாக அணிந்து கரைந்துருகி நின்று முறையிடுகின்ற செய்தியானது புகழ்படைத்த மாலும், அயனும் துதிக்கப்பெற்ற அப்பெருமானது செவியிற்கேட்டவுடனே கிருபையானது கூர்ந்து அரசனது முன்னே தோன்றி ஓ. நீதியுள்ள அரசனே உனது அன்பினால் உனக்கு இரண்டு பிள்ளை கொடுத்தோம் செல்வத்தோடு பிறந்து வளர்ந்து அரசுபுரிவார்கள் நீ உனது அரண்மனைக்குப்போவாயென்று திருவுளம்பற்றவும் மனமகிழ்ந்து அவ்விடையைப் பெற்றுக்கொண்டு எ-று ஆல்-அசை (எ)

வாரகமேலெழுந்துறமாறனுக்கெவுளியுதவியபெம்மானேயிந்தப்
பாரகமேலுய்யவருந்தரிசனையுஞ்சேய்வரமும்பணித்தவன்பே
தாரகமேயிலையுனதாராய்மலரின்றுளினையேதஞ்சமுற்றுங்
காரகமேயிரங்கியெனத்துதித்தவன்மாளிகைக்குவந்தேகளித்தா
ளெவ்வில்

(இ-பொ-ள்).

திருவாதவூரருக்காக அழகிய இராவுத்தனுகி குதிரைமேல் எழுந்தருளிவந்து பாண்டியனுக்கு குதிரையளித்த பெருமானே இந்தப்பூமியின்கண்ணே நாயேன் உய்யும்படிக்கு தரிசனமும் குழந்தை வரமும் கொடுத்தருளிய பேரன்பே எளிமைக்கு எப்போதும் உனது இருதாமரைமலர்ப்பாதங்களே துணையன்றி வேறு உதவியில்லை ஆனதால் உனது தீனமான இரங்கி முழுதும் காத்தருளவேண்டு முத்தரசகுலப்பெருமானே என்று மேலுமேலும் துதித்து தனது அழகிய மாளிகைக்குவந்து சேர்ந்து மனமகிழ்ந்து வாழ்ந்து வருகின்றநாளில் எ-று (அ)

முன்னவனுவிசித்தவருட்டவதிலவ்வரத்சாந்தின்மதமெய்யிலேற
மன்னவனுபகெருவாய்ப்பயந்தழுலைவளரவிப்பர்மனையில்வெண்
ணெய்
தின்னவனுமெனப்புகழ்ச்சடுவயனம்போதலுமிச்சிறுவனுக்குப்
பின்னவனுமொருமூலையைப்பெற்றினிதாய்வளர்த்திறைவன்பிரிய
மாயால்

(இ-பொ-ள்)

முத்தரசகுலப்பெருமானுனவர் திருவாய்மலர்ந்தருளிய படிக்கு *தவறுமல் மதயானையின்மீதேறி புவனிவராநின்ற சங்கரவேலும் பாண்டியனது நாயகியாகிய சிரங்கம்மாளானவள் அந்த வருடத்திலேயே கருப்பவதியாகி ஒரு மகவைப்பெற்று ஆயர் வீட்டிலே வெண்ணெய் தின்று வளர்ந்த கோபாலகிருட்டிணனேயென்று யாவரும் புகழும்படி இக்குழந்தையானது அருமையாக வளர்ந்து வருகின்றநாளில் மூன்றுவயது ஆனவுடனே இவனுக்குச்சகோதர

௫. இவனது தாயானவள் பின்னும் ஒரு மகனைப்பெற்றெடுத்து இந்த இரண்டு பிள்ளைகளையும் வளர்த்து வருகின்றபோது அரசனானவன் இந்தப்பிள்ளைகளைப்பார்த்து மனமகிழ்ந்து எ-று-ஆல்-அசை (௬)

சங்கரலிங்கஞ்சிவசுப்பிரமணியனெனவிருபேர்தரித்துவேந்தன்
மங்களமாய்ப்பள்ளியில்வைத்தனனவருமெய்க்கலையும்வளமாய்க்கற்று
ஓங்கரனார்கருணையினாலாயுதவித்தையிலுமிவரதிகமென்னச்
சங்கரவேல்ப்பாண்டியமன்னமுதமெனச்செவிகொடுத்துச்சால்பாய்
வாழ்தல்

(இ-பொ-ள).

மூத்த குழந்தைக்கு சிவசங்கரலிங்கப்பாண்டியன் என்றும் இளைய குழந்தைக்கு சிவசுப்பிரமணியப்பாண்டியனென்றும்தந்தையானவன் நாமதேடமிட்டு பள்ளிக்கூடத்தில் படிக்கவைத்தான் இந்தக் குழந்தைகளும் விநாயகமூர்த்தியினது கிருபையால் சகல கல்விகளையும் பழுதறக்கற்று ஆயுதப்பரிட்சைகளிலுந் தேர்ந்தவர்கள் என்று யாவரும் வியந்துரைக்கும்படி சிறந்தார்கள் தந்தையாகிய சங்கரவேலுப்பாண்டியனானவன் அந்தப்புகழான செய்தியை அமுதம்போல தனது இருசெவியிலுங்கேட்டு மிகுந்த பேரானந்தத்தோடும் வாழ்ந்து வருகிறநாளில் எ-று (௭)

அன்றரனைத்தரிசித்தவாணிபனற்பதலியடைந்தபின்னர்
மன்றமணிக்குமரிவீரட்டாயுவானமுன்னோன்றனக்குவராகாய்க்
குன்றமெனத்திரண்டபுயத்தரசரமைச்சருமரனைக்குறித்துப்போற்
றிட. தன்றிறலவிலரசப்பட்டமணிந்தெவருமிகுசுகமாய்வாழ்ந்தார்

(இ-பொ-ள்)

சங்கரவேலுப்பாண்டியனானவன் மூன் குழந்தைவரம்பெறும் போது முத்தாசகுளப்பெருமானைக் கண்ணாரக்கண்டு தரிசித்தவன்

மையினால் இவ்வுலகத்து வாழ்வை வெறுத்து நல்ல பதவியைப் பெற்றுக் கயிலாயத்தை அடைந்தான் பின்பு மலையைப்போலுந் திரண்ட தோள்களையுடைய மன்னர்களும் மந்திரிகளும் மற்றும் பெரியோர்களுங்கூடி மூத்தரசகுலப்பெருமானே நீ கிருபை செய்வாயாகவென்று துதித்து வாசனையணிந்த மார்பையுடைய இராசகுமாரர்களிருவர்களில்மூத்தகுமாரனாகிய சிவசங்கரலிங்கப்பாண்டியனுக்கு இளவரசுப்பட்டந்தரித்து யாவரும் மனமகிழ்ந்து மிகுந்த சுகத்தோடும் வாழ்ந்திருந்தார்கள் எ-று (௰௧)

கோவினற் பணிதனைக்கொண்டு செய்தவோர்
மாவயிரவனும்மெம்மானில் லேகினன்
பூவிலன்னவன் றிருப்புதல்வன்வந்தன
மேவியப்பணிதனை விளங்கச்செய்தனன்.

(இ-பொ-ள்).

மூத்தரசகுலப்பெருமானது திருவாலயத்திலே நல்லபணிவிடைகளைச்செய்து வந்த அன்பனாகிய வயிரவன் செட்டியானவன் நல்லபதவியைப்பெற்று எந்தையாகிய சிவபெருமானது கயிலாயத்திற்குச்சென்றான் பின்பு அவனது புத்திரனாகிய மூத்துசாமி செட்டியானவன் அந்த நன்மையை ஆராய்ந்து தந்தை செய்துவந்த பணிவிடையை மனவிருப்பத்தோடு தானே செய்து வந்தான், எ-று

ஆல்-அசை (௰௨)

அப்பணி செயுமொருவன் பனன்னரன்
செம்பதமடைந்தனன் செய்தமாதவம்
பின்பணிசெயத்தகும் பெயரிங்காரென
வைம்பெயர் நாடினாவர்களாரெனில்

(இ-பொ-ள்).

அழகிய பணிவிடை செய்துவராநின்ற மூத்துசாமி செட்டியானவன் செய்த தவத்தினாலே சிறிது காலம் குறைவின்றிப்பார்த்

துவக்கு இவனும் நல்ல பதவியடைந்தான். பின்பு இந்த ஆலயத் திருப்பணிவிடைசெய்யத்தக்கவர் யாவரென்று ஐந்து பெயர்கள் கூடி யோசிக்கலாயினர். அவர்கள் யார் யார் எனில் எ-று (௫௩)

பார்பெறுங்கோவில்பட்டி மாலிங்க
மோர்பெறு மங்கலத்திராமன்செட்டியா
மார்பெறுமாவிடையார் புரத்திலா
ரோர்மதன் வாழவந்தானொடின்னுமால்.

(இ-பொ-ள).

பூமியின் கண்ணே மதிக்கப்பெற்ற கோவில்பட்டி மகாலிங்கம் செட்டி திருமங்கலம் இராமன் செட்டி பெருமையுடைய ஆவுடையார் புரம் வாழவந்தான் செட்டி இவர்களோடு இன்னும் ஆல்-அசை (௫௪)

அந்திருச்சுழியின் முத்தரசன் சென்னமூர்க்
கந்தமாவயிரவனிவர் கலந்ததன்
சொந்த நாராயணன் சுதனைசேமிக்க
வுந்திறனுடன் புரிந்து வந்தவந்தனுல்.

(இ-பொ-ள).

அழகிய திருச்சுழி முத்தரசன் செட்டி சென்னம்பட்டி வயிரவன் செட்டி என்று பெயர் விளங்கிய இவர்கள் ஐந்து பெயர்களும் கருதி முன்முத்தியடைந்த வயிரவன் செட்டியின் தலைமகனாகிய நாராயணன் செட்டியின் குமாரன் கருப்பன் செட்டியை நியமித்தார்கள். அவர்கள் மொழியையே நின்மையாகக்கொண்டு மேன்மையான பணிவிடை செய்து வந்தான் எ-று-ஆல்-அசை (௫௫)

சங்கரவேலிறைதனக்குச்சீர்மக
விங்களித்தநற்கதையியம்பினேமினிக்
கங்கையுங்கடுக்கைநாகமும்புனைந்தமா
சங்கரன்பூஜையின்சரிதைகூறுவாம்.

(இ-பொ-ரை).

மன்னூர்புரத்திற்கு அதிபதியாகிய சங்கரவேலுப்பாண்டியனுக்கு மகவளித்த சரிதையை இதுவரையும் சொன்னோம். இனிமேல் கங்கையையும், கொன்றையையும், சர்ப்பத்தையும் புனைந்த சிவபெருமானது பூஜை மகத்துவத்தையும் சிறிது சொல்லுவோம் எ-று (௬௯)

சங்கரவேலுப்பாண்டியனுக்கு மகவளித்த சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௩௱௮௰௧.

(:—0—:)

உ
திருச்சிற்றம்பலம்.

# சிவபூஜைச்சருக்கம்.

:0:

பொருப்பினிற் சிறந்த கயிலையிலயன்மால்போற்ற மாதவையுரிந்து
றைந்தான். பருப்பதிக் குரிததோடு ருத்திரனுரைத்த பலனினைத்
ப்பகருவமேலோ. குருப்பமாய்ச்செயும் பூசையிற்சிவபூசையுசித
மீதனைப் பிடித்துலகின். விருப்பமாய்ப்புரிவோர்க்கெய்தவந்தனை
யும் விலக்கிமா பதவியைத்திருமால்.

(இ-பொ-ரை).

கிரிகளுக்குள்ளே சிறப்புற்றோங்கிய கயிலாயகிரியின்கண்ணே பரமானந்தமாயெழுந்தருளியிருந்த பிரமதேவனும் திருமாலும் சின்

றுதிக்க அன்போடு கருணைபுரிந்தயாவற்றையும் புரந்தருவாரின்ற உமையவள் கேட்க சிவபெருமானவர் மனமகிழ்ந்து திருவாய் மலர்ந்தருளிய புண்ணிய சரிதையைச்சிறிது சொல்லுவோம். அதாவது அறிவுடையோர்கள் செய்யாநின்ற மிகுந்த பூசைகளுக்கெல்லாம் நன்மையானது சிவபூசையே? இதைக்கைக்கொண்டு மனவிருப்பத்தோடும் செய்பவர்களுக்கு எவ்விதமான கொடிய பாவங்களையும் விலக்கி மேலான பதவியைக்கொடுக்கும் எ-று-ஆல்-அசை (க)

திரைதரும் பரவைச்செழும்படிவதனிற் செனித்தவராயுகமுதிர்வா
ய்]நரைதருமுனமே தலைவிழிவாயுண்ணற்கரத்தோடுமெய்பொருந்த
விரைதருமலரால் பசுபதி பூசைவிளைத்தருள் பெறிலரன்பொற்று
மரைதரும் பதத்தினண்ணுவார் கொடியமறலியும் வெருண்டு ப
ணியவால்

(இ-பொ-ரை).

அலைகளையுடைய கடல் சூழ்ந்த பூமியின்கண்ணே மானிடராகப்பிறந்தவர்கள் வயசு முதிர்ந்து நரைத்துப்போகுமுன்னமே தலையானது வணங்கவும் கண்ணானது கண்டு களிக்கவும் வாயானது வாழ்த்தவும் கரமானது அஞ்சலிசெய்யவும் உடலானது பொருந்தவும் வாசனையுடைய மலர்களால் சிவார்ச்சனைசெய்து கிருபையைப் பெறுவார்களாகில் கொடிய கூற்றுவனும் தூரநின்று அஞ்சி வணங்கும்படி சிவபெருமானது அழகிய தாமரைமலர்ப்பாதத்தோடு சேர்ந்து வாழ்வார்கள் எ-று-ஆல்-அசை (உ)

குருமுறைமண்ணிர் மணற்றிருநீறுகும்பமா பீடிகைசிரந்
திருமுறைவில்லங்கடுக்கை சாணகஞ்சித்திரங்குசைதனிற்பூசை
திருமுறையோடு மெல்லுமூவேளை செய்வது சலமிலைதயாராய்த்
தொருமுறையேனும் புரிந்திலார்கொடியவூழலில் வீழ்ந்தழுங்குவ
ரால்

(இ-பொ-ரை).

குருவினிடம் பெற்ற முறைமையைக்கொண்டு மண், லம், மணல், திருநீறு, பூரணகலசம், பொற்பீடம், எழுத்து, புத்தகம், வில்வம், கொன்றை இலைகளில் ஏதாகிலும் பரமசிவத்தை ஆவாகனம் பண்ணி நாடோறுந்தவறாது மூன்றுவேளையும் அழகிய முறையோடும் பூசிப்பது நன்மை இதை மனத்திலெண்ணாராய்ந்து ஒருவேளையாகிலும் பூசியாதவர்கள் கொடிய நரகத்திலே விழுந்து அழுந்துவார்கள் எ-று-ஆல்-அசை (ரு)

பூசனைபுரியான் புசிப்பது குணபம்புலையனின் கஷ்டமீதன்றி
நமனின் கரத்திற்சிக்கி நோவடைந்து நரகினில் வீழ்வனேறினுமா
காயினிதனிற்காக்கை யெனப்போலக்கூபேயிணிபேயிடாமிடியு
மீசவைய்ப்பீடித்துள்ளனுங்குவரிழிவாய் விளைந்தயோனிகடோறும்
பிறந்தால்

(இ-பொ-ரை).

பூசையில்லாதவன் புசிக்கப்பட்ட போசனமானது பிணமும் புலையனுடைய கஷ்டமுமாகும். இதுவன்றி முடிவில் எமன்கைக்குள் அகப்பட்டு மிகுந்த வருத்தங்களையடைந்து கொடிய நரகத்தில் விழுவான். ஒருக்கால் விமோசன காலமுண்டாகிப்பிறவிக்கரையிலேறித் தேகமெடுத்தானாயினும் காக்கையைப்போலக் கருநிறமுடையவனாய் வியாதிகளும் பிசாசமும் துன்பமும் வறுமையும் சூழ்ந்து இழிவாயுள்ள பல யோனிகள் தோறும் பிறந்து வருந்துவான் எ-று-ஆல்-அசை. (சு)

நன்மையார்திரயோதசிதனிற் பூசை நடத்திடிற் பூசுரர் கோமா
மின்கருத்தானைதயாவிலையு[illegible]தைத்த மிகுபவமாலயக்காவும்
புன்கணைத்புரிந்த செம்பொ[illegible]சாரமும் பொய்புகன்றது மதுதனை
ப்புசித்த] தின்மையுமகலுமுனிவரும் புகழத்தேவராயுவனையில் வா
ழ்வார்.

ருமானுக்கு அபிஷேகஞ்செய்தால் உறுதிமாசச் சிவலோகத்தை அ
டைந்து வாழ்வான் பசுவின் தயிரினுல் அபிஷேகஞ்செய்தால்
அக்கினிதேவனுவான் தனக்குத்தானே ஒப்பாகிய திருநீற்றினுல்
அபிஷேகஞ்செய்தால் சந்திரனுவான் நிறைந்த ஜலத்தினுல் அபி
ஷேகஞ்செய்தால் வருணனுவான் இந்தத்திதியில் ஆதிவாரங்கூடி
ய நாளில் நல்ல இளநீரால் அபிஷேகஞ்செய்தால் தேவேந்திர ப
தவியைப்பெற்று வாழ்வான் எ-று- ஆல்-அசை (எ)

ஆவினெய் தேனெட்டியிலமிக்காலுமஞ்சதுர்த்தசிதனிலாட்டின்
மாவடையோனெடொன்றலார் தெளித்த மஞ்சனத்தாற்கையால
வைத்த] பூவனப்பூவாற்புகலுமந்திரத்தாற்புனிதனுயர்ச்சனைபுரிவோ
னுலாயூர்ச்சம்பூருவத்தேகாதசியிலன்றுருக்கிய செய்யால

(இ-பொ-ரை)

அழகிய சதுர்த்தசியில் பசுவினெய்யினுலும் தேனினுலும் நன்
னெய்யினுலும் கருப்பஞ்சாற்றினுலும் சிவபெருமானுக்கு அபிஷேக
ஞ்செய்தால் சாயுச்சியபதவியடைவான் அல்லாமலும் வடித்தெடுத்
த திருமஞ்சனத்தினுலும் தன்கையால் வைத்துள்ள நந்தவனத்தி
லெடுத்த புஸ்பங்களினுலும் செபிக்கின்ற மூலமந்திரத்தினுலும் இ
டைவிடாமல் நாள்தோறும் பரிசுத்தஞ்சிச் சிவபூசைசெய்கின்ற ஒ
ருவன் ஆசையோடும் கார்த்திகை மாதத்தில் பூர்வபட்சத்து ஏகா
தசித்திதியில் அப்போதுருக்கிய பசுவினெய்யால் எ-று (அ)

பக்கனுக்கன்பாராட்டி லோர்கோடி நன்னியரோடருங்கயிலை [illegible]
புக்குவான் தன்வென்னெருக்கிலோர் பூவைப்புனையின்மாபொன்ப
தின்கழஞ்ச] மிக்கவேயியற்றுங்களித்ததற்கீடாமேல்சகத்திர
மதொன்றற்கொன்] றெருக்கு நீலகிவில்லமத்தந்தும்பைகுசைவன்
னிகாயுருவி

(இ-பொ-ரை).

சிவபெருமானுக்கு அன்போடும் அபிஷேகம்செய்தால் கோடி தலை முறைகளிலுள்ள உறவினரோடும் கயிலாயத்திற்பொருந்திவாழ்வான் தன் ஞலிபயிர்செய்த ஒரு வெள்ளெருக்கம்பூவைத்தரித்துப் பூசித்தால் பதின்கழஞ்சு சுவர்ணத்தை அந்தணர்களுக்குத்தானஞ் செய்ததற்குச்சமானமாகும் அல்லாமலும் அலரி வில்வம் கருஊமத்தம் தும்பை தருப்பை வன்னி நாயுருவி ஆகிய இலைகளைத்தரித்துப் பூசித்தால் ஒன்றுக்கொன்று ஆயிரம் பங்கதிகமாகும் எ-று (௧)

அல்லியினலராயிரமதிலலங்கலமைத்தரன்முடியினிற்சூடின் னல்லனுய்ப்பெறுவன் பாகதிமத்தை நடுவிராவேளையிற்சாத்திற் செல்லனுய்ச்சிவலோகத்தினிற்சேர்வன் திருக்கரமஞ்சரித்தகடா லல்லல்போம் பதினுன்காந்திதியதனிலருச்சனை செயிற்பதஞ்சேர் வன்-எ-று

(இ-பொ-ரை).

ஆயிரங்கரு நெய்தல் புஷ்பங்களால் மாலை தொடுத்துச்சிவபெருமானுக்குச் சாத்தினால் நல்ல பரகதியடைவான் அல்லாமலும் அர்த்தராத்திரியில் கருஊமத்தம் புஷ்பத்தை ச்சாத்தினால் சிவலோகத்திற்பொருந்தி வாழ்வான் அதுவுமல்லாமல் சதுர்த்தசியில் அழகிய நாயுருவியின் பத்திரத்தைச்சாத்திப்பூசித்தால் சிவபெருமானது திருவடிகளிற்பொருந்துவான் எ-று (௰)

குங்குலு வெய்யுங்கூட்டி நற்றீபங்கொடுத்தொருமதிபணிக்தேத்தித் றங்கமாஞ்சாலோகம் பெறுவ னெய்ச்சுடரிடிற்பரகதியடைவன் இங்கினம்பகுத்துச் சொலவெனிலெளிதில்லெம்பெருமான் செயலீதைப்] பொங்கஉணர்ந்தம் பூஜைகள் புரிவோர் புகழொடுமேரனடிசேர்வார்.

(இ-பொ-ரை).

குங்குலியமும் நெய்யுங்கலந்து ஒருமாத பரியந்தம் சிவபெருமானுக்குத் தூபத்திருப்பணி செய்தால் சாலோகபதவியைப் பெறுவான் அல்லாமலும் பசுவினெய்யினால் விளக்குவைத்தால் நல்ல பரகதியடைவான் இதுவன்றிச்சிவபெருமானது செயல்களை இன்னமும் விவரித்துச்சொல்லுவோமென்னில் எளிதில் அடங்கக்கூடியதல்ல ஆதலால் இதை ஆராய்ந்து சிவபூசைசெய்பவர்கள் சிவபெருமானது திருவடிகளிற்சேர்ந்து வாழ்வார்கள் எ-று (௰௧)

வேறு.

பாவலனெம்பானுவமருப்போதலங்கலெனச்சூடிப்பாலித்தாளு
மாவலனெம்முத்தரசகுலப்பெருமான் மகிமையிது மங்கைபாகன்
கோவினதிக்கரையலைவமாபுனிதமடமீது மிகுகுணமாய்க்கூறு
மாவலசையருமினிதாயுரைப்பவருமரனடிக்கீழ்வாழ்வர்மன்னோ

(இ-பொ-ரை).

பாவலனுமியான்பாடிய இச்சரிதையை வாசனையுடையமாலையாகச் சூடிக்காத்தருளாநின்ற முத்தரசகுலப்பெருமானது சரிதமாகிய இதை அப்பரமசிவனெழுந்தருளியிருக்கும் ஆலயத்திலும் நதிக்கரையிலும் நிறைந்த கூட்டங்களிலும் பரிசுத்தமான திருமடமுதலான இடங்களிலும் சேர்ந்துவிருப்பத்துடன் கேட்பவர்களும் இனிதாகச்சொல்வோர்களும் பாபவினைகளினின்று நீங்கி அப்பெருமானது திருவடித்தாமரையை அடைந்து வாழ்ந்திருப்பார்கள் எ-று-மன்னோ-அசை (௰௨)

மாரிகுறைவறப்பொழிக மன்னுயிர்க்கின்பம் பொலிகமறையுண்டாக] வாரிபுனைமண்ணிறைவர்நீதாலோங்கப்பெரியோரும் வாழ்கவன்பாய்ச்] சீரிலதிமுத்தரசகுலப்பெருமான் பதம்பணியுந்திணைகள் மல்க] வாரிலைநாயகன் பூசைசிறக்கவரனடியார்கடழைக்கவன்றே

(இ-பொ-ரை).

மழையானது மாதமும்மாரி பெய்க ஆன்மாக்களுக்கெல்லாஞ் சுகம்பெருக நான்கு வேதங்களுமோங்க பூமியின் கண்ணே நீதியோடும் அரசியற்றும் அரசர்களது செங்கோல் முறைமை மேலுமேலும் விருத்தியாக பெரியோர்கள் யாவரும் வாழ்ந்திருக்க முத்தரசகுலப்பெருமானது திருவடிகளை வணங்காநின்ற குலங்களெல்லாம் பெருக சிவபூசையானது சிறந்து விளங்க ஆலயத்தைச்சிருத்தஞ்செய்கின்ற அடியார்களும் நன்றாய் வாழ்ந்திருக்கக்கடவர்கள் எ-று (௰௯)

சிவபூஜைச்சருக்கம் முற்றிற்று.

ஆக சிறப்புப்பாயிரம் உள்பட சருக்கம் ௰௪-க்கு

+திருவிருத்தம் ௲௯௰௪+

விட்டிலாபுரத்தலப்புராணம்





உ

விட்டிலாபுரம்

# விநாயகர்பதிகம்.

காப்பு.

பதிகம் விதித்துப் பரவுங் கணபதிமேற்
பதிகம் விதித்துப் பரவவே—மதமொய்
சிரத்தானைடையோதி சித்திமிகவேயருளும்
ஸ்ரீத்தானடி வணங்குவாம்.

ஆசிரிய விருத்தம்.

பந்தமணி வரத்தினங்களிழைத்திப்
பளீர்பளீரென மகுடமும்
பால்போல் வெண்ணீறும் நெற்றியிற்றிலதமும்
பரிவொழுகு கருணைவிழியுஞ்

சொந்தமணி மறைதந்த சிந்தூரப்பவளவாய்ச்
சோதியிருகுண்டலமுகத்
துங்கமுங் கோடுமொரு பாரதம் வரைந்தவர்
தும்பிக்கையின் பெருமையுங்
கந்தமணிமார்பின் முன்னூலுமரை நாலுமிகு
கனகவத்திரமுமலர்கள்
கமகமென வீசுமிருபாத தண்டைக்கொலுசு
கல்கலென சரசரெனவே
வந்தமணியே நந்திமைந்தனே சந்ததமும்
வரதனேயுனை நம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (க)

பாடிப் படிக்கவறியேன் கலைகள் கற்றிலேன்
பகருவதையுங் கேட்டிலேன்
பத்தியுடனின்பதம் வணங்குமுறை யறிகிலேன்
பவமின்னதென வறிகிலேன்
நாடிப்புரக்குமெய் யறிகிலேன் றருமமொரு
நாளும்புரிந்தறிகிலேன்
நம்பனடியாருக்கு மடியார்க்கு மடியார்க
ணற்பணியையுந் தேடிலேன்
ஓடிப்பிழைக்கும்வகை யேதுமறியேனெனக்
குதவுபவராருமறியேன்
உத்தமமகத்துவ மிகுத்தகன சித்தமுண
ருத்திரையளித்தமுத்தே
வாடித்தியங்கு மடியேனுக்கு வகைபுகலும்
வரதனே யுனைநம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (உ)

மன்னவர்கள் விண்ணவர்கள் மாரிஷிகள் கின்னரர்கள்
  மகபதி குபேரனந்தி
மதிபானு கதிவாயு வருணரணன் சுருதி
  மருவுவாணி சிவையோடினம்
எண்ணிலா யாவர்க்குமொரு தந்தையாகியெங்
  கெங்கும் புரக்குமுதலே
யீசனிறை காதிலுபதேசமது பேசியவோ
  ரின்பமே யெங்க டேவே
பண்ணவர்க்கின் சிறைகொண்ட திண்ணசுரர் குடிமுடி
  படீரென வெடிக்க கொடியிற்
படவொருவேல் மடமடென விடமுடிகன் கடகடென
  படியுருள வடல்செய் சுப்பிர
மணியவேளெண்ணியவோர் கன்னிமுனமறுகான
  வாதனையுனை நம்பினேன்
வட்டமிலை புகழுமொரு விட்டிலா புரமுறையு
  மாமணியே ஞானபரமே (௫)

அலைசுவற மலைபொடிய நிலைநெரிய புழுதியெழ
  வரிமறையவரர்வெருவவே
யரிபரிகள் கரிகபடை ணிலைகுலையா யெங்கெங்கு
  மசிதனுவேல் சமுதாடுசேர்
பலகருவி விடுவிடென ரணபேரி மடமடென
  பணிலமது பம்பம்மெனப்
பீபகெண வெகுளிமிக தகதகென விழியெரிய
  படபடென மீசையாடச்
சலசலென வேதிட்டி கைகொட்டி தோள்தட்டி
  சம்சம்மெனக்கிட்டியே
சங்காரஞ்செய்வந்த மாசிங்க ரவணன்
  றசமுடிகள் சிதறவென்றே

மலர்மகளை மருவியருள் வலவனரு மருகனே
வரதனே யுனை நம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியேஞானபரமே (௪)

நில்லாத காயமிதை யெல்லுமே பேணலை
நிலையிலொரு பிரபிடம்போய்
நின்றுமன மஞ்சிரவருஞ் சொல்பணியுஞ்செய்தே
நிதிபெறுகு முன்னவரிடஞ்
சொல்லாத சொற்களெல்லாங் கேட்டுமடியைச்
சுமப்பதுவு மொருகடமையோ
தொல்லுலகி லென்வறுமை சொல்லவுங் கூடுமோ
தூய்யனே யென்முகம் பொன்
இல்லாத குறையந்தோ வதனால்மயங்கியா
னிப்பாடு படமுடியுமோ
எல்லாமறிந்து மருளாதெனை தருமமோ
வேழைமேலென வருமமோ
வல்லோனா நீ கருணையுள்ளோனாநீசால
வரதனே யுனை நம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (௫)

எல்லாம் படைத்தவனீ யெல்லாம் புரப்பவனீ
யெல்லா மழிப்பவனா நீ
எண்பத்தொன்கு நூறாயிரத் தோற்றங்க
ளெவ்வுயிரும் விழியொழியு நீ
பொல்லாத வம்புனிலு வன்பனென மானிலம்
புகலவைத் தாள்பவனா நீ
பொங்குமிகுவேதங்க ளறியுமொரு புத்தியைப்
பூராய்க் கெடுப்பவனா நீ

இல்லாதிரப்பனை யாசனுக்கிடவு நீ
யிரந்தண்ணவைப்பவனு நீ
எந்தையேயுந்தனல விந்தைகளை யம்மம்மா
வேழையான் சொல்லவெளிதோ
வல்லோனெனும் பெயருனக்கன்றி யார்க்குளசொல்
வாதனே யுனை நம்பினேன்
வட்டகிலே புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (சு)

மானிலந்தன்னிலே மெய்யான தெய்வ நீ
மற்றுமொரு தெய்வமுண்டோ
மாறாத்துயரங் கடாதவன் பிணிகள்
மற்றுமுள வறுமையோடுஞ்
சூனியம் பேய்பில்லி வஞ்சனை நோய்வுதல்
தொலையாத மாகருமமுஞ்
சூழ்புவியில் வருபகையு மென்னுளுமெதிரியாய்த்
தோன்று சத்திராதிவாதந்
தானேபரந்தோடுமே யிவையெலாமுனது
தாள்பணியு மன்பருக்குத்
தவறாத கல்வியுங் குறையாத செல்வமுந்
தந்தாளு மென்னய்யனே
வானவர்கள்பரவு முருகோன்மகிழ் சகோதரா
வாதனே யுனை நம்பினேன்
வட்டகிலே புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (எ)

கூடிக்குலாவி விளையாடி பொருள்கவர்மாதர்
கொடியவலையிற் சிக்கியே
கூசாது பொய்யேசி வீணருறவே தேடி
குறையான சொற்கேற்றே

வேடிக்கையாகத் திரிந்துன்று மெய்யடியை
வேண்டாத பாவியர்க்கு
வீணுளிழப்பதுவு முனதுசெயலேயன்றி
வினையேது பவமேதுகாண்
தேடிப்பிடிக்குமெம தூதர்வருமுன்வந்து
தெரிசனந் தந்தாளுவாய்
தெரியாத சிறுவன்யா னறியாமலேசெய்த
தீவினைகள் கோடியெனினும்
வாடிக்கை செய்பிழைகள் பெற்றோர் பொறுப்பர்பார்
வரதனே யுனை நம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (௮)

எத்தனைவிதஞ் செப்பியுஞ் சித்தமுருகவிலை
யேயித்தனைகோபமேன்
எந்தையே யுன்றந்தை வெந்தையான் மொத்துண்டு
மெங்கெங்குமே யிரந்துண்
டத்தையும் மெத்தக்குடத்தியர்கள் மாதவநீ
தத்தையுந் திருடிமத்தால்
அடியுண்ட வுபமாம னடையையுங் குறமகளை
யணுசன்வதுவைசெய்தது
முத்துமலையத்துவச னத்தியருள் புத்திரியு
முழுநீலியுனதாயென
முழுதும்புகன்றனே வாளுலு மிதுபொய்யோ
மொழிவாயெனக்கு நிசமே
மத்தகரிவத்திரனை சித்தமது வைத்தெனையாள்
வரதனே யுனை நம்பினேன்
வட்டநிலை புகழுமொரு விட்டலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (௯)

ஆதியா யண்டபிரண்டமு நிறைந்துவிளை
யாடுமெற்புதசொரூபா
அகிலமதி லெனதுகலி யகலமுக மலரவரு
ளார்த்தென கருணைவடிவே ௧
நீதியோ சொல்லீயான் வாதியோ வல்லயிது
நிலையினிற்சொல் சேதியோ
நீயுமறியாததோ யானுமுறையாததோ
நெஞ்சமுருகாததேதோ
சோதியே யேதுமறியாத சிறியேன் சிறிது
சொல்வதுங் கேட்கவிலையோ
சுத்தனேயானுந் தெரிந்ததைக் கத்தினேன்
சும்மாவிருந்திடாதே
வாததியிதேகாரு மாதரவு வேறில்லை
வரதனே யுனை நம்பினேன்
வட்டமில புகழுமொரு விட்டிலா புரமுறையு
மாமணியே ஞானபரமே (௰)

---

பதிகம்

முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

# விட்டிலாபுரம்
# சுப்பிரமணியக்கடவுள்
# பதிகம்.

———(—:o— )———

சீராருமணிமகுடமுடியும்வெண்ணீறுநற்றிலதநுதலுங்கருணையே
செய்விழியுமாறுமுகமும்பவளவாயுமிருசெவியிலொளிர்குழையுமணி
வார்—தாராருமேனியுமிகரீராறுபுயமுங்கறைதருகளபமார்பினூலுஞ்
சங்கையுள செங்கையினிறைந்த வடிவேலும்விபுதருமுனிவரெவரு
காணும்—மோராருசாயுச்சியபதவிதருமொளிர்மலரின்பாதமதில்விளங்கும்
மிசைவாணதண்டையொடுகிண்கிணிபுலம்பவெனுமிருபாலுமுறைந்த
லம்பியாய்—வாராருமுலைவள்ளி தெய்வானைமகிழவலமயிலேறிவரு
முருகனே—வளமினிவழிலகும் விட்டிலாபுரமுறையுமாமணியே
ஞானபரமே (௧)

வேதாகமப்பொருளெனப்புவியும் வானுலகுமெய்யாய்விளங்கு மூத
லே—மிக்கவரர்தேவர் தவரொக்கவடி பணியமனமேவிவருமெவ்வு
யிரையுஞ்—சேதாமன்றிப்புரத்துவருமகிமையுளசித்தனே பரிசுத்
தனே—செங்கைவடி வேலனே யெங்களனுகூலனே தேவியுமையி
ன் பாலனே—ஆதாரமுந்தனிரு பாதாரவிந்தமுனையகமீதிருத்தி நா
ளும்—அஞ்சலிசெயுஞ்சிறியன் வன்சிறுமைபோக்கியெனையாட்கொ
ள்ளவிதுசமயமே—வாதாமிதப்பநீவதேதின்னமீயுனைமின்மயிலேறி
வருமுருகனே—வளமினியவழிலகும விட்டிலாபுரமுறையுமாமணி
யே ஞானபரமே (உ)

இத்தரணிமீதிற்பவித்தகான்முதலாகவிதவகையுமின்மையான
தின்னவிதமென்னவறியாதிடரின்மூழ்கியினியென் செய்வதென்று
ளத்தில்—சித்தங்கிலேசமா யெண்ணுதெலாமெண்ணி நெஞ்சமும்பு
ண்ணாகியே—நீங்காததுயரெலாம் நீகுதற்கானபொருணீயெனவறி
ந்தமுதலாய்—மூத்தைதயனே யுனதுபொற்கழலைநம்பினேன் முன்
னபவைத்தின தடிமையை—முழுதும் புரத்தான்வதுன்கடமையெ
ன்சாதைமுறையோதெடுத்துரைத்தேன்—மத்தமுளயானைமுகனு
க்கினிய செல்வனே மயிலேறிவருமுருகனே—வளமினியவழிலகு
ம் விட்டிலாபுரமுறையுமாமணியேஞானபரமே (௩)

ஒருமாமுகத்திருவில்பெறுமாவிழிப்பருவவுருமாதர்தருமாயையா
லுளமுங்கலைந்தவரின் வலைமுழவதனின் மூழ்கியானுழலாமலுங்கயவரா
ய்—வருமாந்தரொடுகூடியிருமாந்துகல்லோனா மதியாது பேசியேபர
வஞ்செய்துதென்றிசைப்பாலனதுசைச்சிக்கிமனமஞ்சிமிகுவேதனை
தருமாகினையமதில்வீழாமலும்பதவிதருசரவணபவகுகனே
தாருகனைவென்றமரர்கோனினது செங்கோறழைக்கவருள்செய்த
தேவே—மருமாலை புனைவள்ளி திருமேனிகண்மேனமாலாய்மணந்
ததுரையே—வளமினியவழிலகும்விட்டிலாபுரமுறையுமாமணியே
ஞானபரமே (௪)

வாரிபுனைதாரின்மிசைபவமெடுத்தானுறுவயதிற்பாதித்திரா
மற்றைறம்ப தாண்டின்மழவொடு பேதைபாலனென மருவியாடித்

திரிந்தே—ஆரிலா விரும்புமடியினது பசிபிணியும்போடல்லல்மே
விக்கருமயி—ரதுவும்வெளுத்துடலமும் கூனிதொங்கு-சளைதயாயு
ரியதந்தமும்போய்—எரிலதுகண்ணுமூடிப்பீளையொழுகவிதிலீமெர
ய்த்திடக்காதுகெட்—டினியமொழிகுழறிக்கிடந்திறக்கும் பிறவியி
னியானெடுத்திடாதாள்—மாரிபுகழ்கருணை பொழியாறுமுக வேல
னேமயிலேறிவருமுருகனே—வளமினியவழகிலகும்விட்டிலாபுரமு
றையுமாமணியே ஞானபரமே (௫)

அப்புவியிலும்பரொரு பெம்பியநெடுங்கிரியுளழகுகிரிபொதிகையமமங்
கன்புடனுறைந்தருள்புரிந்திலகும்பமுனியாதியிற் செய்தவத்தால்
நம்பியுனதரிதானசெம்பொனடியைச் சூடிநற்குருவெனக்குநீயென்
றுநனே யென்றுருகி நாளுந்துதித்தவருநன்னலையறிந்தன்றுசின்
செம்பவளவாய்திறந்துபதேசமதுசெய்ததின்மையாலம்முனியுமுன்
சீடனெனவே பெயர்படைத் தெவரு மெய்ச்சச் சிறந்தவமுன்கிரு
பையே—வம்பணியும்விம்பமுலை வள்ளிதெய்வானையொடு மயிலேறி
வருமுருகனே—வளமினியவழகிலகும்விட்டிலாபுரமுறையுமாமணி
யே ஞானபரமே (௬)

உறவானசுயபந்துதாய்தந்தைதமக்களோடுற்றமுவாசையுங்கொண்
டோதுபுவிமீதத்தியவீழ்வைவகம்பினேனுண்மைவழியறியாமலே
நற்வாருமலர்மாலைபுனைமார்பனேயன்பர்கள்மனத்துறையீசனே
காதனேயுனதுபதமினையாதமாபாவிகளையெலாம்நீபொறுத்துப்
பிறவாதபதவியதுதந்தாளுமெங்கள்சிவபெருமானளித்தமுதலே
பெருமாட்டனக்கினியமருமானெனச்சுரர்கள்பெட்பாயிறைஞ்சிநாளு
ம்—மறவாதடியார்க்கினிதிருத்தித்துதிக்கவல மயிலேறிவருமுருகனே
வளமினியவழகிலகும்விட்டிலாபுரமுறையு மாமணியேஞானபரமே
(௭)

சந்ததமுமறவாதுசிந்தைதனிலிருத்தியக்கிரெடுத்தர்ச்சிக்கினுந்
தக்கதிருவாலயம்புக்கினும்வெண்ணீறுதனை நெற்றியிற்புனையினுங்
கந்தனெனநாவாலுரைக்கினும்மேலானகலைதயிதனையேசெப்பினுங்

காதாரவாங்கினுங்கொடி தானபவமெலாங்காணுமலோடி விடுமே
என்னைதயேவுந்தனிருபாதமலைதமறவாத வெண்மைபடுசிறுமைகண்டு
ம்—என்னளவு முன்னெஞ்சமுருகாதடுதென்னவினியா ருடனெடுத்து
ரைப்பேன்—வந்தருளெனக்குதவியுனையன்றிவேறில்லைமயிலேறிவ
ருமுருகனே—வளமினியவழகிலகும் விட்டிலாபுரமுறையு மாமணி
யே ஞானபரமே (௮)

தண்ணிலுளவெண்ணிலா முடிமன்னரும்புகழ மணிமாளிகை கட்டி
யே—வடதிசைத்தலைவனிணைசெல்வங்களைப்பெற்றுமாவடிமை ஏ
வல்செய்ய—விண்ணிறைவனிவனெனனவநிலமலைதயாண்டென்ன
வீறுளிளப்பதன்றி—வேறென்ன நன்மையுண்டாராயிலிவ்வாழ்வி
ன் வேடிக்கைமாயமன்றோ—தண்ணிலாவணியுமொரு கண்ணுதலி
ன்மைந்தனே சரவணப்வாகந்தனே—தாசனுனையவழிசெய்யுமனம்
வைத்தெமது தாதையே சோதிமயமே—வள்ளை முளகன்னிகுறவன்
னிதெய்வானையொடு மயிலேறிவரு முருகனே—வளமினியவழகில
கும் விட்டிலாபுரமுறையுமாமணியேஞானபரமே (௯)

இசைதேனுநதிகருப்பஞ் சாற்றினுநதிநெய்யினுநதிதயிருநதியுவ
ரின்நதியுநன்னீருநதிபாலுநதியென்னுமெழுகடலையும் படைத்துக்
கசகாதகப்பலுண்டாக்கியே கடலோடி கலாயேற வைத்தசெயல்
போற்—கழறுமிக்கொடிய பிறவிக்கடலதேழுங்கடந்துய்வதற்கிறை
வனென்—றுசிதமெய்யுதித்த குகனேயடிமையானிங்குணர்ந்த மட்
டும்முனதுபா—லோதினேன் கைவிடலுநீயே விட்டதெனக்குதவி
செய்தாலுநீயே—வசுமதியிலுன்றரியபாதமலைதம்பினேன் மயிலே
றிவருமுருகனே—வளமினியவழகிலகும் விட்டிலாபுரமுறையுமாம
ணியேஞானபரமே (௰)

சுப்பிரமணியக்கடவுள் பதிகம் முற்றிற்று.

—(–:o;–)—





உ

திருச்சிற்றம்பலம்.

# விட்டிலாபுரம்

# முத்துமாலையம்மன்

# பதிகம்.



காப்பு.

மாதனையிலேயுதித்த மானிடர்க்கு வந்ததொரு
வேதனைகளெல்லாம் விலகுமே—சீதநீர
தனைபுரியுமெய்ச்சன் சிவசங்கரனார்மைந்தனெனுங்
கயமுகனைக் கைதொழுதக்கால்

# விட்டிலாபுரம்

## ஆசிரியவிருத்தம்.

தாரணிகுழற்றரளமகுடமொளிர் சுட்டி பிருதாடங்கம் விசிறிமுருகு
ஞ்—சல்லடைக்கொப்பு பில்லாக்கு மூக்குத்திபின்றாலி சவரத்தி
னமாலை—சிரணிசரப்பளி பதக்கமட்டிகைகாறைசெஞ்சி மிக்கி
வளையங்கமோ—திரமொட்டியாணங்கொலு சுதண்டைபாடகத்திசழ
கிமிர்சிலம்பிம்பு—வாரணிந்திடைபிற்புணியணிந்துசெங்குங்கும
திலதமிட்டுவிழியின்—மாமையிட்டெக்கணுநிறைந்த ஜெகசோதி
யாய் மான்மியபடிராமக்தார்—மாரணிந்தாளிலடையுறைந்தருளு மன்
னேயே மாறன்மகளேயாளுவாய்—வளமினியவழகிலகும்விட்டிலாபு
ரமுறையுமாமணியே ஞானவடிவே (க)

பூவாகி வெளியாகி ரவியாகி மதியாகி பொற்புவிண்மீனுமாகிப்—பு
யலாகி வழியாகி யனலாகி வெளியாகி புகலுமாண் பெண்ணுமாகி
ப்—பூவரகி மணமாகி யெவ்வுயிருமாகி பலபொருளாகியருளுமாகிப்
புகழாகி மறையாகி யெங்களுந்தாளுய்ப் புரக்குமொருதந்தையாகித்
தேவர்கியேவரும் பணியவிடையேறிவரு சிவனிடையமர்ந்த வெர
ளிவே—திறல்குரன்மாளவிலைமயவர்கோனும் வாழமிகுசெவ்வேலை
யீன்றவுமையே—வாவாகிருபை சிறிதாவாய் திறந்துமுடிமாறன்
மகளேயாளுவாய்—வளமினியவழகிலகும் விட்டிலாபுரமுறையுமாம
ணியே ஞானவடிவே (உ)

நீயேவிளங்குமெய்யான தெய்வம்படியினிலையன்றி. வேறுமுளதோ
நின்னடியை யொருகாணினைந்தவர் கடுன்பங்ணீங்கிய வருய்யவி
லையோ—தாயேயெனது குறைகடீரென்றியம்புவ தன்செவிக்கி
சையவில்லையோ—தனையனொருபொல்லனெனினுஞ் சிந்திருந்தியரு
டகவுதாய் கடமையில்லையோ—நாயேனையாளுவதுனக்கதிகபாரமோ
காணினிச் சொலவதென்னே ஞாயமில்லையோ மாகணுலமுருகவில்
லையோ சலிலுமினபெற்றதில்லையோ—வாயேழு புரமுஞ்சிறந்தெங்கு
மாயாமோறன்மகளேயாளுவாய்—வளமினியவழகிலகும் விட்டிலாபு
ரமுறையுமாமணியே ஞானவடிவே (ங)





திருச்சிற்றம்பலம்.

விட்டிலாபுரம்

# முத்தரசகுலப்பெருமான்

## பதிகம்.



காப்பு

சீதமதிகொன்றை நதிதிகழுஞ்சடைமுடியா
னீதியரன்பதிகம் நிகழ்த்தவே—தீதகற்றி
மிக்கவரமேயளித்து மேதினியெல்லாம்விளங்குந்
தக்கவிக்கினேசருண்டோன்

# முத்தரசகுலப்பெருமான் பதிகம். உ

## ஆசிரியவிருத்தம்.

வானமதிகொன்றைகங்கை தும்பையறுகரவமுனலார் சடைமவிர்தமு
டியு—மான்மழுதரித்தகரமுங் கருணைவிழியுமுமைமருவி விளையாடு
மார்பும்—வானவருமாலயனுமேவ நிதமேவரும் வணங்குமருணைப்
பாதமும்—மறையே திரண்டவடிவுஞ் சிறந்தலகெலாமா சோதியே
னு நிறைந்து—தானபதியாகிப்புரக்குமொரு தந்தையேதக்கவிடை
யேறுநீதியே—தஞ்சமெனநெஞ்சிலெண்ணி நின்சரணடைந்தவர் சலி
ப்பனையகற்றுமிறையே—மோனர்கணிறைந்து புரியுந்தவமெய்கண்
டவர்கள் முனம்வந்துதோன்றுமுதலே—முத்தர்புகழ்த்தமையமிகத்த
ருமகத்துவமுளமுத்தரசகுலநாதனே (௧)

சேவர்க்கெலாமிறைவனே நிசழுமீசனே செய்யகயிலைவாசனே
செப்புமடியார்க்கென்னும்வரதனே நீலனே திரிபுரமெரித்தபரனே
பாவத்தினைப் பெற்றதுப்பனே மெய்ஞ்ஞானபாலிக்கு மெனதய்ய
னே—பரதநடனஞ்செய்த பங்கயப்பாதனே பணியாணைசமணவாள
னே—பூவம்புதொட்டவலபூவம்பனை வென்ற பொன்னுரு நுதற்கண்
ணனே—புகழாளனே கொடியவிடமுண்டவாயனே புலியுரிவைத
ருமிடையனே—மூவுலகுமேவியரசாளுமிகுநீதனே முதல்வனே ப
வநாசனே—முத்தர்புகழ்த் தமைமிகத்தருமகத்துவமுள முத்தரச
குலநாதனே (௨)

ஓதுநலவீரெழுபுவனமாலயங் கங்கையுன்றேவிமார்தேவியர்—மொரு
மருப்புடைய கரிமுகனுமறுமுகனு மகருறுபழமறைக்குமெட்டா
வேதண்டமாதுமீ மகிழ்ந்திருக்கு மிடமிருவிடைவாகனம் பிறைகம்
மின்பாசமஞ்சூலமாயுதமயன்மாலன் மேகவாகனன் மன்மதன்—சீ
தனெழுபரியனொடு முப்பத்துமுக்கோடி தேவருனதேவல் செய்
வோர்—சேடிமன்னுயிரெலாம்விளையாட்டே செய்துசிலமுடனுறு
மரனே—மோதமிகுகருணையுனேயுனது மகிமைதனை மொழிய
வெளிதோவருளுவாய்—முத்தர்புகழ்த்தமைமிகத் தருமகத்துவமுள
முத்தரசகுலநாதனே (௩)

மாரனகுவங்கிளியிரதமாருதஞ்சலதி மாமூரகதானைமின்றா—வன்
னக்குயில் காளமீனங்கொடிக்கன னல்லவிய சிலைகாணிவண் டு—தா
ரம்புமிவை கொண்டவனிலானமெய ணுஞ்சஞ்சரித்துப் பூங்கணை
தானெய்து விரகமுண்டாக்கியாண்பெண்ணைநலங்கெடுயோடு கூட
வைத்துச்—சிரணியயன்படைப்பையுமிகு விருத்தியதுசெய்து வரு
மன்மதனின்றற்—செவ்வைகவலைமாதர்வலையிற்சிக்கிவாடித்திகைத்து
ழம் வருந்தாமலும்—மூரிக்கடாவியமனுகாமலுஞ்செய்து முழு
துமெனையாளுமிறையே—முத்தர்புகழத்தமைமிகத் தருமகத்துவமு
ளமுத்தரசகுலநாதனே (௪)

மும்பிறப்பிற்செய்தவினை தாய்வயிற்றில்யான் மும்மலவுருக்கொண்
டலை—மோதாழிசூழவனிமீதுற்பவித்தாண்முதலிது வரைக்குமுந்
தன்—கற்பதுமமலரடி வணங்குமுன வறியாதுலைகரமதற்குளாகி
நன்மைதருமெய்தனை மறந்துபுலைகொலைகளவு காணுதுசெய்துலைந்
தேன்—அப்பனே யெப்பவமுமிப்போதகற்றி யெனையாதரித்தாளு
மிறையே—ஆறுமுகனைப்பெற்றவைமுகனைப்பாவுமடியவர்க்கெ
ளிய முதலே—மூப்பணைகலைத்தரியமெய்ப்பதம்வழங்குமொருமோன
குருவேவருகுவாய்—முத்தர்புகழத்தமைமிகத்தருமகத்துவமுளமுத்
தரசகுலநாதனே (௫)

கள்ளுறைமலர்க்கடிதருங்க முமிற்சரியல்காசலைறபுனைந்துகமழக்
கறையிலொளிரினமதியிதென நவிலும் வதனமதிகனிவொழுகுமது
ரமொழியாள்—உன்னக்கருணைபொழியு மொருதா[illegible]யுமப் புகழுமு
மைபாலுறைந்தவரனே—வும்பருலகும் புவியுமப்பொனடி பணியவ
ரு மெய்ப்பற்றகடவுளேயென்—னுள்ளக்கவலையெலாம் விள்ளவிட
மன்றியானுனதிடமெடுத்தெடுத்தே—யோதியும்முனதுமன மென்
னத்தனையேனுமுருகாத தென்னவிதமோ—மொன்னகதி புனைசடையி
ன்வள்ளவேயிதுசமயமொழி வாயெனக்கையனே—முத்தர்புகழத்த
மைமிகத்தருமகத்துவமுளமுத்தரசகுலநாதனே (௬)

பூவுலகிலெண்ணிலா மன்னரடிபணியவொளிர்பொன்முடி புனைந்து
செங்கோல்—புரியுமரவக்கொடியனஞ்சம்விடுகொணாய்ப்பொறுக்க
முடியாததாலே—மாவலவனாவுரில் விளங்குதருமன் றாதுமரபினை
விடுத்ததினிலும்—மாகுருடன்மைந்தனிலைசனாதமர் விளைத்தபுதுமை
தனையறிந்தைதவரும்—பாவமிலையினியென்றுவதிர்நின்றுசமரன்று ப
ண்ணுமாவ் வெற்றிபடையுப்—பாசுபத நல்கென்று வில்கொண்ட
டித்தவொருபார்த்தனுக்குவிரங்கி—மூவுலகுமேபுகழவாலைகபுனை
வாயெனமொழிந்துதவி மின்னுமுதலே—முத்தர்புகழத்தனைமிகத்
தருமகத்துவமுளமுத்தரசகுலநாதனே (௭)

மன்னுலகிலென்னுமுறை பண்ணவராயன்னெடியூமாலொடுவினங்
கெவருமயாம்—வாழ்வதினியேதெனவுருஷ்டிடவிளைந்த கடுவை
முனமருந்தியதனுத்—தின்னங்குறத்தகலகண்டபிரான் வன்பரிருகை
யெடுத்தேதுதிக்க—கருணைமழைபொழியு மிகுவுசிதகுணசீலனே
கந்தாதரக்கடவுளே—மன்னிலொருவன்வலதிகன்னபதிசெய்தரு
மந்தனைபுராயமாக—வாங்கிவிசயன்கணையினலவனு மாயவொருமா
யம்புரிந்துகதியு—முன்னம்வைத்துதவிப்புரத்தாளு மாறங்கமுக்
கண்ணிமணவாளனே—முத்தர்புகழத்தனையமிகத் தருமகத்துவமுள
முத்தரசகுலநாதனே (௮)

சீலமுனமார்க்கண்டனைப்புரத்தெமனைச் சினந்துதைத்திட்ட பாதா
செய்யமழுமானுடையகையாவிறந்தவெண்டிருநீறணிந்த மெய்யா
மாலையணிதோலுமுலைவாலராதிபாலுறையுமாரனை யெரித்த கண்ணா
வணிகர்குலகன்னையர்கள் செங்கைதொட்டும் பொன்னொளிர்வளைய
ல்களணிந்த துய்யா—காலமொரு மூன்றுமறவாதுமுறையோடுனது
கஞ்சமலரடியை நாடிக்—கணபூசைபுரியும்வழிகாட்டிச்சிறந்த பாக
தியுங்கொடுத்தென்னையாள்—மூலகுருவே நினையலாதுகதி வேறி
ல்லை மூர்த்தியே யுனைநம்பினேன்—முத்தர்புகழத்தனையமிகத் தரு
மகத்துவமுள முத்தரசகுலநாதனே. (௯)

## விட்டிலாபுரம்.

மருமலரலர்ந்துகமழ்வனமதுவருந்திமிகு வண்டினமிசைக்கவேழ்
மாபலவு கதலிகளினற் கனியுதிர்ந்ததனின் மதுபெருகி கன்னெல்
விளையுந்—தருமமுள தில்லைதனி லிமையவர்கள் கின்னரர்கள் தவ
முனிவர்மதனிந்திரன்—சரவணபவன் கயமுகன் பிரமன் மாலொடு
சகலருமிகத்தொழுகவே—யருமையுள பாதகடனுஞ்செய்தபாதனே
யடியவர்க்கொரு நீதனே—யற்புதசொரூபனே தற்பராநந்தனே ய
ன்னமயிலேறி வருநன்—முருகனை யெடுத்தினிய மடிதனிலிருத்தி
யினமுலை கொடுத்தாளைமெச்சும்—முத்தர்புகழத்தலையமிகத்தருமத்
திலமுனமுத்தாரசகுலநாதனே. (௯)

### முத்தாரசகுலப்பெருமான்பதிகம்

### முற்றிற்று.

---



உ

சிவமயம்.

# ஸ்ரீதேவாரப்பதிகம்.

## விட்டலாபுரம்

பண்—குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

———((:—o—:))———

பொன்னார்சடைமுடியும்புனல்வெண்பிறைஇதழி
நன்னாகமுமறுகுமணிவாய்ப்புனைபெருமான்
மின்னாருருவானைவிட்டலாபுரத்தானைப்
பன்னாளும்பேணுபவர்வினைப்பற்றறுப்பாரே (௧)

மண்ணாடவரிமையோர்மறைமாதவரினமுங்
கண்ணாயிரமுடையோன்கணமாலயன்தேடும்
வெண்ணீறணிந்தானைவிட்டலாபுரத்தானைப்
பண்ணாய்த்துதிப்பவர்கள்வினைப்பற்றறுப்பாரே (௨)

நறைமாமலர்க்குழலாளன்முத்துமாலையுறத்
துறைமாகருணிதனயுலகெங்கணுநிறைந்தோன்
மிறையைக்கனிவானைவிட்டலாபுரத்தானைப்
பறையுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே (௩)

சேமேழுமாணுக்கிழச்சபையினட
மாடும்பதச்செருக்காலணியானபேரின்ப
வீடுதருவானைவிட்டலாபுரத்தானைப்
பாடுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே (௪)

வாருக்கிசையுந்தனமாதுமையினாயகனை
யாருக்கிணைசொலலாமழியாதகற்கயிலை
மேருக்கிசைந்தானைவிட்டிலாபுரத்தானைப்
பாருக்குளேதொழுவோர்வினைப்பற்றறுப்பாரே (௫)

கருவிலுருவாகிக்காசினியிலேயுதித்துத்
திருவஞ்சியர்மயலிற்சிக்கிமனல்வருந்தி
வெருவுங்குணந்தவிர்த்தாள்விட்டிலாபுரத்தானைப்
பரவுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே (௬)

பூசியணிவானைப்பொய்யிழந்தமெய்ப்பொருளைப்
பூதபதியானைப்புனிதமுளபுண்ணியனை
வேதவடிவானைவிட்டிலாபுரத்தானைப்
பாதமபணிவோர்கள்வினைப்பற்றறுப்பாரே (௭)

பாண்டியனற்புத்திரியாய்ப்புசங்கிளியைமேவுமொரு
காண்டற்கரியானைக்காமன்றனையெரித்தே
மீண்டும்புரத்தானைவிட்டிலாபுரத்தானை
வேண்டுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே. (அ)

மகிவாணிரவிமதிவளிதீமழையாகிச்
சகலவுயிர்கடொறுந்தானாய்நிறைந்தருளும்
மிதியுடையானைவிட்டிலாபுரத்தானைப்
பகருமனமுடையார் வினைப்பற்றறுப்பாரே (௯)

இன்னலொடுபவநோயிற்பிறப்புமாற்றல்
முன்னவனைமாமணியைமுடிவில்லாப்பேரொளியை
மின்னுமணிமுடியான்விட்டிலாபுரத்தானைப்
பன்னுமனமுடையார்வினைப்பற்றறுப்பாரே (௰)

உ

# பிழை திருத்தல்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௮ | ௰௭ | சங்கரனடியிற் | சங்கரன்மணத்திற் |
| ௰௩ | ௨௪ | மதிமுகத்திலத | மதிமுகத்திலதம் |
| ௰௧ | ௨௫ | சேர்க்லீக | சேக்கை |
| ௰௫ | ௰௪ | மனத்தர | மனத்தர் |
| ௨௫ | ௧ | மண்டார்ந்த | மடார்ந்த |
| ௨௫ | ௩ | மினணியும் | மின்னணியும் |
| ௨௬ | ௰௭ | மோவிகோ | மோவி |
| ௨௬ | ௰௮ | முனைக்கோ | முனைக்கோ |
| ௨௯ | ௰௬ | சாலையுந்தனறாற் | சாலையுந்தனறாற் |
| ௩௰ | ௪ | திரன்மணி | திரள்மணி |
| ௩௧ | ௫ | கோகொடுத்த | கோகொடுத்த |
| ௩௧ | ௭ | மாககளொவி | மாக்களொலி |
| ௩௧ | ௭ | யடக்குமாதோ | யடக்குமாதோ |
| ௩௨ | ௰௫ | வளித்தபன்னேர் | வளித்துதயன்னேர் |
| ௩௩ | ௮ | மூலவமு | மூலவும் |
| ௩௬ | ௰௧ | தருமவசந்தம் | தரும்வசந்தம் |
| ௩௯ | ௬ | பொன்னகாப்பதி | பொன்னகர்ப்பதி |
| ௪௪ | ௨௰ | ஆ திருவிருத்தம் (௯௨) | ஆக திருவிருத்தம்-௯௧ |
| ௪௮ | ௨ | பாடிவெமபதி | பாடிவெம்பதி |
| ௫௫ | ௰௪ | ஆ திருவிருத்தம் (௱௧௪) | ஆக திருவிருத்தம்-௱௧௯ |
| ௫௭ | ௰௧ | திதம | துத்தம |
| ௯௧ | ௰௩ | தவருமதாத்து | தேவருமதர்த்து |
| ௱௰ | ௭ | நினைசத | நினைத்த |
| ௱௰௨ | ௫ | வென்மதி | வென்மதி |
| ௱௰௨ | ௬ | பணடிவளிமைழத்த | பணடிவளிமைழத்த |
| ௱௰௨ | ௬ | மூடிமேல் | மூடிமே |
| ௱௰௪ | ௨௫ | ஆக திருவிருத்தப்-௨௱௰௭ | ஆக திருவிருத்தம்-௨௨௭ |
| ௱௰௭ | ௪ | பொனனடி | பொன்னடி |
| ௱௰௮ | ௬ | சுடாமினமணி | சுடர்மின்மணி |

# பிழை திருத்தல்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௱௰௮ | ௮ | தொடுதது | தொடுத்து |
| ௱௨௰ | ௰ | மினமபுரிக்த | மினம்புரிந்த |
| ௱௨௨ | ௨௰ | ஆக திருவிருத்தம் ௨௯௧ | ஆக திருவிருத்தம்-௨௪௧ |
| ௱௩௪ | ௰௪ | இனனுமற் | இன்னுமற் |
| ௱௪௩ | ௰ | மெடுததுற | மெடுத்துற |
| ௱௪௪ | ௮ | காதனினருமை | காதனின்ருமை |
| ௱௪௫ | ௰௫ | தடுததிடை | தடுத்திடை |
| ௱௪௧ | ௮ | செயுமபடி | செயும்படி |
| ௱௯௰ | ௮ | புகழாதவா | புகழாதவர் |
| ௱௯௯ | ௯ | வாரமனறு | வாரமன்று |
| ௱௯௪ | ௰௭ | நினறனை | நின்றனை |
| ௱௯௫ | ௪ | மனறறபத | மன்றற்பத |
| ௱௯௯ | ௰௫ | நினமனை | நின்மனை |
| ௱௯௯ | ௰௭ | பெற்றவண | பெற்றவன் |
| ௱௯௮ | ௰௯ | சமிததோ | சமித்தோ |
| ௱௭௯ | ௭ | கூறகசோயிலிற் | கூறக்கோயிலிற் |
| ௱௭௯ | ௯ | றருக்தனன | திருந்தனன் |
| ௱௮௧ | ௨ | மேல | மேல் |
| ௱௮௩ | ௯ | காவனைகதொணர் | கரவனைக்கொணர் |
| ௱௮௯ | ௰௪ | ஒளததுதித்து | ஒளனத்துதித்து |
| ௱௮௯ | ௰௮ | திக்கவாம | திக்கவரம் |
| ௱௯௭ | ௰௪ | மணாசரும | மணாதரும் |
| ௱௯௮ | ௯ | கசனீள் | காசனீள் |
| ௱௯௮ | ௰ | கடேபணி | கரம் பணி |
| ௱௯௮ | ௨௰ | தசிதனிற | தசிதனிற் |

பிழை திருத்தல் முற்றிற்று.

